

# விஞ்ஞான ஜோதிட நுணுக்கங்களும் தசவித பொருத்தங்களும்

டாக்டர் வை. தட்சிணாமூர்த்தி

ஸ்ரீ திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
அருள் கூர்ந்து இந்த நூலுக்கு,
நூல் ஆசிரியருக்கு இருபதினாயிரம்
வெண் பொற்காசுகள்
மாண்யம் வழங்கியுள்ளமைக்கு நன்றி.

# ஜோதிட நுணுக்கங்களும்
# திருமண,
# தசவிகிதப் பொருத்தங்களும்

## RESEARCH READY RECKONER WITH 39 TABLES

பேராசிரியர், தத்துவ ஞானி, பல்கலை வல்லுநர்

டாக்டர். ***வை.தட்சிணாமூர்த்தி***, எம்.ஏ., பி.எச்.டி.

தமிழ்ப் பேராசிரியர், புனித வளனார் கல்லூரி, திருச்சி

தமிழ்த் துறைத்தலைவர், சரசுவதி நாராயணன் கல்லூரி, மதுரை

இளைஞர் நல நெறியாளர் (ஓய்வு), மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

**ஸ்ரீ ஆனந்த நிலையம்**

29/5, ரங்கநாதன் தெரு, முதல்மாடி,

தியாகராய நகர்,

சென்னை- 600 017.

விலை ரூ. 100/-

# விஞ்ஞான ஜோதிட நுணுக்கங்களும் தசவிகிதப் பொருத்தங்களும்

தத்துவஞானி
டாக்டர் வை. தக்ஷிணாமூர்த்தி

*முதற்பதிப்பு, 2002*

*தாள் 70 GSM Maplitho*

*அச்செழுத்து 12 புள்ளிகள்*

*நூலின் அளவு டெம்மி 1x8*

**விலை ரூ. 100/-**

*வெளியீடு*

**ஸ்ரீ ஆனந்த நிலையம்**
*29/5, ரங்கநாதன் தெரு,*
*முதல் மாடி,*
*தியாகராய நகர்,*
*சென்னை - 17.*
✆ 434 6242

உ

Om Sri Sairam




**Dr. V. Dhakshinamoorthi M.A., Ph.d.,**

Counsellor - Spiritual psychologist,
Scholar in Religion, Philosophy, Yoga,
Meditation, Indian Culture, Gandhism
Student Services & Study Skills
Retd. Professor, M. K. University.

☎ 0452 - 601456
'Tamizagam'
Vellai Pillayar Kovil St.
Somasundaram Colony.
MADURAI - 625 010


# நூன் முகம்

என்னுடைய எழுபதாவது வயதில், இந்நூல் எழுதப்படுகிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக, பாரதத்தும் பிற உலக நாடுகள் அனைத்திலும் சோதிடக் கலையை வளர்த்து வந்துள்ள, மகான்களின் பொன்னான திருவடிகளை வணங்கி இம்முன்னுரையினை எழுதுகிறேன்.

மனோதத்துவ, சமுதாயவியல், இலக்கிய ஆய்வாளனாக, நான் படித்த, சோதிட நூல்கள் பலவற்றுள் கண்ட, அரிய செய்திகள் சிலவற்றை, இவண் தொகுத்துத் தருகிறேன்.

உலகியல் நடைமுறைகளை மனதில் வைத்து, உலகியல் நடைமுறையில் சிறந்த திருமண வாழ்வு அமைய, மணமகள், மணமகன் அவரவர்கள் குடும்பம், அனைத்து அளவில் என்னென்ன நல்லன அமைந்தால் நன்று என்பதனை மணமகன் மணமகள் முதலியோரே கண்டு தெரிந்து கொள்ளுமளவு ஒரு வினாப்பட்டி இந்நூலில் சேர்த்துள்ளேன்.

வாழ்வில், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் உட்பட, அரசியல் வாதிகள் உட்பட, பலரும் திருமணத் தம்பதியருக்கு நல்க விரும்பும் முன் அறிவுரைகளை திருமணத்துக்குக் காத்திருக்கும் பேரன் பேத்திகட்குத் தாத்தாவின் அறிவுரைகள் என்ற தலைப்பில் ஒரு கட்டுரையாகத் தந்துள்ளேன்.

சோதிட விஞ்ஞானம், நாமறிந்து கொள்ளும் அளவுக்கு, எளிதான காரண காரியத் தொடர்புடைய அறிவியல் மரபுகள்படி நமக்கு அறிமுகப் படுத்தப்படவில்லை எனினும், அதன் பயன்பாட்டு மரபுப் பெருமையை மனதில் வைத்து, மணமகன் மணமகள் இருவரின் ஜாதகப் பலன்களை அறிந்து ஒத்துப் பார்த்த பின் தசவிகிதப் பொருத்தம் பார்ப்பது நன்று என்பது நூலில் வலியுறுத்தப்படுகிறது. இது அவசியம் எனவும் நான் கருதுகிறேன்.

மனப் பொருத்தம், குடும்ப உறவு மேன்மை முதலியன எளிதாக அமைந்த திருமணம் தெய்வீகமானது. அவர்கள் விதிவிலக்குப் பெருமை உடையவர்கள்.

பெண் ஜாதகத்தைப் பொருத்தவரை ருது ஜாதகத்தினை மையமாக வைத்தே யாவும் நடத்தல் நன்று.

முகூர்த்த நேரம் வைத்தல், நிஷேதம் என்னும் முதல் இரவு நேரம் வைத்தல் முதலியன பற்றிய இன்றியமையாமை நூலில் வலியுறுத்தப் படுகின்றது. அதற்கான பஞ்சாங்கக் குறிப்புகளும் நூலில் தரப்பட்டுள்ளன.

தசவிதப் பொருத்தம் வாசகரே எளிதாகப் பார்த்துக் கொள்ளும்படி நான்கு பட்டியல்களில் தரப்பட்டுள்ளன. தினப் பொருத்தம் என்னும் நட்சத்திரப் பொருத்தம் பார்க்கத் தகுந்த உடனடி முடிவு தெரிவிக்கும் பட்டி ஒன்று, தசவிதப் பொருத்தம் எது எது அமைகிறது இல்லை என்பது பற்றிய உடனடி முடிவு தெரிவிக்கும் பட்டி ஒன்று, தசவிதப் பொருத்தத்தினை ஐவகைப் பகுப்பாய்வில் எந்தெந்த பொருத்தம் சராசரி பொருத்தம் மிகப் பொருத்தம் என்பன போன்ற செய்திகளை நல்கும் பட்டியல் ஒன்று, பர்செண்டேஜ் என்னும் விழுக்காட்டு முறையில் எந்த நட்சத்திரத்துக்கு எந்த நட்சத்திரம் பொருத்தமுள்ளது என்ற பட்டியலும் சேர்த்து நான்கு பெரும் பட்டியல்கள் உள.

நூலில் சுமார் முப்பத்து ஒன்பது எளிதான பார்வைக்கு ஏற்ற பட்டியல்கள் சேர்க்கப்பட்டுள்ளமை நூலின் சிறப்புகளில் ஒன்று.

சோதிடக் கலையின் உண்மைகளை உணருமாறு உணர்த்திய அமரர் பேராசிரியர், குருநாதர், டாக்டர் மு.வ அவர்கட்கு என் முதல் நன்றி. சென்னை சோதிடப் பேராசான் நாடி. குருந்தப்ப தேசிகர் அவர்கள் தொடர்பு, சோதிட வேட்கையை அதிகரித்தது. கொடுவிலார்பட்டி சுவாமிகளின் சோதிட அன்பர்களின் தொடர்பு அதனை மேலிடச் செய்தது. எனது மாமனார் வேலூர் வே.பா. வேதபுரி, குருநாதர் தெ.பொ.மீ., டாக்டர் மு.வ. ஆகியோரின் அமரத்வ நாள் சென்னை சோதிட வல்லுநர் அமரர் பேராசிரியர் கங்காதரன் நாயர் அவர்கள் கணித்துச் சொன்னபடியே நடந்தது.

பட்டிகள் புரூப் ஒப்பிட்டுப் பார்த்து தந்த திருநகர் ஆசிரியர் இரமேஷ்பாபு எம்.எஸ்.சி., பி.எட்., தம்பதியினருக்கு நன்றி. நூல்கள் பல ஈந்து உதவிய சோதிடர், பொறியாளர் மதுரை. ஆர்.சண்முகசுந்தரம் அவர்கட்கு நன்றி.

இந்தத் தேன் பாட்டிலில் தந்துள்ள ஒவ்வொரு துளி தேனும் பல்வேறு முதிர்ந்த மலர்ச் சோலைகளினின்று சேகரித்தவை. நூலில் சில மாறுபட்ட கருத்துக்கள், கணிதப் பிழைகள் அமையும் வாய்ப்பு படித்த நூல்களின் கருத்து வேற்றுமை காரணமாகவும் எனது புலமைக் குறைவு காரணமாகவும் அரிதாகச் சில இடங்களில் உண்டு. அதற்கு எளிய என்னை மன்னிக்கவும். நல்லன மிகவும் உள.

இந்த நூலில் வரும் செய்திகளின் முன்னோடியாக ஆய்ந்து எழுதியுள்ள மகான்கள் அனைவரின் மலரடிகளையும் வணங்கி, இந்நூலைப் படித்து நல்ல நல்ல திருமணங்கள் அமைய எல்லாம் வல்ல திருவருளை இறைஞ்சி வணங்குகிறேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டு வெளியிடும் புத்தக வித்தகர் உயர்திரு *மணிமேகலை சிதம்பரம்* அவர்கட்கும், அவர்தம் செல்வ மக்கட்கும் எனது அன்பு நன்றிகள். ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடாதிபதி அவர்களின் நன்மதிப்பைப் பெற்ற அவர்கள் புகழ் மேலும் பெருக வாழ்த்துக்கள்.

பணிவன்புடன்,

01-07-2000 வை. தட்சிணாமூர்த்தி

# ஜோதிட நுணுக்கங்களும் திருமண தச விகிதப் பொருத்தங்களும்

# பதிப்புரை

ஒரு பெண் அல்லது ஆண் ஆகியோருக்கு வாழ்க்கைத் துணையை தேர்தெடுப்பது, அவர்களது எதிர்கால வாழ்க்கையையே நிர்ணயிப்பது ஆகும். தற்கால சூழ்நிலைகளினால், வரன்களைப் பற்றி எதுவுமே இப்போது தெரிவதில்லை. தெரிந்து கொள்ளவும் முடிவதில்லை. இத்தகைய நிலையில் ஜோதிடம் என்ற அதி அற்புதமான, வானியல் கலை அனைவருக்கும் பெருமளவில் உதவும். பொதுவாக 10 வித விவாகப் பொருத்தங்களின் அடிப்படையிலேயே, தற்காலத்தில் திருமணங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன. அத்தகைய பொருத்தங்களாவன: 1.தினம், 2.கணம், 3.ரஜூ, 4.யோனி, 5.ஸ்திரி தீர்க்கம், 6.ராசி, 7.ராசி அதிபதி, 8.மகேந்தரம், 9.வசியம், 10.வேதை, நாடி.

மேற்கூறிய தசவிதப் பொருத்தங்களும் பொதுவானவையே. ஒவ்வொரு ஜாதகமும் ஒவ்வொரு விதத்தில் தனிப்பட்டவை ஆகும். ஆதலால், தசவிதப் பொருத்தங்களை மட்டும் இன்றி பெண், பிள்ளை ஆகியோரின் தனிப்பட்ட ஜாதகங்களை ஆராய்ந்து சேர்ப்பதே, சரியான முறை ஆகும்.

**1. லக்னம்:** ஜாதகரின் தோற்றம், வளர்ந்த சூழ்நிலை, குடும்பப் பின்னணி, இயற்கை சுபாவங்கள், இது பொதுவான ஆரோக்கியம்.

**2-ம் இடம்:** வாக்கு, தனம், குடும்பம் என்று குறிப்பிடுகிறது ஜோதிடக் கலை. எதிர்காலம் எவ்விதம் அமையும், சத்தியம் தவறாமல் இருப்பவரா அல்லது பொய் கூறுவதையே மெய் என நினைப்பவரா என்பது பற்றிய இந்த 2-ம் இடத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

**5-ம் இடம் :** இது ஜாதகத்தில் மிகவும் முக்கியமான ராசியாகும். பூர்வ புண்ணியஸ்தானம் என்று ஜோதிடக்கலை விளக்கி உள்ளது. முற்பிறவிகளில் ஜாதகர் செய்துள்ள நற்கர்மங்களை (புண்ணியத்தை) ஜாதகத்தின் 5-ம் இடத்தில் இருந்து ஜாதகங்களிலும் இந்த பூர்வ புண்ணிய ஸ்தானத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துப் பார்ப்பது, பெரியவர்களது பழக்கம். ஏனெனில், எதிர்கால வாழ்க்கையின் இன்ப, துன்பங்கள் இந்த பூர்வ புண்ணிய ராசியின் அடிப்படையிலேதான் அமையும்.

**ஜாதகத்தில் 7-ம் இடம் :(சப்தம ஸ்தானம்)** சரீர சம்பந்தமான சுகத்தைப் பற்றிய அதிக முக்கியமான இதற்கு களத்திர, சயன, காம ஸ்தானம் என ஜோதிடம் விவரிக்கிறது. பெண், பிள்ளை ஆகிய இருவரின் மகிழ்ச்சியான எதிர்கால வாழ்விற்கும், மன நிறைவிற்கும், புத்திர பாக்கியத்திற்கும், இருவரின் அன்னியோன்னியத்திற்கும் இந்த ராசி அடிப்படையாகக் கருதப்படுகிறது.

**ஜாதகத்தில் 8-ம் இடம்:** இது மிக மிக முக்கியமான ராசியாகும். இது ஜாதகரின் ஆயுளைப் பற்றியது. பெண்ணின் ஜாதகத்தில் இந்த 8-ம் இடம் மாங்கல்ய ஸ்தானமும் ஆகிறது. ஒருவருடைய ஆயுட்காலம் எவ்வளவு என்பதை மட்டும் இன்றிக் உடலில் உள்ள நோய்கள் பற்றியும், இதர குறைகள் பற்றியும் இந்த அஷ்டம ஸ்தானத்தில் இருந்து துல்லியமாகக் கண்டுபிடிக்க இயலும்.

ஆராய்ந்து, வரனை நிச்சயித்து நிர்ணயம் செய்தால், அந்தத் தம்பதிகளின் மணவாழ்வு மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

**- பதிப்பகத்தார்**



# I. பிரபஞ்ச இயல் நுணுக்க சோதிடக் கலைகளின் சிறப்பு



## 01. நமது சிறப்பு

எல்லாம் வல்ல கடவுள் மனிதனைப் படைக்கும் போது பல வழிகளில், அவனது பண்புகள், வாழ்வு முறை முதலியவற்றைக் கணிப்பதற் கேற்ற, ***முத்திரைப் பதிவுகளை*** ஏற்படுத்தியுள்ளார். உலக நாடுகளில், சமய வழி வந்த தத்துவ ஞானத்தில், இந்தியாவும் அதன் வழி வந்த பௌத்த திபேத்திய இலாமா நாடும் மிக உயர்ந்த நுணுக்க சோதிட, எதிர்கால சாத்திர ஞானங்களைத் தேக்கி வைத்துள்ள நாடுகள்.

## 02. சோதிட வலி

சோதிடம் பார்ப்பது, எதிர்காலத்தை அறிவது நன்றன்று என்று கூறிய சமயத்தினர், நாட்டவர், ஆள்பவர்கள், அரசியல்வாதிகள், விஞ்ஞானிகள், பகுத்தறிவுவ்ாதிகள், நாத்திகர்கள், சமய ஞானம் அற்றவர், ஏழை, பணக்காரர், துறவிகள், சமயத் தலைவர்கள் - அத்தனை பேரும் நேரடியாகவோ, மறைமுகவாகவோ, இரகஸ்யமாகவோ சோதிட நம்பிக்கை உடையவர்கள்; சோதிடம் பார்ப்பவர்கள்; சோதிடம் பார்க்க விரும்புபவர்கள். விதி விலக்கு மிக அரிது. மனித மனத்தின் பலவீனம், வாழ்க்கைப் பாதையின் கரடு முரடுகள் முதலியன இரகசியமானவை. ஒன்றுக்கும் கவலைப்படாதவர் அன்றாடம் காய்ச்சி தரித்திர நாராயண பிட்சாடனர் ஏழைகள் மட்டுமே.

## 03. பிரபஞ்ச இயல்

பிரபஞ்சத்தின் ஒவ்வொறு கூற்றையும், உயிரினங்களையும், அசையும் அசையாப் பொருள்களையும், பஞ்ச பூதங்களையும், அண்ட சராசரங்களையும் படைத்து, அருளி, காத்து, மறைக்க வேண்டியவற்றை மறைத்து, அழித்து மீண்டும் படைத்து ஐந்தொழில் நாடகத்தை இறைவன் இடையறாது நடத்துகிறான். அவனே அனைத்துக்கும் காரண கருத்தா. ***அவனன்றி ஓரணுவும் அசையாது.*** அவன் அண்டத்திலும் பிண்டத்திலும் ஐந்தொழில் நடத்துகின்றான்.

பல்லாயிரம் கோடி சோதிப் பிரகாச இறைவன், பல்லாயிரம் கண்கள், கைகளைக் கொண்டு பிரபஞ்ச இயலை, நுணுக்கம் தவறாது

நடத்துகிறான். உயிரியல் நிபுணர்கள், மருத்துவர்கள் செயற்கையாக மனிதனின் விந்து சுரோனிதம் வழி சோதனைக் குழாய், குழந்தையை உருவாக்க முடியும். முதல் மனிதனை, முதல் பஞ்ச பூதத்தினை, முதல் உயிரை, பிரபஞ்ச இயல் மூலக் கூறுகளை உண்டாக்கியது, அவற்றின் தன்மைகளை நிர்ணயித்துக் காப்பது கடவுளே; மனிதன் அன்று.

## 04. காலச் சிறப்பு - ஜோதிட நுண்மை

பஞ்சாங்கக் கணிப்பில் காலங்கள் பொய்ப்பதில்லை. அவை விஞ்ஞான வானவியல், நாள் கோள் இயல்கட்குச் சவால் விடுவனவாக உள்ளன. பாரத காலவிதான, காலச் சக்கர ஞானம் பல நூற்றாண்டுகளை முந்திய, பல நூற்றாண்டுகளைக் கடந்த மாணா ஞான அருமை உடையன.

நமது பஞ்சாங்க அடிப்படை, சோதிடக்கலை, ஜாதகக்கலை முதலியன மனித வாழ்வின் ஒவ்வொரு நுணுக்கங்களையும், அவனோடு தொடர்புடையோரின் நன்மை தீமைகளையும் விளக்கும் கால விஞ்ஞானமாகும்.

நாட்டுக்கு, கிரகத்துக்கு, ஊருக்கு, கோவிலுக்கு உலகுக்கு என்றெல்லாம் சோதிடம் கணித்து, பொய்யாது விளக்கிய பிரபஞ்ச இயல் சோதிடர்கள் பாரதத்தும் பிற நாடுகளிலும் இருந்துள்ளனர்; இருக்கின்றனர். ஜாதக சோதிடம் என்பது ஒரு வாழ்க்கைத் திட்ட அடிப்படை.

## 05. நாடி ஜோதிடம்

அன்றும், இன்றும், என்றும் நின்று நிலவும், தெய்வீக மகரிஷிகளான அகத்தியர், சுகர், காகபுஜண்டர், விசுவாமித்திரர், பராசரர், வசிஷ்டர் போன்ற மாமுனிவர்கள், பழங்காலத்திலேயே ஓலைச் சுவடிகளில் எதிர்காலத்தில் பிறக்கப் போகின்றவர்களின் ஜாதகங்களைத் தங்கள் நாடி சோதிட, நாடி கிரந்த ஏடுகளில் குறித்து வைத்துள்ளனர். அடுத்து வரும் நூற்றாண்டுகளில் பிறக்க விருக்கும் மனிதர்களின், ஜாதகங்கள் கூட இந்த நாடிகளில், தேவைப்படும் பொழுது கிடைக்கும். முனிவர்கள் பெயரால் உள்ள நாடிகள் தவிர, சூர்ய நாடி, சந்திர நாடி, குச நாடி, புத நாடி, சுக்ர நாடி, குரு நாடி, சாமி நாடி, இராகு நாடி, கேது நாடி, சர்வசங்கிரக நாடி, பாவ நாடி, துருவ நாடி, சர்வ நாடி, தேவி நாடி முதலிய பல நாடி ஏடுகள் உள. இவ்வேடுகளில், வாழும் மனிதனின் இன்றைய

குடும்பப் பெயர்கள், தொழில், பூர்வ ஜென்மம் இந்த ஜென்மச் சிறப்புகள் முதலியன துல்லியமாகக் குறிக்கப்பட்டுள்ளன. இந்தக் கால வீட்டு எண், தெருப்பெயர், கணவன், மனைவி, பெற்றோர் உட்பட்ட முகவரிகூட அந்தக் கால ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன. திரிகால ஞான முனிவர்கள் இயற்றிய நாடிகள் அவை. தெய்வீகமானவை.

## 06. கைரேகை

மருந்து பாட்டிலில், மருந்தின் மூலப் பொருள் விபரம், காலாவதி தேதி, செய்யப்பட்ட தேதி, மருந்தின் பயன் முதலியன அச்சிட்ட லேபிளில் ஒட்டியிருப்பது போல, வாழும் மனிதனது கையில் அவன் ஜாதகம் முழுவதும் அழியாத ரேகைகளாகப் பதிக்கப்பட்டுள்ளன. பிரபஞ்ச இயல் பிறப்புப் பதிவு வித்தையின் விஞ்ஞான நுட்பத்தை என்னவென்று வியப்பது.

## 07. சாமுத்திரிகா இலட்சணம்

நடமாடும் ம்னிதனின் முகம், கண், மூக்கு, கை, கால், வயிறு, தலைமுடி, காது முதலியவற்றின் வேற்றுமை ஒவ்வொரு மனிதனின் குணாதிசயங்களை எளிதே வெளிக்காட்டும் மகப்பேற்றுப் பிறப்பிலக்கண விஞ்ஞான பிரபஞ்ச இயல் விந்தையாகும். அதன் பெயர் சாமுத்திரிகா லட்சணம்.

## 08. ஞான திருஷ்டி

மாமுனிவர்கள், யோகிகள், சமயச் சான்றோர் முதலியோர், குழந்தையை மனிதனைக் கண்டவுடன் அவன் இயல்புகளை எதிர்காலத்தைப் பழங்காலத்தைப் பகரும் சக்தி பெற்றுள்ளனர். பகவான் சத்திய சாயிபாபா, சேஷாத்ரி சுவாமிகள் போன்ற ஆயிரமாயிரம் தவ சிரேஷ்டர்கள் இத்தகைய ஞான திருஷ்டி உடையவர்களாகும்.

## 09. இன்டர்நெட்

மேற்கண்ட யாவும் பிரபஞ்ச இயல் - தெய்வ காரண திரிகால இன்டர்நெட் செய்திகளாகும். சோதிடக் கலையை நம் நலனுக்கு மரியாதையுடனும் நம்பிக்கையுடனும் ஒல்லும் வழி, வல்லவர் வழி பயன்படுத்திக் கொண்டு நல்லன நாட இறைவன் அருள்புரிவானாக.

# 2. பஞ்சாங்கம்

## 01. பஞ்சாங்கம்

பஞ்ச அங்கங்கள் கொண்டது பஞ்சாங்கம். 1. வாரம், 2. திதி, 3. நட்சத்திரம், 4. யோகம், 5. கரணம் என்ற ஐந்தும், பஞ்சாங்கம் என்னும் காலக் கணிப்பு நூலின் ஐந்து அங்கங்கள்.

## 02. வாரம்

வாரம் என்பது ஞாயிற்றுக் கிழமை, திங்கட்கிழமை, செவ்வாய்க் கிழமை, புதன்கிழமை, வியாழக் கிழமை, வெள்ளிக் கிழமை, சனிக் கிழமை என்னும் ஏழு நாட்கள்.

சமஸ்கிருதத்தில் இவற்றின் பெயர்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு | = | பானுவாரம் | வியாழன் | = | குரு வாரம் |
| திங்கள் | = | ரவி வாரம் | வெள்ளி | = | சுக்கிர வாரம் |
| செவ்வாய் | = | ஸ்திர வாரம் | சனி | = | சனி வாரம் |
| புதன் | = | புத வாரம் | | | |

இவ்வேழு வாரங்களின் பெயர்களும், சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சக்கிரன், சனி என்ற ஏழு கிரகங்களின் பெயரால் அமைந்துள்ளன.

## 03. திதி

திதி என்பது, வளர்பிறை என்னும் பூர்வ பட்சம் என்னும் சுக்கில பட்சம், முதல் திதியான பிரதமை முதல் பௌர்ணமி வரையிலான பதினைந்து நாட்களும், தேய்பிறை என்னும் கிருஷ்ண பட்சம் என்னும் பிரதமை முதல், அமாவாசை வரையிலான அமரபட்சம் பதினைந்து நாட்களும் ஆக முப்பது நாட்கள். தேதி என்ற சொல் திதி என்பதிலிருந்து பிறந்ததே. திதி என்பது சந்திர மையப் பஞ்சாங்க வழியில், ஒவ்வொரு நாளும், சூரிய சந்திர சஞ்சார நிலையில், சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடைப்பட்ட தூரமாகும். இது வளர்பிறை என்ற சுக்கில பட்சம், தேய்பிறை என்ற கிருஷ்ண பட்சம் ஆக இரண்டு வகை ஆகும். சூரியனும், சந்திரனும் ஒன்று சேரும் திதி அமாவாசை ஆகும். அமாவாசை திதியிலிருந்து பௌர்ணமி திதி வரை

சந்திரனுக்கும், சூரியனுக்கும் இடையிலான தூரம் அதிகமாகிக் கொண்டே வரும். அஃதே போல, பௌர்ணமி திதியிலிருந்து, அமாவாசை வரை தூரம் குறைந்து கொண்டே வரும்.

பதினைந்தாம் திதி கிருஷ்ண பட்சம் என்னும், தேய்பிறையின் இறுதியாயின், அமாவாசையும், சுக்கிலபட்சம் என்னும் வளர்பிறையின் இறுதியாயின் பௌர்ணமியும் வரும். சந்திரன் குறையும் பிற்பக்கம் கிருஷ்ணபட்சம் என்னும் தேய்பிறையாகவும், வளரும் முன்பக்கம் சுக்கில பட்சம் என்னும் வளர்பிறையாகவும் வரும். இவற்றின் பெயர்களையும் பலன்களையும் எல்லாப் பஞ்சாங்களிலும் விபரமாகக் காணலாம்.

## 04. நட்சத்திரம்

நட்சத்திரம் என்பது அசுவனி முதலாக, ரேவதி ஈறாகவுள்ள இருபத்தேழும் ஆகும். நட்சத்திரம் இருபத்தேழும் வான வீதியில், வான மண்டலத்தில், கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் வீதியின் இருபத்தேழு மைல் கற்களைப் போன்றனவாகும். இந்நட்சத்திரங்கள் சூரியனைச் சுற்றி வரும் கிரகங்கள் ஆகும். ஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு பாதங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நட்சத்திரத்தையும் அதன் பாதங்களையும் வைத்தே ஒவ்வொரு ராசியும் அமையும். ஒரு ராசியில் 21/4 நட்சத்திரம் அல்லது மூன்று நட்சத்திரங்களின் ஒன்பது பாதங்கள் அமையும். எடுத்துக்காட்டாக அசுவனியின் நான்கு பாதங்களும், பரணியின் நான்கு பாதங்களும், மூன்றாவது நட்சத்திரமான கார்த்திகையின் முதல் பாதமும் ஆக ஒன்பது பாதங்களில் முதல் ராசியான மேஷ ராசி அமையும். இருபத்தேழு நட்சத்திரங்களின் $27 \times 4 = 108$ பாதங்களும் $108 \div 9 = 12$ பன்னிரண்டு ராசிகளாக அமையும்.

## 05. யோகம்

யோகங்கள் 27 ஆகும். விட்கம்பம் முதலாக வைதிருதி ஈறாக வரும் இருபத்தேழும் யோகங்கள். ஆகாயத்தில் வான வீதியில் ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து சூரியனும், சந்திரனும் செல்லும் நேரம் யோகம் எனப்படும். நட்சத்திரங்கள் தொலைவைக் காட்டும் மைல் கற்கள் என்பது போல், யோகம் என்பது செல்லும் கால அளவான நேரத்தைக் காட்டுவது. ஒவ்வொரு யோகத்திற்கும், தனித்தனி குணங்கள், தனித்தனி தன்மைகள் உள்ளன. சுபகாரியங்கள் செய்யும் போது, அதற்குரிய

யோகங்களைப் பார்க்க வேண்டும். அமிர்த யோகம், சித்தயோகம், மரணயோகம் என்ற அமிர்தாதி யோகங்கள் வேறு. இங்கு குறிப்பிடும் விஷ்கம்பம முதலாக, வைதிருதி ஈறாகவுள்ள இருபத்தேழு யோகங்கள் வேறு.

## 06. கரணம்

திதியில் பாதியே கரணம் என்பது. பவம் முதலாக, கிம்ஸ்துக்கினம் ஈறாக பதினொரு கரணங்கள் அமையும். வானவெளியில், ஒரு குறித்த இடத்திலிருந்து, சூரியனும் சந்திரனும் செல்லுகிற மொத்த தூரத்தினைக் குறிப்பது யோகம் என்பர். திதி என்பது வான்வெளியில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் உள்ள தொலைவு. திதியில் பாதியே கரணம். ஒவ்வொரு திதியையும் இரு சம பாகங்களாகப் பிரித்து கரணம் என்பர். எனவே கரணம் திதியைப் போல் இரு மடங்காக ஆவதில்லை. கரணங்கள் எண்ணிக்கையில் பதினொன்றே. அவை பவம், தொடங்கி கிம்ஸ்துக்கினம் வரை பதினொன்றாகும்.

இது போன்று தியர்ச்சியம், நேத்திரம், ஜீவன், வார சூலை, யோகினி, லக்கின இயல்பு, அசசு போன்றன பஞ்சாங்கத்தில் இடம் பெறுவன.

## 07. பஞ்சாங்கப் பலன்கள்

நாள்தோறும், உரிய காலத்தில், அதாவது காலை வேளையில் திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்து பஞ்சாங்க அங்கங்களையும் அறிந்து செயல்படுவது பண்டை மரபாகும். பண்டை அரசாங்கங்களில், காலை, முதல் பணியாக குருவானவர் மன்னர்க்கும் மக்கட்கும் பஞ்சாங்கக் குறிப்பைக் கூறி அதற்கேற்ப அன்றன்றைய செயல்களைத் திட்டமிடுவது மரபு. வள்ளுவன் என்ற பஞ்சாங்கக் கலை வல்லோர் இதனை யானை மீதமர்ந்து முரசறைவித்துக் கூறுவதும் பண்டை மரபு. இவண்

| | | |
|---|---|---|
| 1. | திதியை அறிவதால் | செல்வப் பேறு வரும் |
| 2. | வாரத்தை அறிவதால் | நீண்ட ஆயுள் வரும் |
| 3. | நட்சத்திரத்தை அறிவதால் | பாவம் போகும் |
| 4. | யோகத்தை அறிவதால் | நோய்கள் வராமல் தடுக்கலாம் |
| 5. | கரணத்தை அறிவதால் | சகல கார்ய சித்திகளும் கிடைக்கும் |

## 08. பஞ்சாங்கம் படிக்கவும்

வினாவிடை போட்டிகட்காக, பொது அறிவு நூல்கள் படிப்பது போன்றும், வேலை வாய்ப்பு போட்டித் தேர்வுகட்காக ஆண்டுக் குறிப்புகள் படிப்பது போன்றும், சிறிது நேரம் எடுத்துக் கொண்டு, நிதானமாக, பஞ்சாங்கம் ஒன்றினை எடுத்து வைத்துக் கொண்டு, அதில் என்ன சொல்லியிருக்கிறது, என்னென்ன வகையான செய்திகள் சோதிடம், எண் கணிதம், காலக்கணிதம் போன்ற வாழ்வோடு இயைந்த செய்திகள் உள்ளன என்பதைப் படிப்பது நன்று. பஞ்சாங்கத்தில் மனித வாழ்வில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் சரிவர நடைபெற, கால நேர யோசனைகள், பரிகாரங்கள் முதலியன இடம் பெற்றுள்ளன. திருமணப் பொருத்த அடிப்படை, சுப காரியங்கட்கு நாள் நேரம் குறித்தல், நாடு முழுவதும் உள்ள திருக்கோவில்களில் நடைபெறும் திருவிழா நாட்கள், விடுமுறை நாட்கள் முதலிய பல நற்செய்திகள் உள. சோதிடரையும், ஐயரையும் தேடி அலையாது நாமே பலவற்றை எளிதில் முடிவு செய்யலாம். தினசரி காலண்டரில் வரும் அடிக்குறிப்புக்களும் படிக்கத் தக்கவை.

## 09. நாழிகை - மணி

பஞ்சாங்கங்களில் பஞ்ச அங்கங்கட்கு நேரம் குறிப்பிட்டிருக்கும். நேரம் சிலவற்றில் நாழிகை, விநாடி முறையிலும், சிலவற்றில் இன்றைய மணி நிமிட முறையிலும், சிலவற்றில் இரண்டு வகையிலும் கொடுக்கப்பட்டிருக்கும். அந்த நேரக் குறிப்பு குறிப்பிட்ட நட்சத்திரம், திதி முதலியன அன்றைய நாளில் முடிவடையும் நேரம் என்பது மரபு. அந்த நேரக்குறிப்புக்கு அடுத்த நேரத்தில் அந்த நட்சத்திரம் திதி முதலியன, அடுத்த நிலைக்கு அடுத்த நட்சத்திரத்திற்கு அடுத்த திதிக்குச் சென்று விடுகின்றன என்பது பொருள்

| | | |
|---|---|---|
| ஒரு நாழிகை | = 60 விநாடி | = 24 நிமிடம் |
| 60 நாழிகை | = ஒரு நாள் | = 24 மணி |
| 2½ நாழிகை | = ஒரு மணி | = 60 நிமிடம் |
| ஒரு விநாடி | = 0.24 நிமிடம் | = 14.4 செகன்ட் |
| ஒரு முகூர்த்தம் | = 3¾ நாழிகை | = 90 நிமிடம் |
| 16 முகூர்த்தம் | = ஒரு நாள் | = 24 மணி நேரம் |

## 10. யோக, முக்குண, ஹோரை அட்டவணை

அ. ஒவ்வொரு வார நாளுக்கும், நட்சத்திரப்படி, அமிர்த யோகம், சித்தயோகம், மரணயோகம் முதலியன காட்டும் அமிர்தாதி யோக அட்டவணை.

ஆ. ஒவ்வொரு வார நிலையிலும் - கிழமையிலும் காலை முதல் மறுநாள் காலை வரை சாத்விகம், ராஜசம், தமோ குண வேளைகள் ஒவ்வொரு ஒன்றரை மணி நேர வேளையில், மாறிமாறி வருவதைக் காட்டும் முக்குண வேளை அட்டவணை.

இ. கௌரி பஞ்சாங்கம் என்று குறிப்பிடப்படும், பதினாறு முகூர்த்தங்கள் என்று குறிப்பிடப்படும் ஒவ்வொரு ஒன்றரை மணி நேர வேளையிலும் லாபம், உத்தியோகம், தனம், அமிர்தம், சுகம், ரோகம், சோரம், விஷம் என்பனவாகக் குறிப்பிடும் முகூர்த்த வேளைத் தன்மை அட்டவணை.

ஈ. ஒவ்வொரு கிழமையிலும் அமையும் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி முதலிய பெயர்களில் வரும் நல்வேளைகளான ஹோரைகளைக் காட்டும் ஹோரை கால அட்டவணை.

உ. இராகு காலம், குளிகை, எமகண்டம், அர்த்தப் பிரகரணன் எனப்படும் நால்வர் காலங்கள் பற்றிய அட்டவணை.

ஊ. ஆண்டில் திருமணம் முதலிய சுப காரியங்கள் செய்யத் தக்க நல்ல நேரம் நட்சத்திரம் முதலிய விபரங்கள்

சகல தேவாலய உற்சவங்கள்

நவக்கிரகங்கள், திருமண தசவிகிதப் பொருத்த அடிப்படைகள்.

முக்கிய ஊர்களில் சூரிய உதய அஸ்தமன நேரங்கள்.

சாதகம் கணிக்க உதவும் திசா புத்திகள்

குரு, சனி, நட்சத்திர பலன்கள்

அஷ்டவர்க்கம்

முதலிய நிறைந்த செய்திகள் பஞ்சாங்கத்தில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பஞ்சாங்களின் பக்கங்களைத் திருப்பி படித்துப் பார்த்துப் பயன் பெறுங்கள்.

## 11. பஞ்சாங்கத்தில் வரும் ஐந்தங்களின் பட்டியல்

**வாரம்**

| | | | |
|---|---|---|---|
| 1. ஞாயிறு | - பானுவாரம் | 5. வியாழன் | - குரு வாரம் |
| 2. திங்கள் | - ரவி வாரம் | 6. வெள்ளி | - சுக்கிர வாரம் |
| 3. செவ்வாய் | - ஸ்திர வாரம் | 7. சனி | - சனி வாரம் |
| 4. புதன் | - புதவாரம் | | |

ஒன்பது கிரகங்களில் நிழல் கிரகங்களாகிய ராகு, கேது நீக்கிய பிற ஏழு கிரகங்களின் பெயரால் கிழமைகள் என்னும் வாரம் அமைகிறது.

## 12. ஹோரைகள்

ஹோரை என்பது இராசி, லக்கினம் தொடர்பான இராசிப் பொழுது என்பர். ஞாயிறு முதல் சனி வரை அமைந்த ஏழு நாட்களில் ஒவ்வொரு நாளும் இந்திய வழக்கப்படியான காலை உதயாதி நேரம் முதல் மறு நாள் காலை உதயாதி நேரம் வரையான இருப்பத்தி நான்கு மணி நேரத்தில், சூரியன், சுக்கிரன், புதன், சந்திரன், சனி, குரு, செவ்வாய் ஆகிய ஏழு கிரகங்களும் ஆட்சி செய்யும் நேரத்தைக் கணக்கிட்டு, எந்தெந்த நேரத்தில் நல்ல நேரம் அமைகின்றது என்பதைக் கணக்கிட்டு, எந்தெந்த சுபகாரியங்களை - நற்செயல்களைச் செய்வது நன்று என்ப பஞ்சாங்க நூல் வல்லோரும், சோதிடர்களும் குறிப்பிடுவர். சுபஹோரைகள் பற்றி எளிதில் அறியும் வண்ணம் அமைந்த அட்டவணை ஒன்று இவண் வருகின்றது. எல்லாப் பஞ்சாங்களிலும் இவ்வட்டவணை இடம் பெறுவது மரபு.

ஓரை, ஹோரை என்ற சமஸ்கிருதச் சொல்லிருந்து ஹவர் என்ற மணி நேரத்தைக் குறிக்கும் சொல் வந்ததென்பர். ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வாணிகம் செய்ய வந்த பொழுது, இந்திய சோதிட நிபுணர்களின் அறிவுரைகளைக் கேட்டு, நல்ல நேரம் - நல்ல ஓரைகளைக் கேட்டறிந்து அதன்படியே அவர்கள் செயற்பட்டு வந்தார்கள். நல்ல கிரகங்களின் ஆதிக்கம் இருக்கும் நேரங்களை ஹோரை மூலமாக அறிந்து கொள்ளலாம். பஞ்சாங்கம் குறிப்பிடும் இராகு காலம், எமகண்டம், குளிகை முதலியன நீக்கி, யோகம் முதலியன பார்ப்பது போல **ஹோரை மிகமிக இன்றியமையாதது**. ஓரைகள் கிரகங்கள் ஒன்பதில் இராகு, கேது நீக்கி சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு,

சுக்கிரன், சனி முதலிய ஏழு கிரகங்களின் ஆதிக்கத்தை வைத்தே கணிக்கப்படும். இராகுவும், கேதும் சாயா கிரகங்களாகையால் அவற்றின் பெயரால் ஹோரை இல்லை.

## *சில சுப ஹோரைகள்*

| கிழமை | காலை மணி | பகல் மணி | இரவு மணி |
|---|---|---|---|
| ஞாயிறு | 7½ – 10 | 2 – 4½ | 9 – 12 |
| திங்கள் | 6 – 7 | 12 – 2 | 6 – 9, 10 – 11 |
| செவ் | 10½ – 11 | 12 – 1, 4½ – 6 | 7 – 8 |
| புதன் | 9 – 10 | 1½ – 3, 4 – 5 | 9 – 10, 11 – 12 |
| வியாழன் | 9 – 10½ | 1 – 1½, 4½ – 6 | 6 – 7, 8 – 9 |
| வெள்ளி | 6 – 9 | 1 – 1½, 5 – 6 | 8 – 9, 10½ – 11 |
| சனி | 7 – 7½<br>10½ – 12 | 12 – 1, 5 – 6 | 6 – 7½, 9 – 10 |

## *மேற்கண்ட ஹோரைகளில் செய்யத்தகு சுப காரியங்கள்*

| சுப காரியங்கள் |
|---|
| மருந்து உண்ண, பேட்டி காண, யாத்திரை செய்ய<br>நகை வாங்க, ஆடை அணிய, கடை திறக்க, சிகிச்சை செய்ய,<br>ஆயுதஞ் செய்ய, யந்த்ரம்<br>ஸ்தாபிக்க, கலை பயில, கணிதாரம்பம் செய்ய,<br>பொன் வாங்க, மேலோரைக் காண, கடன்<br>தீர்க்க, வஸ்த்ரம் வாங்க, ஆபரணம் பூண,<br>தொழில் ஆரம்பம் செய்ய, சுபம் பேச<br>ஆயுதம் பழக, யாத்ரை போக, வார்படஞ் செய்ய |

## அட்டவணை – 1

| ஹோரையின் காலங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மணி முதல் வரை | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
| காலை | | | | | | | |
| 6 – 7 | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| 7 – 8 | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு |
| 8 – 9 | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் |
| 9 – 10 | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| 10 – 11 | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் |
| 11 – 12 | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் |
| பிற்பகல் | | | | | | | |
| 12 – 1 | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் |
| 1 – 2 | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| 2 – 3 | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு |
| மாலை | | | | | | | |
| 3 – 4 | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் |
| 4 – 5 | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| 5 – 6 | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் |
| இரவு | | | | | | | |
| 6 – 7 | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் |
| 7 – 8 | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் |
| 8 – 9 | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| 9 – 10 | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு |
| 10 – 11 | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் |
| 11 – 12 | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| நள்ளிரவு | | | | | | | |
| 12 – 1 | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் |
| 1 – 2 | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் |
| 2 – 3 | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் |
| 3 – 4 | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| 4 – 5 | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு |
| 5 – 6 | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் |

*குறிப்பு :*

(1) சூரியன், செவ்வாய், சனி ஓரைகள் கெட்டவை. இந்த மூன்று ஓரைகள் நடக்கும் 1 மணி நேரம் வரையில் எந்த சுபகாரியங்களும் செய்யக்கூடாது.

(2) மற்ற ஓரைகள் சந்திரன், புதன், குரு, சுக்கிரன் ஆகிய நான்கு ஓரைகள் எந்த நற்செயல்களும் செய்ய நன்றானவை.

## 2. திதிகள் மொத்தம் – 30

| | | | |
|---|---|---|---|
| *சுக்லபக்ஷம்* | 5. பஞ்சமி | 11. ஏகாதசி | *குறிப்பு :* |
| *கிருஷ்ணபக்ஷம்* | 6. சஷ்டி | 12. துவாதசி | சுக்லபக்ஷம் திதி–15 |
| 1. பிரதமை | 7. சப்தமி | 13. திரயோதசி | கிருஷ்ணபக்ஷம் திதி–15 |
| 2. துவிதியை | 8. அஷ்டமி | 14. சதுர்த்தசி | மொத்தம் திதிகள் –30 |
| 3. திருதியை | 9. நவமி | 15. பௌர்ணமி | (29.5 நாள் கொண்டது |
| 4. சதுர்த்தி | 10.தசமி | அமாவாசை | சாந்திர மாதமாகும்) |

## 3. நட்சத்திரங்கள் மொத்தம் – 27

| | | | |
|---|---|---|---|
| 1. அசுவனி | 8. பூசம் | 15. சுவாதி | 22. சிரவணம் (திருவோணம்) |
| 2. பரணி | 9. ஆயில்யம் | 16. விசாகம் | 23. அவிட்டம் |
| 3. கிருத்திகை | 10. மகம் | 17. அனுஷம் | 24. சதயம் |
| 4. ரோகிணி | 11. பூரம் | 18. கேட்டை | 25. பூரட்டாதி |
| 5. மிருகசீரிஷம் | 12. உத்திரம் | 19. மூலம் | 26. உத்திரட்டாதி |
| 6. திருவாதிரை | 13. அஸ்தம் | 20. பூராடம் | 27. ரேவதி |
| 7. புனர்பூசம் | 14. சித்திரை | 21. உத்ராடம் | ஆக நக்ஷத்திரங்கள் 27 |

## 4. யோகங்கள் மொத்தம் – 27

| | | | |
|---|---|---|---|
| 1. விஷ்கம்பம் | 8. திருதி | 15. வஜ்ஜிரம் | 22. சாத்தியம் |
| 2. பிரீதி | 9. சூலம் | 16. சித்தி | 23. சுபம் |
| 3. ஆயுஷ்மான் | 10. கண்டம் | 17. வியதிபாதம் | 24. சுப்பிரம் |
| 4. சௌபாக்கிய | 11. விருத்தி | 18. வரியான் | 25. பிரம்மம் |
| 5. சோபனம் | 12. துருவம் | 19. பரிகம் | 26. மாகேந்திரம் |
| 6. அதிகண்டம் | 13. வியாகாதம் | 20. சிவம் | 27. வைதிருதி |
| 7. சுகர்மம் | 14. ஹரிஷணம் | 21. சித்தம் | ஆக யோகங்கள் – 27 |

## 5. கரணங்கள் மொத்தம் – 11

| | | | |
|---|---|---|---|
| 1. பவம் | 4. தைதுலம் | 7. சகுனி | 10. நாகவம் |
| 2. பாலவம் | 5. கரசை | 8. பத்திரை | 11. கிம்ஸ்துக்கினம் |
| 3. கௌலவம் | 6. வனசை | 9. சதுஷ்பாதம் | ஆக கரணங்கள் 11 |

## *அட்டவணை – 2*

| *இராகு, குளிகை, எமகண்டம், அர்த்தப்பிரகரணன் நால்வர் காலங்கள்* | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பகல் | | | | | | | | | | இரவு | |
| கிழமை | இராகு காலம் | | குளிகை காலம் | | எம கண்டம் | | அர்த்தப்பிர கரணன் | | காலன் | | எம கண்டம் | |
| | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை |
| ஞாயிறு | 4½ | 6 | 3 | 4½ | 12 | 1½ | 10½ | 12 | 6 | 7½ | 6 | 7½ |
| திங்கள் | 7½ | 9 | 1½ | 3 | 10½ | 12 | 9 | 10½ | 3 | 4½ | 3 | 4½ |
| செவ்வா | 3 | 4½ | 12 | 1½ | 9 | 10½ | 7½ | 9 | 1½ | 3 | 1½ | 3 |
| புதன் | 12 | 1½ | 10½ | 12 | 7½ | 9 | 6 | 7½ | 12 | 1½ | 12 | 1½ |
| வியா | 1½ | 3 | 9 | 10½ | 6 | 7½ | 3 | 4½ | 10½ | 12 | 10½ | 12 |
| வெள்ளி | 10½ | 12 | 7½ | 9 | 3 | 4½ | 1½ | 3 | 9 | 10½ | 9 | 10½ |
| சனி | 9 | 10½ | 6 | 7½ | 1½ | 3 | 12 | 1½ | 7½ | 9 | 7½ | 9 |

*குறிப்பு :* இராகு காலத்திலும், எமகண்டம் முதலிய காலங்களிலும் குறித்த மணி முதல் குறித்த மணி வரையிலும் சுபச் செயல்களை நீக்க வேண்டும். குளிகை காலத்தில் அசுபச் செயல்களை நீக்க வேண்டும்.

## *அட்டவணை – 3*

### *கிரகப் பிரீதி தான்யங்கள் – பூசனைக்கு*

| எண் | கிரகம் | ப்ரீதி தான்யம் |
|---|---|---|
| 1 | சூரியன் | கோதுமை |
| 2 | சந்திரன் | அரிசி |
| 3 | செவ்வாய் | துவரை |
| 4 | புதன் | பச்சைப்பயிறு |
| 5 | குரு | கடலை |
| 6 | சுக்கிரன் | மொச்சை |
| 7 | சனி | எள் |
| 8 | ராகு | உளுந்து |
| 9 | கேது | கொள்ளு |

# 3. பஞ்சாங்க ஐந்தங்களில் பிறந்த பலன்கள்

## *இருபத்தேழு நட்சத்திரங்களின் பிறந்த பலன் (அ–4)*

ஒருவன், ஒருத்தி பிறந்த நேரத்துக்குத் தக்கபடி, அவர்களுடைய குணங்கள் அமைந்திருக்கும் என்பது சோதிட சாத்திரத்தின் ஓர் அடிப்படைத் தத்துவம்.

| *வ. எண்.* | *நட்சத்திரம்* | *குணங்கள்* |
|---|---|---|
| 1 | அஸ்வினி | எச்செயலையும் செம்மையாகச் செய்து முடிப்பான்.<br>தனவந்தன், நீதிமான், வெற்றி வாய்ப்புடையவர். |
| 2 | பரணி | தன் பெற்றோருக்கு நல்ல பிள்ளையாக நடப்பான்.<br>புகழ் அதிர்ஷ்டம் உடையவன். |
| 3 | கிருத்திகை | சாதுர்யமான பேச்சுத் திறமையைப் பெற்று இருப்பான்.<br>கல்வி, அசடு |
| 4 | ரோகினி | பிறருக்கு உதவி செய்வதில் விருப்பம் உடையவனாய் இருப்பான்.<br>வெற்றி வாய்ப்புகள், புலமை, செல்வம் உடையவன். |
| 5 | மிருகசீரிஷம் | எப்பொழுதும் சுறுசுறுப்பு வாய்ந்தவனாக இருப்பான்.<br>சத்தியவான், தனவானாவான், சுபவான். |
| 6 | திருவாதிரை | எதிலும் கண்ணியம் வாய்ந்தவனாக இருப்பான்.<br>ஐஸ்வரியம், சுயநலவாதி, பற்றாக்குறை உடையவனாவான் |
| 7 | புனர்பூசம் | சிக்கனம் உடையவனாய் இருப்பான். பேராசைக்காரன்.<br>மக்கட்பேறு, செல்வம், நன்றி முதலியன உடையவன். |
| 8 | பூசம் | வழக்கறிஞர்களைப் போல வாதில் வல்லவனாய் இருப்பான்.<br>பக்தி மானும் சுகவாசியுமாவான். |
| 9 | ஆயில்யம் | பகைவருக்கு அஞ்ச மாட்டான், முன்கோபி,<br>ஸ்திரீ துவேஷி. |
| 10 | மகம் | சுற்றுப் பயணங்களில் விருப்பம் உள்ளவனாய் இருப்பான்.<br>உத்தம இயல்புகள், பலவான், ஸ்திரீ வசியன். |
| 11 | பூரம் | கல்வியில் ஆர்வம் உடையவனாய் இருப்பான்.<br>நீதிமான், ஆஸ்திகன். |
| 12 | உத்திரம் | பெண்களிடம் விருப்பம் உள்ளவனாய் இருப்பான்.<br>யோகவான், சுகவான். |

| வ. எண். | நட்சத்திரம் | குணங்கள் |
|---|---|---|
| 13 | அஸ்தம் | குருவினிடத்தில் பக்தி உள்ளவனாய் இருப்பான். ஆஸ்திகன், அறிஞன், மக்கட் பேறுடையான். நிதான பலனுடையவன். |
| 14 | சித்திரை | சிறிது முன் கோபக்காரனாய் இருப்பான். காரியவாதி, ஏழ்மை. |
| 15 | சுவாதி | உணவில் விருப்பம் உள்ளவனாய் இருப்பான். பக்திமான், கலகக்காரன். |
| 16 | விசாகம் | நல்ல நீதிமானாக விளங்குவான். கல்விமான், சண்டைப் பிரியன். |
| 17 | அனுஷம் | புகழைத் தேடிக் கொள்ள விரும்புவான். ஆசாரசீலன், கலாரசிகன், சௌபாக்யம், கல்வி உயர்வு. |
| 18 | கேட்டை | பக்திமானாக விளங்குவான். தற்பெருமை உடையவன், வஞ்சகன். |
| 19 | மூலம் | ஆத்மீகத் துறையில் முன்னேற்றம் உடையவனாக இருப்பான். ஆரோக்யக் குறைவு, கல்வி, சாமர்த்தியம். |
| 20 | பூராடம் | தன்னை, அடுத்தவரைக் காப்பாற்றுவதில் ஆர்வம் உடையவனாய் இருப்பான். செல்வந்தன், உபகாரி. |
| 21 | உத்திராடம் | தன் சுற்றத்தார் நலனில் அக்கறை கொண்டவனாய் இருப்பான். திறமைசாலி, பலவான். |
| 22 | திருவோணம் | எப்போதும் உற்சாகம் உடையவனாய் இருப்பான். பொது நலவாதி, தருமவான். |
| 23 | அவிட்டம் | தியாக குணம் படைத்தவனாய் இருப்பான். கம்பீரவான், அவசரக்காரன், கிரகப்பேறு உடையவர். |
| 24 | சதயம் | பொய் பேச விரும்ப மாட்டான். நல்லவன், பிடிவாதக்காரன் இலக்குமி கடாட்சம், வெற்றி, சுபகரம் உடையவன். |
| 25 | பூரட்டாதி | பிறர் சொல் பொறுக்காதவனாய் இருப்பான். கலைஞன், புகழுடையவன். |
| 26 | உத்திரட்டாதி | நல்லவர்களுக்கு நல்லவனாகவும், பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவனாகவும் விளங்குவான். செல்வந்தன், போகபாக்கியம் திறமை உடையவன். |
| 27 | ரேவதி | பிறர் பேச்சைக் கேட்பவனாக இருப்பான். உடல்நலக் குறைவு. இனிய சுபாவம் முதலியன உடைய சுயநலவாதி. |

# ராசி - நட்சத்திரம் - மாதம் -



கரம்

1. வான வீதியின் சுற்றளவு 360°, ஒரு ராசி 30°
2. நட்சத்திரங்கள் வான வீதியின் 27 மைல் கற்கள்
3. இராசிகள் வான வீதியின் பன்னிரண்டு சமமான பெரும் பகுதிகள்
4. ஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு பாதங்களை உடையது
5. ஒரு பாதம் ஒரு கால் நட்சத்திரம்
6. ஒரு இராசியில் ஒன்பது நட்சத்திர பாதங்கள் அமையும்



## 02. பதினொரு கரணங்களில் பிறந்த பலன்

### அட்டவணை – 5

| வ. எண். | கரணம் | பலன் / குணங்கள் |
|---|---|---|
| 1 | பவ | அச்சம் இல்லாதவனாய் இருப்பான். |
| 2 | பாலவ | பல நற்குணங்களை உடையவனாக இருப்பான். |
| 3 | கௌலவ | நல்ல ஒழுக்கங்களை உடையவனாக இருப்பான். |
| 4 | தைதுலை | உத்தியோகத்தில் ஆர்வம் உள்ளவனாய் இருப்பான். |
| 5 | கரசை | பிற மாதரிடம் பிரியம் உள்ளவனாய் இருப்பான். |
| 6 | வணிசை | இனிக்கப் பேசும் இயல்பு உடையவனாய் இருப்பான். |
| 7 | பத்திரை | எதிலும் விரைவில் சலிப்பு அடைபவனாய் இருப்பான். |
| 8 | சகுனி | நல்ல அறிவாளியாக இருப்பான். |
| 9 | சதுஷ்பாத | தத்துவநூல்களில் விருப்பம் உடையவனாய் இருப்பான். |
| 10 | நாகவ | மிக்க மானம் உள்ளவனாய் இருப்பான். |
| 11 | கிமஸ்துக்கின | உலகியல் விவகாரங்களில் நல்ல நுண்ணறிவு படைத்தவனாகவும், அதே சமயத்தில் யோக மார்க்கத்தில் பற்று உள்ளவனாகவும் விளங்குவான். |

## 03. ஏழு கிழமைகளில் பிறந்த பலன்

### அட்டவணை – 6

| வ. எண். | கிழமை | பலன் / குணங்கள் |
|---|---|---|
| 1 | ஞாயிறு | செல்வம் உடையவனாவான் |
| 2 | திங்கள் | புகழ் உடையவனாவான் |
| 3 | செவ்வாய் | தந்திர புத்தியுடையவனாவான். |
| 4 | புதன் | கல்விமானாக இருப்பான். |
| 5 | வியாழன் | அறநெறியில் விருப்பம் உடையவனாவான். |
| 6 | வெள்ளி | உயர்ந்த செயல்களைச் செய்பவனாவான். |
| 7 | சனி | பிறரை ஏமாற்றும் இயல்புடையவன் ஆவான். |

## 04. இருபத்தேழு யோகங்களில் பிறந்த பலன்

### அட்டவணை – 7

| வ. எண். | யோகம் | பலன்கள் |
|---|---|---|
| 1 | விஷ்கம்ப | உறவினர்களிடம் அன்பு உள்ளவனாய் இருப்பான். |
| 2 | பிரீதி | துணிவு உடையவனாய் இருப்பான். |
| 3 | ஆயுஷ்மான் | ஒழுக்கம் உடையவனாய் இருப்பான். |
| 4 | சௌபாக்கிய | தெய்வ பக்தி உடையவனாய் இருப்பான். |
| 5 | சோபன | மானம் உள்ளவனாய் இருப்பான். |
| 6 | அதிகண்ட | புகழ் உடையவனாய் இருப்பான். |
| 7 | சுகர்ம | புண்ணியங்களைச் செய்வதில் விருப்பம் உடையவனாய் இருப்பான். |
| 8 | திருதி | இனிய சொற்களைப் பேசுபவனாய் இருப்பான். |
| 9 | சூல | கருணை உடையவனாய் இருப்பான். |
| 10 | கண்ட | கர்வம் உடையவனாய் இருப்பான். |
| 11 | விருத்தி | செல்வந்தர்களிடத்தில் நட்பு உடையவனாய் இருப்பான். |
| 12 | துருவ | பெரியோரிடம் பக்தி உடையவனாய் இருப்பான். |
| 13 | வியாகாத | அடிக்கடி வெளியூர் செல்வதில் விருப்பம் உடையவனாய் இருப்பான். |
| 14 | ஹர்ஷண | அறிவாளியாக இருப்பான். |
| 15 | வஜ்ர | வேளாண்மையில் விருப்பம் உடையவனாய் இருப்பான். |
| 16 | சித்தி | எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். |
| 17 | வியதீபாத | பகைவரை ஒடுக்குவதிலேயே ஆர்வம் உள்ளவனாய் இருப்பான். |
| 18 | வரீயான் | உண்மையை மறைப்பதில் திறமை உள்ளவனாய் இருப்பான். |
| 19 | பரிக | பிறரை ஏமாற்றுவதில் கெட்டிக்காரனாய் இருப்பான். |
| 20 | சிவ | பெற்றோர்களைப் பேணுவதில் பிரியம் உள்ளவனாய் இருப்பான். |
| 21 | சித்த | பிறருக்கு அறிவுரைகள் கூறுபவனாய் இருப்பான். |
| 22 | சாத்திய | கலைகளில் வல்லுநராய் இருப்பான். |

## *04. இருபத்தேழு யோகங்களில் பிறந்த பலன் (தொடர்ச்சி)*

| வ. எண். | யோகம் | பலன்கள் |
|---|---|---|
| 23 | சுப | பெண்களிடம் பிரியம் உள்ளவனாய் இருப்பான். |
| 24 | சுப்ர | முன்கோபக்காரனாய் இருப்பான். |
| 25 | பிராம்ய | பிறருக்கு உதவுவதிலேயே நாட்டம் உடையவனாய் இருப்பான். |
| 26 | ஐந்திர | அறிவு படைத்தவனாய் இருப்பான். |
| 27 | வைதிருதி | வலிமை மிக்கவனாய் இருப்பான். |

## 05. பதினைந்து திதிகளில் பிறந்த பலன்

### *அட்டவணை – 8*

| வ. எ. | திதி வளர்பிறை | பலன்கள் | திதி தேய்பிறை | வ. எ. |
|---|---|---|---|---|
| 1 | பிரதமை | எதையும் ஆழமாகச் சிந்தித்துப் பார்ப்பான். | சதுர்த்தசி | 29 |
| 2 | துவிதியை | பொய் பேச வெட்கப்படுவான் | திரயோதசி | 28 |
| 3 | திருதியை | நினைத்த காரியத்தை முடிப்பான். | துவாதசி | 27 |
| 4 | சதுர்த்தி | மந்திர சித்தியில் விருப்பம் உடையவனாய் இருப்பான். | ஏகாதசி | 26 |
| 5 | பஞ்சமி | பெண்களிடத்தில் விருப்பம் உடையவனாய் இருப்பான். | தசமி | 25 |
| 6 | சஷ்டி | செல்வர்களால் விரும்பப்படுவான். | நவமி | 24 |
| 7 | சப்தமி | இரக்கம் உடையவனாய் இருப்பான். | அஷ்டமி | 23 |
| 8 | அஷ்டமி | குழந்தைகளிடத்தில் அன்பு உள்ளவனாய் இருப்பான். | சப்தமி | 22 |
| 9 | நவமி | புகழில் நாட்டம் உடையவனாய் இருப்பான். | சஷ்டி | 21 |
| 10 | தசமி | ஒழுக்கம் மிக்கவனாய் இருப்பான். | பஞ்சமி | 20 |
| 11 | ஏகாதசி | பொருள் ஈட்டுவதில் நாட்டம் உள்ளவனாய் இருப்பான். | சதுர்த்தி | 19 |
| 12 | துவாதசி | புதுமையான தொழில்களில் ஈடுபடுவான். | திருதியை | 18 |
| 13 | திரயோதசி | உறவினர்களோடு ஒட்டி வாழ மாட்டான் | துவிதியை | 17 |
| 14 | சதுர்த்தசி | பிறர் செய்த சிறு தவறுகளையும் மன்னிக்க மாட்டான். | பிரதமை | 16 |
| 15 | பௌர்ணமி | தெளிவான சிந்தனா சக்தி உடையவனாய் இருப்பான். | | |
| | | தன் அறிவையும், ஆற்றலையும் மேலும் மேலும் பெருக்கி கொள்வதிலேயே ஆர்வம் உடையவனாக இருப்பான். | அமாவாசை | 30 |

## பன்னிரண்டு வீடுகட்கான பலன்கள்

***பன்னிரண்டு லக்கினங்களில் ஜாதகன் பிறந்த லக்னம் முதலாக வரும் முதல் வீட்டிலிருந்து பன்னிரண்டு பிரதட்சண வீடு வரை அமையும் பொதுப்பலன்கள். இவண் லக்கினம் என்பது ஜாதகன் பிறந்த நேரத்தைக் குறிப்பதாகும்.***

| வ. எண். | வீடு | பலன்கள் |
|---|---|---|
| 1 | முதல் வீடு | வாழ்க்கையை நிர்ணயிக்கிறது. |
| 2 | 2வது வீடு | தனஸ்தானம், குடும்ப ஸ்தானம், வாக்கு ஸ்தானம் |
| 3 | 3வது வீடு | சகோதர ஸ்தானம் |
| 4 | 4 – ம் வீடு | மாத்ரு சுக ஸ்தானம் |
| 5 | 5 – ம் வீடு | பூர்வ புண்ணியம், புத்திர ஸ்தானம் |
| 6 | 6 – ம் வீடு | சத்துரு ஸ்தானம் |
| 7 | 7 – ம் வீடு | களத்திர ஸ்தானம் |
| 8 | 8 – ம் வீடு | ஆயுள் ஸ்தானம் |
| 9 | 9 – ம் வீடு | பிதுர் பாக்ய ஸ்தானம் |
| 10 | 10 – ம் வீடு | கர்ம, தொழில் ஸ்தானம் |
| 11 | 11 – ம் வீடு | லாப ஸ்தானம் |
| 12 | 12 – ம் வீடு | விரயஸ்தானம் |





# 4. திருமணத்துக்கு நேரம், நாள் குறித்தல்

### 01. திருமணத்திற்கு ஏற்ற மாதங்கள்

சித்திரை, வைகாசி, ஆனி, ஆவணி, தை, பங்குனி. கார்த்திகையும் ஏற்றதென்பர்.

### 02. திருமணம் நடத்த ஆகாத மாதங்கள்

ஒரு மாதத்தில் இரண்டு அமாவாசைகளோ அல்லது இரண்டு பௌர்ணமிகளோ வரும் மாதம் மல மாதம். அம்மல மாதங்களில் திருமணம் செய்வது நன்றன்று.

### 03. திருமணத்துக்கு ஏற்ற பட்சம்

வளர்பிறை என்ற கிருஷ்ண பட்சத்தில் நடைபெறுவது நன்று.

### 04. திருமணத்துக்கு ஏற்ற கிழமை

அ. புதன், வியாழன், வெள்ளி நன்று

ஆ. குருட்டு நாட்கள் என்னும் செவ்வாய், சனி என்ற இரு கிழமைகளிலும்,

இ. ஒற்றைக் கண் நாள் என்னும் ஞாயிறு, திங்கள் இரு கிழமைகளிலும் நன்றன்று.

இன்றைய அளவில், திருமணக்கூடம், ஞாயிறு விடுமுறை முதலியன காரணமாக கிழமைகள் கவனிக்க இயல்வதில்லை. இது போன்றே வேறு பலவும்.

### 05. திருமணத்துக்கு ஏற்ற லக்கினங்கள்

ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், தனுசு, மீனம் என்ற எட்டும் நன்று. சிலர் கும்பம் நன்றென்பர். சிலர் சிம்மம், மீனம் உகந்ததன்று என்பர்.

### 06. திருமணத்துக்கு ஏற்ற திதிகள்

துவிதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, திரயோதசி ஆகிய சுப திதிகள்.

## 07. திருமணத்துக்கு ஏற்ற நட்சத்திரங்கள்

ரோகினி, மிருகசீரிஷம், மகம், உத்திரம், உத்திராடம், அஸ்தம், உத்திரட்டாதி, சுவாதி, அனுஷம், மூலம், ரேவதி ஆகிய சுப நட்சத்திரங்கள்.

## 08. அஷ்டமி நிலை

அஷ்டமி பொதுவாக சுப காரியங்கட்கு விலக்கப்பட்ட திதியாகும். ஆனால், கிருஷ்ண பட்ச (வளர்பிறை) அஷ்டமியன்று திருமணம் செய்யலாம்.

## 09. அமாவாசை

***அமாவாசை*** நாள் பெற்றோருக்குத் தர்ப்பணம் செய்யும் நாள். ஆகையால் ***அன்று திருமணம் செய்வதில்லை.***

**10.** மணமகன் பிறந்த நட்சத்திரத்தன்று திருமணம் செய்தல் கூடாது.

## 11. உதய காலம்

கோதூளி வேளை என்னும் உதய கால லக்கினத்தில் திதி தோஷம் இல்லை.

அபஜித் முகூர்த்த காலம் என்னும் உச்சி வேளையில் நட்சத்திர தோஷம் இல்லை.

தமிழகத்தில் காலை பன்னிரண்டு மணிக்குள் நடத்துவது மரபு. காலை 4.30 நான்கரை மணி முதல் ஆறுக்குள் உதயாதிக்கு முன் செய்யும் மரபும் சிறந்தது.

## 12. குரு பலம்

ஆண் பெண் இருவருக்கும் அல்லது யாராவது ஒருவருக்கு குருபலம் வரும் போது திருமணம் நடத்துவது நன்று. குருவின் இட நிலைக்கு ஏற்ப, திருமண பலன்கள் 12 இடத்துக்கும் கூறப்பட்டுள்ளன.

## 13. ஜாதக சக்கரம் - நல்ல நேரம்

குழந்தைக்கு ஜாதகம் கணிப்பது போல் முகூர்த்த நேரத்துக்கும் ஒரு ஜாதகச் சக்கரம் கணிப்பது நன்று. நல்ல சோதிடர்கள் அறிவர்.

திருமணத்தின் போது தாலி கட்டுதல், பாணிக் கிரகணம் என்னும் சப்தபடி நடந்து அம்மி மிதித்தல் தான் உண்மையான திருமணம். இதற்கான நேரம் சரியாகக் கணிக்கப்பட வேண்டும்.

பெண் அழைக்க, மாப்பிள்ளை அழைக்க, ஆடைகள் வாங்க, பந்தல் போட, நகை வாங்க, புடவை வாங்க, பிரயாணம் செய்ய முதலியவற்றிற்கு ஹோரை அல்லது பட்சி அல்லது கௌரியை வைத்து நல்ல நேரம் பார்த்துக் கொள்ளலாம்.

## 14. திருமணத்துக்கு ஏற்ற அயனம்

உத்தராயணம் உத்தமம் (தை முதல் ஆறு மாதங்கள்)
தட்சிணாயனம் மத்யமம் (ஆடி முதல் ஆறு மாதங்கள்)

**15.** திருமணம் ஆண், பெண் லக்னங்கட்கு ஏற்ற பட்சம் திதி, நட்சத்திரம், லக்கினம் கிழமை முதலியனவற்றைக் காட்டும்படி கீழே தரப்பட்டுள்ளது.

## 16. பட்சமும், திதிகளும் :

சுக்லபக்ஷத்தில் திருதியை, பஞ்சமி, சப்தமி, ஏகாதசி, திரயோதசி நன்றென்பர். சிலர் ஏகாதசிக்குப் பதில் தசமியை நன்றென்பர். 7ம் இடம் சுத்தமாக இருக்க வேண்டும். சிலர் சஷ்டியும், துவாதசியும் நன்று என்பர்.

கிருஷ்ணபட்சத்தில் துவிதியை, திருதியை பஞ்சமி நன்றென்பர்.

திருமண காலத்தில் முகூர்த்த லக்னத்தில் முக்கியமான ஸ்தானங்களில் கிரகங்கள் இருப்பின் அவைகட்குப் பிரீதி செய்ய வேண்டும். தட்சிணை, தாம்பூலத்துடன் கிரக ப்ரீதிக்கேற்ற தான்யத்தைத் தானம் செய்ய வேண்டும்.

## 17. நட்சத்திரங்கள் :

1. ரோகிணி, மிருகசீரிஷம், மகம், உத்திரம் ஹஸ்தம், சுவாதி, அனுஷம், மூலம், உத்திராடம், திருவோணம், உத்திரட்டாதி, ரேவதி - உத்தமம்.
2. அசுவதி, புனர்பூசம், பூசம், சித்திரை, அவிட்டம், சதயம் முதலானவை மத்திமம்.
3. **நட்சத்திரங்கள் தம்பதியர் நட்சத்திலிருந்து 2, 4, 6, 8 ஆக இருத்தல் வேண்டும்.**
4. **கசரமில்லாமல் இருக்க வேண்டும். கசரமென்பது திருமண**

தினத்தில் சூரியன் சஞ்சாரம் செய்கிற நாள் முதலாக, முகூர்த்த தின நக்ஷத்திரம் வரை எண்ணி வந்த தொகையை 9 ஆல் வகுத்தால் மீதம் 3, 4, 5, 9 வந்தால் கசரமாகும். 1, 2, 6, 7, 8 வந்தால் கசரமில்லை.

5. கசரயோக நாட்களில் திருமணம் செய்தால் பெண்ணுக்கு வைத்வ்யத்தை உண்டாக்கும் என்பர்.

6. ஜன்ம நட்சத்திரத்தில் திருமணம் கூடாது என்பது பொதுவிதி. ஆனால் பெண்களுக்கு மட்டில் ஜன்ம நட்சத்திரத்தில் திருமணம் செய்யலாம் என்ற மரபும் உள்ளது. ஜன்ம வாரத்தில் கூடாது.

7. அக்னி நட்சத்திர காலத்தில் திருமணம் செய்யலாம்.

8. தலைமகன், தலைமகள் தலை மாதம் (ஆனி) மூன்றும் ஒன்று சேர இருக்கக் கூடாது; மாறி இருக்கலாம். திருமணம் ஜன்ம ராசியில் செய்வது சிறப்புடையது என்பர்.





# 5. முகூர்த்த நேரத்தின் அவசியம்



## 01. திருமண முகூர்த்த நேர அவசியம்

ஸ்ரீஜனன கால ஜாதகக் கணிப்புக்கான, ஜனன கால தோஷம் இருப்பினும், பெண்களின் ருது ஜாதகத்தில் தோஷம் இருப்பினும், திருமணத்திற்கு முகூர்த்தம் வைப்பது சிறப்பான நேரமாக அமைந்தால், அந்த தோஷங்கள் விலகிவிடும்.

## 02. மாங்கல்ய தாரணம் - பாணிக் கிரகணம்

தாலி கட்டுவது ஒரு மிக இன்றியமையாத சம்பிரதாயமாக இருந்தாலும், பாணிக்கிரகணம் என்று அழைக்கப்படும் சடங்கே திருமணம் நடப்பதைச் சட்டப்படியும், சமயச் சடங்கு வழியிலும், திருமணத்தை உறுதி செய்யும் புனித நிகழ்ச்சியாகும். திருமணத்தில் தாலி கட்டியவுட்ன்; பரிசு வழங்குதல், புகைப் படமெடுத்தல் முதலியவற்றிற்கு முதன்மை தந்து, கடைசியாக ***முகூர்த்த வேளை முடிந்தவுடன், தம்பதியர் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு தீவலம் வரும், ஏழடி எடுத்து வைத்து நடந்து தீவலம் வரும் பாணிக் கிரகணம் என்னும் முக்கிய சடங்கை நடத்துகின்றனர். இது நன்றன்று.***

## 03. பாணிக்கிரகண முக்கியம்

திருமணம் பெற்ற தம்பதியர் ஒற்றுமையாக வாழ பாணிக் கிரகணம் என்ற இந்த நிகழ்ச்சி மிகவும் தேர்ந்தெடுத்த புனித சுப முகூர்த்தத்தில் நடைபெற வேண்டும். பாணிக்கிரகணம் என்பது ஒருவர் கையை ஒருவராகத் தம்பதியர் கைப்பிடித்து தாம் இணைந்தோம் என்பது தேவர், மூவர், மக்கள் உறவினர் சாட்சியாகச் செய்யப்பட்டு உறுதிப்படுவதாகக் காட்டும் புனிதச் சடங்கு.

## 04. முகூர்த்த நேரம்

முகூர்த்தம் என்பது மூன்றே முக்கால் நாழிகை கொண்ட நேரம். 24 மணி நேரத்துக்கு 60 நாழிகை. ஒரு மணி நேரத்துக்கு 2½ நாழிகை. ஒரு முகூர்த்த நேரம் என்பது ஒன்றரை மணி நேரம் என்னும் மூன்றே முக்கால் நாழிகை. இந்த ஒன்றரை மணி நேரத்தில் லக்கினத் தியாச்சியம், திதி தியாச்சியம், நட்சத்திர தியாச்சியம், பிற பஞ்சாங்க சுபங்களைத்

*தேர்ந்து கணித்த சுபவேளை சுமார் அரைமணி நேரம் முதல் ஒரு மணி* வரை கிடைக்கும். இதில் அந்த லக்கினத்துக்குரிய நவாம்சத்தில் சிறந்ததைத் தேர்ந்தெடுத்தால், சுமார் பதினைந்து முதல் **இருபத்தைந்து நிமிட அளவு நேரமே மிகச் சிறப்புடையதாக அமையும். அச்சுப வேளை முகூர்த்த வேளையின் நடு பாகத்தில் அமையும் போது மாங்கல்ய தாரணமும் பாணிக் கிரகணமும் செய்வது, தம்பதியர்க்கு நல்ல வாழ்வினை ஏற்படுத்திக் கொடுத்ததாகும்.**

## 05. நிஷேக நேர முக்கியம்

திருமண வாழ்வில் மணமக்கள் தாம்பத்திய உறவு கொள்ளுவதை நிஷேகம் என்பர். அவசர காலத் திருமணத்தில் திருமணம் காலையில், மாலையில் சாந்தி முகூர்த்தம் என்னும் நிஷேகம் என்ற நிலை ஏற்பட்டு விட்டது. ***சிறந்த மக்கட்பேறு தாம்பத்திய அன்புறவு மலர, நிஷேகத்திற்கும் சிறந்த சுபவேளை*** பார்த்துச் செய்வது இன்றியமையாதது.

நிஷேக வேளை சரியாக அமைந்தால், ஜாதக தோஷம், ருது ஜாதக தோஷம், முகூர்த்த கால தோஷம் முதலியன அடிபட்டு தம்பதியர் வாழ்வில் மகிழ்வு மலரும். நிஷேகத்துக்குத் தனி நாள், தனி நேரம் வைத்தால் செலவாகும் என்று, பணச் செலவைப் பார்ப்பதை விடுத்து, எல்லா தோஷங்களையும் போக்கவல்ல ***தம்பதியர் இருவருக்கும் ஒத்த நாளை சுபவேளையைக் கணித்து இதில் செய்வது நன்று.*** பழங்காலத்தில் கூட்டுக் குடும்பத்தில் தாம்பத்ய உறவு என்பது நன்மக்கட் பேறுக்காக நல்ல நாள் வேளையில் மட்டுமே செய்யப்பட்டு வருகின்ற ஒன்றாக இருந்தது என்பதை மறக்கக் கூடாது.

## 06. குருபலம்

திருமணம் தம்பதியர் இருவருக்கும், அல்லது பெண்ணுக்கு மட்டிலுமாவலு குரு பலம் அமையும் போது செய்வது நன்று. மணமகனுக்குக் குருபலம் பார்க்க வேண்டிய அவசியமில்லை. **திருமண நேரக் கணிப்பில், பொருத்தக் கணிப்பில் பெண்ணுக்கே முதன்மை.**

## 07. நல்ல நேரம் பார்க்கும்பொழுது கவனிக்க வேண்டியவை.

அன்றைய நாள் கரிநாள் ஆக இருத்தல் கூடாது.

திதியில் அஷ்டமி, நவமி, திதிகளைத் தவிர்க்க வேண்டும்.

யோகம் மரணயோக வேளையாக இல்லாமல் சித்த, அமிர்த யோகமாக இருக்க வேண்டும்.

ஓரைகளில் சூரியன், செவ்வாய், சனி ஓரை இல்லாமல் பிற சுப ஓரைகள் வர வேண்டும்.

பஞ்சகங்களில், பொதுவாக அக்கினி, சோர, ரோக பஞ்சகங்கள் நல்ல நேரத்துக்குத் தவிர்க்க வேண்டியவை.

முக்கியமாக கீழ்க்கண்ட பஞ்சகங்களில் கீழ்க்கண்ட சுப காரியங்களைக் கண்டிப்பாக தவிர்க்க வேண்டும்.

**அக்னி, சோர, ரோக பஞ்சகங்கள்:** திருமணம், சீமந்தம், புதுமனை கோலல், குடிபுகுதல் முதலியனவற்றிற்கு ஆகாது.

**மிருத்யு பஞ்சகம் :** பங்குத் தொழில், லிமிடெட் கம்பெனி போன்ற தொழில்கள் ஆரம்பிக்கக் கூடாது.

**அக்னி பஞ்சகம் :** பஞ்சு, பெட்ரோல் பொருள்கள், நூல், துணி வகைகள் மற்றும் வெடி மருந்து சம்பந்தப்பட்ட தொழில்கள் தொடங்கக்கூடாது.

**இராஜ பஞ்சகம் :** அரசு, வங்கி மற்றும் பொதுநிதி நிறுவனங்கள், கடன் வாங்கி நடத்தும் தொழில் தொடங்கக் கூடாது. நிஷ் பஞ்சகங்கள் மிக்க சுபம்.

இராகு காலம், எமகண்ட நேரங்கள் இருக்கக் கூடாது.

**கௌரி பஞ்சாங்கத்தில்** ரோக, சோர, விஷ காலங்கள் இருக்கக் கூடாது. முக்கியமாக அந்த நட்சத்திரக்காரருக்கு அன்றைய நாள் சந்திராஷ்டம் தினமாக இருத்தல் கூடாது.

மேற்கண்டவற்றை அந்தந்த தேதி மற்றும் ஊர்களின் சூரிய உதயாதி நேரத்தை அனுசரித்து கணித்துக் கொள்ளவும். சூரிய உதயாதி நேரம் எல்லாப் பஞ்சாங்களிலும் குறிக்கப்பட்டிருக்கும்.

## 08. திருமணம் கூடத்தக்க தசைகளும், புக்திகளும்

1. ஜாதகனின் 7ம் வீட்டு அதிபனுடன் சுக்கிரன் சம்பந்தப்பட்டால் 7ம் வீட்டுக்காரனின் தசை அல்லது புக்திகளில் நடக்கும்.

2. ஜாதகத்தின் முதல், இரண்டாம் வீட்டுக்காரர்கள் தங்கி இருக்கும் வீட்டின் அதிபரின் தசை அல்லது புக்திகளில் நடக்கும்

3. ஜாதகத்தின் 10ம் வீட்டின் அதிபரின் தசை அல்லது புக்திகளில் நடக்கும்.

4. ஜாதகத்தின் 7ம் வீட்டு அதிபருடன் சேர்ந்திருக்கும் கிரகங்களின் தசை அல்லது புக்திகளில் நடக்கும்.

5. ஜாதகத்தின் 7ம் வீட்டில் அமைந்திருக்கும் கிரகங்களின் தசை அல்லது புக்திகளில் நடக்கும்.

## 09. திருமாங்கல்யம் செய்ய ஏற்ற நாட்கள், நட்சத்திரம் முதலியன

**திருமாங்கல்யம் வாழ்க்கை பந்தத்தின் புனிதச்சின்னம். அது செய்ய நல்ல நேரம் பார்க்க வேண்டியது அவசியம்.**

**நட்சத்திரங்கள்** : பொதுவாக அசுவதி, ரோகிணி, மிருகசீரிஷம், புனர்பூசம், பூசம், மகம், உத்திரம், ஹஸ்தம், சுவாதி, அனுஷம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி முதலியன ஏற்ற நட்சத்திரங்கள். சிலர் மிருகசீரிஷம், உத்திராடம் நன்றென்பர். சிலர் உத்திரட்டாதி வேண்டாம் என்பர்.

**கிழமை** : திங்கள், புதன், வியாழன், வெள்ளி.

**திதிகள்** : பொதுவாக சுக்லபட்ச துவிதியை, திரிதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி நன்று. சஷ்டியும் நன்றென்பர்.

**லக்கினங்கள்** : பொதுவாக ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம். 2, 8ம் இடம் சுத்தமாக இருக்க வேண்டும். தம்பதிகளுக்குச் சந்திரபலம், தாராபலம் இருக்க வேண்டும்.

## 10. வரதட்சிணையா? கன்னிகாதானமா?

கன்னிகாதானமே சிறந்த வெகுமதி. இந்த வெகுமதிக்கு வரதட்சிணை தேவை இல்லை. கன்னிகாதானம் கன்னியின் தந்தை இறந்த ஒரு ஆண்டுக்குள்ளேயே செய்யலாம் என்ற சாஸ்திர அனுமதியே இதன் சிறப்பாகும். எக்காரணம் கொண்டும் பெற்றோர்கள் தம்புதல்வர்கள் திருமணத்திற்கு வரதட்சிணை வாங்கக் கூடாது. பெற்றோர்கள் வரதட்சிணை பற்றி வற்புறுத்தினால் புதல்வர்கள், அவர்கள் வார்த்தையை மீறி வரதட்சிணையை மறுத்து, திருமணம் செய்து கொள்ளலாம் என்பது பெரியோர்களின் வாக்காகும். இது பெற்றோரை மீறின குற்றமாகாது.

திருமணத்தன்று பெண் அணியும் கூரைப்புடவையை ஆச்சாரியனுக்கு தானம் செய்வது மிகவும் சிரேஷ்டம் என்று சில ஞானியர்கள் கூறியுள்ளனர். இது நடைமுறையில் அனுஷ்டிக்க சாத்தியமா என்பதனை நீங்களே முடிவு செய்து கொள்ளலாம்.

சிலர் இக்கூறைப் புடவையை குழந்தை தொட்டில் கட்டுவதற்கும், சீமந்தம் முதலிய சுபகாரியங்களில் பெண் கட்டுவதற்கும் பயன்படுத்த பத்திரமாக வைக்க வேண்டும் என்பர்

# ஆண், பெண் லக்கினத்துக்கு ஏற்ற திருமண முகூர்த்தக் கிழமைகள் நட்சத்திரங்கள்

## அட்டவணை – 9

| ஆண், பெண் லக்னங்கள் | கிழமைகள் | நட்சத்திரங்கள் | லக்னங்கள் |
|---|---|---|---|
| 1 மேஷம் | ஞாயிறு, திங்கள் வியாழன் | ரோகிணி, ஹஸ்தம், திருவோணம், உத்திரம், உத்திராடம் | கடகம், சிம்மம், தனுசு |
| 2 ரிஷபம் | ஞாயிறு, புதன் | பூசம், அனுஷம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி | மிதுனம், கன்னி, மகரம், கும்பம் |
| 3 மிதுனம் | திங்கள், புதன் வெள்ளி | ரோகிணி, ஹஸ்தம், பூரம், திருவோணம், பூராடம், ரேவதி | கன்னி, கடகம், துலாம், மீனம் |
| 4 கடகம் | வியாழன் | விசாகம், புனர்பூசம், பூரட்டாதி | தனுசு, மீனம் |
| 5 சிம்மம் | வியாழன் | விசாகம், புனர்பூசம், பூரட்டாதி | மேஷம், ரிஷபம், விருச்சிகம், தனுசு |
| 6 கன்னி | வியாழன் வெள்ளி | புனர்பூசம், பூரம், பூராடம் | ரிஷபம், மிதுனம், துலாம், தனுசு |
| 7 துலாம் | திங்கள், புதன் | ரோகிணி, பூசம், ஹஸ்தம், அனுஷம், திருவோணம், உத்திரட்டாதி, ரேவதி | மிதுனம், கடகம், மகரம், கும்பம் |
| 8 விருச்சி – கம் | ஞாயிறு, திங்கள் வியாழன் | ரோகிணி, புனர்பூசம், உத்திரம், ஹஸ்தம், விசாகம், உத்திராடம், திருவோணம், பூரட்டாதி | கடகம், சிம்மம், மீனம் |
| 9 தனுசு | ஞாயிறு, புதன் வியாழன் | புனர்பூசம், உத்திரம், விசாகம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி | மேஷம், சிம்மம், கன்னி, மீனம் |
| 10 மகரம் | புதன், வெள்ளி | பூசம், அனுஷம், உத்திரட்டாதி, ரேவதி | ரிஷபம், கன்னி துலாம் |
| 11 கும்பம் | புதன், வெள்ளி | ரேவதி | ரிஷபம், மிதுனம், துலாம் |
| 12 மீனம் | திங்கள், வியாழன் | ரோகிணி, புனர்பூசம், ஹஸ்தம், விசாகம், திருவோணம், பூரட்டாதி | கடகம், தனுசு |

நலந்தாரா பதினொரு நட்சத்திரங்கள்

*அட்டவணை – 10*

| வ. எண் | பிறப்பு நட்சத்திரம் | பாதம் | விளைவு |
|---|---|---|---|
| 1 | அசுவனி | 1 | ஆண், பெண் பிறப்பு தந்தைக்குக் கெண்டம் புத்திரன் கெண்டம் |
| | | 2 | தாய்க்குக் கெண்டம் |
| | | 3 | தன நாசம் |
| | | 4 | சுக சௌக்கியம் |
| 2 | பரணி | 1, 2, 3 | ஆண் பிறந்தால் தந்தைக்குக் கெண்டம் பெண் பிறந்தால் தாய்க்குக் கெண்டம் |
| | | 4 | தோஷமில்லை |
| 3 | ரோகிணி | | ஆண், பெண் எந்த மாதத்தில் பிறந்தாலும், மாமன் கெண்டம். நெய், நல்லெண்ணெய், விளக்-கெண்ணெய், முதலியவற்றை மண் சாணாக்கையில் கூட்டி, வெள்ளி கம்பியை முறுக்கி தலை வழியாகப் போட்டு, கால் வழியாக மூன்று முறை எடுத்து, எண்ணெயில் போட்டு, தாய் குழந்தை இருவரின் உருவத்தையும் அம்மான் எண்ணெய் வழி பார்க்க சாந்தி உண்டாகும். மாலையில் கோவிலில் திருச்சீலை போட்டு இந்த எண்ணெயை விளக்கேற்றி எறித்துக் கோவில் பிரதட்சணம் வருதல் நன்று |
| 4 | பூசம் | | இந் நட்சத்திரத்தில் கடல லக்கினத்தில் குழந்தை எந்த மாதத்தில் பிறந்தாலும்தந்தைக்குக் கெண்டம். |
| | | 2 | ஆண் குழந்தை பிறந்தால் தந்தைக்குக் கெண்டம். பெண் ஆனால் தாய்க்குக் கெண்டம். |
| 5 | மகம் | 1 | குழந்தை பிறத்தல் தந்தைக்கு நன்றன்று. |
| | | 2 | தாய்க்கு நன்றன்று. |
| | | 3 | தன நாசம் |
| | | 4 | சக சௌக்கியம் |
| 6 | உத்திரம் | 1 | குழந்தை பிறப்பது தந்தைக்கு நன்றன்று. |
| | | 2 | ஆண் பிறந்தால் தந்தைக்குக் கெண்டம். |
| | | 2 | பெண் ஆனால் தாய்க்குக் கெண்டம். |
| | | 3, 4 | தோஷம் இல்லை. |

நலந்தாரா பதினொரு நட்சத்திரங்கள்

*அட்டவணை – 10*

| வ. எண் | பிறப்பு நட்சத்திரம் | பாதம் | விளைவு |
|---|---|---|---|
| 7 | அஸ்தம் | 1, 2, 4 | தோஷமில்லை |
| | | 3 | ஆண் ஆனால் தந்தைக்குக் கெண்டம்<br>பெண் ஆனால் அன்னைக்குக் கெண்டம் |
| 8 | சித்திரை | 1, 2, 3 | ஆண், பெண் பிறப்பது தந்தைக்குக் கெண்டம்<br>பெண் ஆனால் தாய்க்குக் கெண்டம் |
| | | 4 | தோஷம் இல்லை. தந்தைக்கு நிம்மதி குறைவு. |
| 9 | பூராடம் | 1, 2, 3, 4 | எந்தப் பாதமாயினும் தனுர் லக்கினத்தில் குழந்தை பிறந்தால் தோஷம் |
| | | 1 | தந்தைக்குக் கெண்டம் |
| | | 2 | அன்னைக்குக் கெண்டம் |
| | | 3 | முதியோர் கெண்டம் |
| | | 4 | அன்னையின் சமதாதாருக்குக் கெண்டம் |
| 10 | உத்திரட்டாதி | 1 | ஆண், பெண் குழந்தை பிறந்தால் தாய்க்குக் கெண்டம். |
| | | 2, 3, 4 | யாருக்கும் தோஷமில்லை. |
| 11 | ரேவதி | 1, 2, 3 | ஆண், பெண் குழந்தை பிறந்தால் யாருக்கும் தோஷமில்லை. |
| | | 4 | தாய், தந்தையர், உடன் பிறந்தவர்க்குக் கெண்டம்.<br>ஆண் ஆனால் தந்தைக்குக் கெண்டம் என்பாரும் உண்டு.<br>பெண் ஆனால் தாய்க்குக் கெண்டம் என்பாரும் உண்டு. |

எல்லாவற்றிற்கும் நல்ல ஜோசியரிடம் கேட்டு பரிகாரம் செய்ய நலமே நடக்கும். அவனன்றி ஓரணுவும் அசையாது.



# 6. பெண், மாப்பிள்ளை முடிவு செய்தபின் நிச்சயதார்த்தம் முதல் குழந்தை உபநயனம் வரை நல்ல நேரம் பார்த்து செய்ய வேண்டிய நற்செயல்கள்



ஸ்ரீ நல்ல நாள், நல்ல நேரம், நல்ல யோகம், நல்ல நட்சத்திரம், நல்ல வேளை, தோஷமில்லா வேளை, முதலிய விவரங்கள் எல்லாப் பஞ்சாங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. நாளும் கோளும் நல்லன ஆற்றும் என்ற நம்பிக்கையில், பெரியோர்களின் துணை கொண்டு தக்கபடி நல்ல நாள், நேரம் முதலியன திட்டமிட்டுச் செயல்படுதல் மிகமிக அவசியம். சோதிட கிரக சிந்தாமணி என்னும் வருஷாதி நூலில் மிக்க விளக்கம் உண்டு.

### திருமணம் தொடர்பானவை

1. நிச்சயதார்த்த நாள் குறித்தல்
2. துணி, அணி, மணி வாங்குதல்
3. திருமாங்கல்யம் செய்தல்
4. குல தெய்வ வழிபாடு
   *(குல தெய்வத்திற்குப் பத்திரிகை வைத்தல்)*
5. மணமகன் இல்லுறை தெய்வ வழிபாடு
   (திருமாங்கல்யம் படைத்தல்)
6. அழைப்பிதழ் விநியோகம்
7. முகூர்த்தக் கால் நடுதல்
8. மணமகள், மணமகன் பயணம்
9. திருமண மண்டபத்தில் அடுப்பூட்டுதல்
10. மணமகன், மணமகள் வரவேற்பு
11. திருமண வைபவங்கள்
    அ. பாலிகை நிரூபணம்
    ஆ. கன்னியா தானம்
    இ. மாங்கல்ய தாரணம் *
    ஈ. பாணிக்கிரகணம் *
    உ. சப்தபதி *
    ஊ. ஆரத்தி
12. மணமகள் கிரகப்பிரவேசம்
13. நிஷேதம் - முதல் இரவு, கர்ப்பதானம்
14. மணமகள் அடுப்பூட்டுதல்
15. மணமக்கள் கோயில் வழிபாடு
16. மறுவீடுகள் பயணம்.

### குழந்தை – மகப்பேறு தொடர்பானவை

1. நிஷேதம்
2. கோயில் வழிபாடு
3. தேன் நிலவுப் பயணம்
4. மகப்பேறு மருந்தூட்டல்
5. பும்சவனம், சீமந்தம், பூமுடித்தல்
6. குழந்தைக்கு நீராட்டு
7. புத்தாடை உடுத்தல்
8. ஆபரணம் அணிவித்தல்
9. பெயர் சூட்டல்
10. தொட்டிலில் இடுதல்
11. திருக்கோயில் செல்லல்
12. கர்ணபூஷணம் - காது குத்துதல்
13. முடி எடுத்தல்
14. அன்னப் பிரசன்னம்
15. எழுத்தறிவித்தல்
16. உபநயனம்

### வழிபட்டு வாழ்த்தத் தக்கவை

17. குழந்தை கவிழ்தல்
18. பல் முளைத்தல்

| நற்செயல்கட்குரிய பஞ்சாங்க நிலைகள் ***(அட்டவணை–11)*** | |
|---|---|
| **மங்களச் செயல் விவரம்** | **1. நட்சத்திரம்** |
| 1.திருமாங்கல்யஞ் செய்தல் | அச், ரோ, மிரு, புன, பூச, மக, உத், ஹஸ், ஸ்வா, அனு, திஓ, அவி, சத, ரேவ |
| 2. திருமணம் | 1. ரோகி, மிரு, மக, உத், ஹஸ், சுவா, அனு, மூல, உத்திரா, திஓ, சத, உத்தரட், ரேவ<br>2. அச், புன, பூச, சித், அவி |
| 3. சாந்தி முகூர்த்தம் நிஷேதம் | 1. ரோகி, உத், ஹஸ், சுவா, அனு, உத்திரா, திஓ, சத, உத்திரட், ரேவ<br>2. அச், மிரு, புன, பூச, சித், அவி |
| 4. பும்சவனம் | அச், ரோஹி, ம்ரு, புன, பூச, உத், ஹஸ், சித், ஸ்வா, அனு, மூல, உத்திரா, திஓ, அவி, சத, உட், ரே. |
| 5. சீமந்தம் | ரோஹி, ம்ரு, புன, பூச, உத், ஹஸ், உத்திரா, திருஓ, உத்தரட், ரேவ |
| 6. தொட்டிலில் குழந்தையை இடுதல் | ரோஹி, திருவா, பூச, உத், உத்திரா, திருஓ, அவி, சத, உத்தரட் |
| 7. காது குத்துதல் | மிரு, திருவா, புன, பூச, உத், ஹஸ், சித், உத்திரா, திஓ, அவி, உத்தரட், ரேவ |
| 8. வித்யாரம்பம் | அச், ரோஹி, ம்ரு, திருவா, புன, பூச, உத், ஹஸ். சித், ஸ்வா, அனு, திஓ, உத்தரட், ரேவ |
| 9. உபநயனம் | அச், ரோஹி, ம்ரு, புன, பூச, மக, உத், ஹஸ், சித், ஸ்வா, அனு, உத்திரா, திஓ, உத்தரட், ரேவ. |
| 10.வாகனமேற | அச், ரோஹி, ம்ரு, புன, மக, உத், ஹஸ், சித், ஸ்வா, அனு, உத்தரா, திஓ, உத்தரட், ரேவ |

## நற்செயல்கட்குரிய பஞ்சாங்க நிலைகள்

| 2. திதி | 3. லக்னம் | 4. சிறப்பு விதி |
|---|---|---|
| 1. துவி, திரு, பஞ், சப், தச, துவா, திர. | ரிஷ, மிரு, கட, கன், துலா, தனு, மீன. | 2ம் இடம் சுத்தம் |
| 2. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, ஏகா, துவா, திர. | ரிஷ, மிது, கட, துலா, தனு, கும். | 3, 6, 11 பாபர் நன்று<br>8ல் குரு பொல்லார்.<br>6, 8ல் புதன் சுக்ரன் கெடுதி<br>2, 3ல் சந்திரன் நன்று<br>7ல் எவருந்தீயர். |
| 3. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, ஏகா, துவா, திர. | 1. மேஷ, கட, துலா, மக<br>2. சுப திருஷ்டியுள்ள மற்ற ராசி நன்று. | 1, 7, 8ல் இடம் சுத்தம்<br>ஜன்ம நக்ஷத்ரத்தில் ஆகாது. |
| 4. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, ஏகா, துவா, திர | மேஷ, ரிஷ, துலா, தனு, மக, கும், மீன. | 3ம் மாதத்தில் செய்தல்<br>8ம் இடம் சுத்தம். |
| 5. திரு, பஞ், சப், ஏகா, திர. | மேஷ, ரிஷ, மிது, கட, கன், துலா, தனு, மக, கும், மீன. | 8, 9ம் இடம் சுத்தி |
| 6. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, ஏகா, த்வா, த்ர. | சுபர் பார்த்த லக்னம் | 8ம் இடம் சுத்தம் |
| 7. துவி, திரு, பஞ், சஷ், சப், துவா, திர. | 1. ரிஷ, கட, கன், துலா, தனு, மீன 2. மேஷ, மக. | 8ம் இடம் சுத்தி, பகலில் இரண்டு திதி.<br>நக்ஷத்ரங்கள் சேரும் தினங்கள் கூடாது. |
| 8. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, ஏகா. | மேஷ, மிது, கட, கன், துலா, தனு, மக, மீன. | 5வது வயதில் நடத்தல்<br>4, 8ம் இடம் சுத்தி |
| 9. துவி, திரு, பஞ், சஷ், சப், தச, துவா, திர. | ரிஷ, மிது, கட, கன், துலா, தனு, மீன. | 8ம் இடம் சுத்தம்<br>உத்தரயாணத்தில் செய்தல் நல்லது. |
| 10.சஷ், ஏகா, பௌ. | ம்ரு, கட, ஸிம், கன், துலா, தனு, மீன. | சூர்ய உதயத்தில் ஏறல் நன்று. |

| நற்செயல்கட்குரிய பஞ்சாங்க நிலைகள் | |
|---|---|
| மங்களச் செயல் விவரம் | 1. நட்சத்திரம் |
| 11. பொன் ஆபரணம் பூணுதல் | அச், ரோஹி, ம்ரு, பூச, ஹஸ், சித், அனு, ரேவ |
| 12. சேரடி உடுத்தல் | அச், ரோஹி, புன, பூச, உத், ஹஸ், சித் |
| 13. புதுமனை கட்ட ஆரம்பம் | ரோஹி, ம்ரு, புன, பூச, மக, உத், ஸ்வா, அனு, உத்திரா, திஓ, சத, உத்தரட், ரேவ. |
| 14. புதுமனை புகுதல் | ரோஹி, ம்ரு, புன, பூச, உத், ஹஸ், அனு, உத்திரா, திஓ, சத, உத்தரட், ரேவ. |
| 15. பிரயாணம் | அச், ரோஹி, ம்ரு, புன, பூச, உத், ஹஸ், அனு, மூல, உத்திரா, திஓ, அவி, சத, உத்தரட், ரேவ. |



நற்செயல்கட்குரிய பஞ்சாங்க நிலைகள்

| 2. திதி | 3. லக்னம் | 4. சிறப்பு விதி |
|---|---|---|
| 11. பஞ், ஷஷ், தச, ஏகா, பௌ, | ரிஷ, மிது, கண், தனு, மீன | சனிக்கிழமை நன்று, இது ஸ்திரீகளுக்கு விசேஷித்தது. |
| 12. துவி, திரு, பஞ், ஸப், தச, ஏகா, துவா, திர, பௌ. | ரிஷ, மிது, கண், வ்ரு, தனு, கும், மீன | 8–ம் இடம் சுத்தி. |
| 13. துவி, திரு, பஞ், ஸப், தச, ஏகா, துவா, திர. | ரிஷ, ஸிம், வ்ரு, கும் | 8, 12ம் இடம் சுத்தி. |
| 14. துவி, திரு, பஞ், ஸப், தச, ஏகா. திர. | ரிஷ, மிது, ஸிம், கன், துலா, தனு, கும், மீன. | குரு, சுக்ர அஸ்தமனமும், வெள்ளி எதிரும் கூடாது. 8, 12–ம் இடம் சுத்தம். |
| 15. துவி, திரு, பஞ், ஸப், தச, ஏகா, திர. | மேஷ, மிது, கட, கன், துலா, தனு, மக, மீன. | சூலம், யோகினி கூடாது. புதன், வியாழன் வெள்ளி நன்று. |



| இருபத்தேழு நட்சத்திரங்களில் செய்யத்தகு நற்செயல்கள் அட்டவணை – 12 | | |
|---|---|---|
| நட்சத் வரிசை எண் | *நட்சத்திரம்* | நற்செயல்கள் |
| 1 | *அசுவனி* | பூமுடித்தல், கர்ப்பதானம், திருமணம், அன்னப் பிராசனம்பெயர் சூட்டல், உபநயனம், வாகனம் வாங்க, வேத சாஸ்திராப்பியாசம், புதிய ஆடையாபரணம் வாங்குதல், அரசு பதவி ஏற்க, கிரகாரம்பம், பொன்னேர்கட்டல், விதை விதைத்தல், தென்னை, பலா, மா முதலிய மரங்கள் வைத்தல், யாத்திரை போக, கிரகபிரவேசம் பசுத்தொழுவம் கட்ட. |
| 2 | *பரணி* | தீர்த்த யாத்திரையில் திதி முதலானவை நடத்தல், முட்செடிகள் நட, கத்தரிக்காய் விதை விதைக்க. |
| 3 | *கிருத்திகை* | செடிகள் வெட்ட, கடன் நீக்க, வாகனம் விற்க, குழந்தைகளுக்கு முடி எடுத்தல். |
| 4 | *ரோகினி* | ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், பெயர் வைத்தல், உபநயனம், கல்வி கற்றல், கிரகப்பிரவேசம், கும்பா பிஷேகம், நவக்கிரக சாந்தி, வியாபாரம், தானியங்கள் இருப்பு வைக்க, கிணறு வெட்ட, வாசல் கால் நட, பத்திரிக்கை வெளியிட, விருந்துண்ண, ஆலய ஆரம்பம். |
| 5 | *மிருகசீரிஷம்* | திருமணம், ருதுசாந்தி, பூமுடித்தல், சீமந்தம், பெயர் சூட்டல், முடிவாங்க, காது குத்த, அன்னம் ஊட்டுதல், உபநயனம், கல்வி ஆரம்பித்தல், ஆபரணம் அணிதல், மனை அமைத்தல், கிராமப்பிரவேசம், தேவதாபிரதிஷ்டை கிரகப்பிரவேசம். |
| 6 | *திருவாதிரை* | சூளைக்கு நெருப்பு இட, சிவபூஜை செய்ய, ஆயுதம் கலை கற்றல். |
| 7 | *புனர்பூசம்* | பூமுடித்தல், சீமந்தம், பெயர்சூட்டல், முடிவாங்க, விருந்து சாப்பிட, காதுகுத்த, உபநயனம், கல்வி கற்றல், பதவி ஏற்றல், வாஸ்து சாந்தி, கிரகப்பிரவேசம், யாத்திரை, வியாபாரம், புதுத்துணி வாங்க, திருமணம், கும்பாபிஷேகம். |
| 8 | *பூசம்* | ருதுசாந்தி, பூமுடித்தல், சீமந்தம், பெயர் சூட்டல், முடி வாங்க, சாஸ்திரம் கலை கற்க, பசு வாங்க, விவசாயம், யாத்திரை, ஆலோசனை சபை கூட, பதவிப் பிரமாணம் ஏற்க, வாஸ்து சாஸ்தி, கரும்பு நட, திருமணம் நடத்த, குடி போக, இரத்தின நகைகளை அணிய. |

| இருபத்தேழு நட்சத்திரங்களில் செய்யத்தகு நற்செயல்கள் | | |
|---|---|---|
| நட்சத் வரிசை எண் | *நட்சத்திரம்* | நற்செயல்கள் |
| 9 | ***ஆயில்யம்*** | ஜெபம் பூர்த்தி செய்ய, நவக்கிரக சாந்தி செய்ய, ஆயுதம் வாங்க. |
| 10 | ***மகம்*** | திருமணம், மந்திரம் கற்க, சந்நியாசி, தவசிகளை தரிசனம் செய்ய. |
| 11 | ***பூரம்*** | ஆயுதப் பிரயோகம் செய்ய, கிரகப்பார்வை நிவர்த்தி செய்ய, அம்பாள் தரிசனம் செய்ய. |
| 12 | ***உத்திரம்*** | கெர்ப்பதானம், பூ முடித்தல், சீமந்தம், பெயர் சூட்டல், அன்னம் ஊட்டுதல், உபநயனம், திருமணம், காது குத்த, வித்தை கற்க, வேத மந்திரம் கற்க, ஆபரணம் அணிய, கிரகப்பிரவேசம், விதை விதைக்க தேவதா பிரதிஷ்டை. |
| 13 | ***அஸ்தம்*** | ருதுசாந்தி, பூமுடித்தல், சீமந்தம், பெயர் சூட்டல், முடிவாங்க, விருந்து சாப்பிட, உபநயனம், திருமணம், சாஸ்திரம் செய்ய, விதை விதைக்க, கும்பாபிஷேகம் செய்ய, கிணறு வெட்ட, நந்தவனம் வைக்க, அரசு அதிகாரி பார்க்க, கிரகப்பிரவேசம். |
| 14 | ***சித்திரை*** | கெர்ப்பதானம், பூமுடித்தல், பெயர் சூட்டல், முடிவாங்க, கல்வி ஆரம்பிக்க, உபநயனம், திருமணம், வாகனம் வாங்க, அபிஷேகம் செய்ய, தேவதாபிரதிஷ்டை செய்ய, கிரகப்பிரவேசம், நிச்சயதார்த்தம், கிணறு வெட்ட, அரசு அதிகாரியைப் பார்க்க, பதவிப்பிரமாணம். |
| 15 | ***சுவாதி*** | கெர்ப்பதானம், பூமுடித்தல், பெயர்சூட்டல், முடிவாங்க, அன்னம் ஊட்ட, ஜோதிடம் கற்க, மருந்து சாப்பிட, புத்தகம், பத்திரிக்கை வெளியிட, நவக்கிரக ஜெபம், விவகார துவக்கம், கர்ம வியாதிகளுக்கு மருந்து சாப்பிட |
| 16 | ***விசாகம்*** | விவசாய, தானியங்கள் அறுக்க, கிணறுகளைச் சீர் செய்ய. |
| 17 | ***அனுஷம்*** | ருதுசாந்தி, பூமுடித்தம், பெயர் சூட்ட, காது குத்த, உபநயனம், ஆபரணம் வாங்க, பதவிப் பிரமாணம், வாகனமேற, கிரகப்பிரவேசம், வாசக்கால் செய்ய, தூண் நாட்ட, தேவதாபிரதிஷ்டை. |
| 18 | ***கேட்டை*** | நகைகளை அழிக்க, ஆயுத வேலைகள் ஆரம்பிக்க, மந்திரம் செய்ய, ஆட்களை நீக்க, கடன் நீக்க, ரத்தின கற்களை நன்கு அலச, வாஸ்து சாந்தி செய்ய. |

| இருபத்தேழு நட்சத்திரங்களில் செய்யத்தகு நற்செயல்கள் | | |
|---|---|---|
| நட்சத் வரிசை எண் | நட்சத்திரம் | நற்செயல்கள் |
| 19 | மூலம் | ருதுசாந்தி, பூமுடித்தல், சீமந்தம், விருந்து உண்ண, வில் வித்தை கற்க, ஆபரணம் அணிய, விவகாரம் பெயர் சூட்டல், உபநயனம், காது குத்த. |
| 20 | பூராடம் | கணக்கு பயில, கரும்பு நட, பழைய கிணறு சீர் செய்ய, புனித ஸ்நானம் செய்ய, புனித திதி செய்ய, பிரயாணம் சென்ற வர. |
| 21 | உத்திராடம் | கெர்ப்ப தானம், பூமுடித்தல், சீமந்தம், பெயர் சூட்ட, காது குத்த, கிராமகிரகங்களில் சங்குஸ்தாபன செய்ய, தேவதாபிரதிஷ்டை, திருமணம், கிரகப்பிரவேசம். |
| 22 | சிரவணம் | ருதுசாந்தி, பூமுடித்தல், விஷ்ணுபலி, நாமகரணம், அன்னம் ஊட்ட, காது குத்த, உபநயனம், விஷ்ணு கும்பாபிஷேகம், வீடு மனை ஆரம்பம்·செய்ய, பந்தல் அமைக்க, ஓம்சாந்தி, பொன்னேர் கட்ட, விதை விதைக்க, திருமணும் நடத்த. |
| 23 | அவிட்டம் | பூமுடித்தல், பெயர் சூட்டல், கல்வி கற்க, இயல் இசை வித்தையைக் கற்க. |
| 24 | சதயம் | கெர்ப்ப தானம், பூமுடித்தல், பெயர் சூட்டல், முடி வாங்க, அன்ன ஊட்ட, உபநயனம், வில்வித்தை கற்க, வாகனம் வாங்க, தேவதா பிரதிஷ்டை, வியாபாரக் கணக்கு முடிக்க, பூமி வாங்க, வீடு வாங்க, தொட்டிலில் குழந்தை வைக்க, புனித யாத்திரை போக. |
| 25 | பூரட்டாதி | பம்பு செட் அமைக்க, மந்திரம் ஜெபிக்க, விவகாரம் முடிக்க. |
| 26 | உத்திரட்டாதி | ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், பெயர் சூட்டல், மரம், செடி, கொடி வைக்க, கோபுர ஆலயம் கிரகாரம்பம், கிணறு புதுப்பிக்க, திருமணம், குருகுலத்தில் கல்வி பயில. |
| 27 | ரேவதி | ருது சாந்தி, பூ முடித்தல், பெயா சூட்டல், முடி வாங்க, காது குத்த, அன்னம் ஊட்ட, உபநயனம், திருமணம், வேதம் கற்க, புத்தாடை அணிதம், அணிகலன்களை அணிய, விதை விதைக்க, வெளியூர் புறப்பட கும்பாபிஷேகம் செய்ய, கடல் கடந்து செல்ல. |

# 7. சோதிட அடிப்படைகள்

## 1. இராசிகள் பன்னிரண்டு

விண்வெளி - வானவெளி என்பது நமது பூமியைச் சுற்றி அமைந்துள்ள ஆகாயப் பகுதியாகிய ஒரு மாபெரும் வட்டம் ஆகும். இவ்வட்டத்தைப் பன்னிரண்டு பகுதிகளாகப் பிரித்திருக்கின்றார்கள். இந்தப் பகுதிகளை ராசி என்பர். இந்த இராசிகள் பன்னிரண்டாகும். சிறப்பாகச் சொல்லப் புகின் சூரியன் தன் வீதியிற் செல்லும் போக்கை நோக்கி, ராசி மண்டலத்தைப் பன்னிரண்டு சம பாகங்களாக வகுத்திருக்கின்றனர். இராசி மண்டலத்தில் சுற்றளவு முன்னூற்றறுபது டிகிரி. ஒவ்வாரு சம பாகமும் முப்பது டிகிரிகளாக, பன்னிரண்டு பாகங்கள் அமைந்துள்ளன.

முதல் ராசி மேஷ ராசி எனப்படும். சூரியன் மேஷ ராசியில் ஒன்றாவது டிகிரியிலிருந்து முப்பதாவது டிகிரி வரை நகர ஒரு மாதமாகின்றது. இவ்வாறு சூரியன், ஒன்று முதல் பன்னிரண்டு ராசிகளையும் கடக்க, பன்னிரண்டு மாதம்; அதாவது ஒரு ஆண்டு ஆகின்றது. மேஷம் என்பது அந்த ராசியிலுள்ள நட்சத்திரக் கூட்டங்களைக் குறிக்கும். பன்னிரண்டு ராசிகளின் பெயர்கள்.



1. மேஷம், 2. ரிஷபம்,
3. மிதுனம், 4. கர்க்கடம்,
5. சிங்கம் 6. கன்னி,
7. துலாம், 8. விருச்சிகம்,
9. தநுசு, 10. மகரம்,
11. கும்பம், 12. மீனம்

என்பனவாகும்.

ஒவ்வொரு ராசியிலும் இரண்டேகால் நட்சத்திரம் அமையும்.

இரண்டே கால் நட்சத்திரம் என்பது ஒன்பது நட்சத்திர பாதங்கள். ஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு பாதங்களைக் கொண்டிருக்கும். எனவே ஒன்பது பாதங்கள் இரண்டே கால் நட்சத்திரங்களில் அமையும்.

ஜாதகக் குறிப்பில் பிறந்த காலத்தில் சந்திரன் இருக்கும் வீட்டிற்கு ராசி என்று பெயர்.

மாதங்களின் பெயர்களும் இராசியின் பெயராலேயே அமைவது மரபு.

## 2. ஒன்பது கிரகங்கள்

பன்னிரண்டு இராசிகளிலும் ஒன்பது கிரகங்கள் சஞ்சரிக்கின்றன. அவை : 1. சூரியன், 2. சந்திரன், 3. செவ்வாய் (அங்காரகன்), 4. புதன், 5. வியாழன் (குரு), 6. வெள்ளி (சுக்கிரன்), 7. சனி, 8. இராகு, 9. கேது என்பனவாம். இந்த ஒன்பது கிரகங்களும் ஒவ்வொரு இராசியில் சஞ்சரிக்கும் போதும், வெவ்வேறு வகையான வலிமைகளுடன் விளங்குகின்றன. அது பற்றிய நிலைகளை, ஆட்சி வீடு, நட்பு வீடு, பகை வீடு, சம வீடு, மூலத்திரி கோண வீடு, உச்ச வீடு, நீச வீடு எனக் குறிப்பிடுவர்.



இவ்வொன்பது கிரகங்களுள் இராகுவும் கேதுவும் நிழல் கிரகங்கள் எனப்படும்.

கிரகங்கட்கு நட்பு ராசிகளும் பகை ராசிகளும் இருப்பது போல், கிரகங்கட்குள்ளேயே ஒன்றுக்கொன்று, நட்பான கிரகங்களும், பகையான கிரகங்களும், சமமான கிரகங்களும் உள்ளன. இவற்றின் வரிசை சோதிட நூல்களில் காண்க.

**சாத்விக, ராஜஸ் கிரகங்களால் பார்க்கப்பட்டால் விரைவில் திருமணம்.**
**சா - சாத்விகம்; ரா - ராஜசம்; தா - தாமசம்**

## கிரக உறவுகளும், நிலைகளும் *(அட்டவணை-13)*

| எண் | கிரகங்கள் | நட்பு கிரகங்கள் | சமமான கிரகங்கள் | பகை கிரகங்கள் | நிலை |
|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | சந்திரன்-ரா<br>குரு-சா<br>செவ்வாய்-தா | புதன் | சுக்கிரன்<br>சனி<br>ராகு<br>கேது | பித்ருகாரகன் |
| 2 | சந்திரன் | சூரியன்-ரா<br>புதன்<br>குரு-சா | சனி<br>செவ்வாய்<br>சுக்கிரன் | ராகு<br>கேது | மாத்ருகாரகன் |
| 3 | புதன் | சூரியன்<br>சுக்கிரன்-ரா | குரு, செவ்வாய்<br>சனி, ராகு, கேது | சந்திரன் | வித்யாகாரகன் |
| 4 | சுக்கிரன் | புதன்-சா<br>சனி<br>ராகு-தா<br>கேது-தா | குரு<br>செவ்வாய் | சூரியன்<br>சந்திரன் | களத்திரகாரகன் |
| 5 | செவ்வாய் | சூரியன்<br>சந்திரன்<br>குரு-சா | சுக்கிரன்<br>சனி | புதன்<br>ராகு<br>கேது | சகோதரகாரகன் |
| 6 | குரு | சந்திரன்-ரா<br>சூரியன்-சா<br>செவ்வாய்-தா | சனி<br>ராகு<br>கேது | புதன்<br>சுக்கிரன் | கர்மதர்மாதிபதி<br>புத்ரகாரகன் |
| 7 | சனி | புதன்-சா<br>சுக்கிரன்-ரா<br>ராகு<br>கேது | குரு | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | ஆயுள்காரகன் |
| 8 | ராகு | சனி<br>சுக்கிரன்-ரா | புதன்<br>குரு | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | பிதா<br>மாதுர்காரகன் |
| 9 | கேது | சனி<br>சுக்கிரன் | புதன்<br>குரு - சா | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | ஞானகாரகன் |

## 4. மாதங்களும், இராசிகளும்

*நாள்*

பூமி தன்னைத் தானே ஒரு முறை சுற்றிக் கொள்கிற கால அளவுக்கு நாள் என்று பெயர்.

*வருடம்*

பூமி சூரியனை முழுமையாக ஒரு தடவை சுற்ற ஆகும் காலம் ஒரு வருடம்.

*மாதம்*

சூரியன் ஒவ்வொரு ராசியில் சஞ்சரிக்கும் காலம் ஒரு மாதம் ஆகும். அம்மாதங்கள் ராசிகளின் பெயரையே பெரும். சித்திரை முதலிய தமிழ்ப் பெயர்களும் வரும்.

## 5. நட்சத்திரங்கள் இருபத்தேழு

வான வீதியில் எண்ணிறந்த நட்சத்திரங்கள் உள. அவற்றுள் இருபத்தேழு நட்சத்திரங்கள் சோதிடக் கணக்குகட்குப் பயன்படுத்தப் படுகின்றன. இவ்விருபத்தேழு நட்சத்திரங்களும் வானவீதியின் மைல் கற்கள் போன்றவை. பஸ் செல்கையில் எத்தனையாவது கிலோமீட்டரில் எந்த ஊரில் நிற்கின்றது என்பது போல் 27 மைல் கற்களாக இவ்விருபத்தேழு நட்சத்திரங்கள் அமைகின்றன. இத்தனையாவது நட்சத்திரமான இன்ன நட்சத்திரத்தில் குறிப்பிட்ட கிரகம் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றது என்று கூறுவது சோதிட மரபு. இதனை இன்னொரு வகையாகவும் கூறலாம். வான மண்டலத்தினைப் பன்னிரண்டு சமமான பகுதிகளாகப் பிரித்து இராசி என்ற பெயரால் குறிப்பிடுவது போன்று, வான மண்டலத்தை இருபத்தேழு சமமான பகுதிகளாகப் பிரித்துப் பேசும் போது, அந்த ஒவ்வொரு பகுதியையும் நட்சத்திரம் என்ற பெயரால் குறிப்பிடுவது மரபு. எனவே மேஷம் முதலிய பன்னிரண்டு இராசிகளிலும் அசுவனி முதலாகிய இருபத்தேழு நட்சத்திரங்கள் அடங்கி இருக்கின்றன.

## 6. பாதம்

ஒவ்வொரு நட்சத்திரத்தையும், நான்கு சமமான பாகங்களாகப் பிரித்து பாதம் என்ற பெயரால் குறிப்பிடுவது மரபு. ஒரு பாதம் என்பது கால் நட்சத்திரம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

இருபத்தேழு நட்சத்திரங்களிலும் (27 x 4 = 108) நூற்றெட்டு பாதங்கள் இருக்கின்றன.

ஒவ்வொரு இராசியிலும், ஒன்பது பாதங்கள், அதாவது இரண்டே கால் நட்சத்திரங்கள் அடங்கியுள்ளன.

பன்னிரண்டு நட்சத்திரங்களின் பெயர்கள், அவற்றிற்குரிய இராசி முதலிய விபரங்களை பட்டியலில் காண்போம்.

## 7. லக்கினம்

ஒவ்வொரு தினத்திலும், ஒவ்வொரு ராசியும், ஒன்றன் பின் ஒன்றாய், இரண்டு மணிக்கு ஒரு ராசி வீதம் கிழக்கில் உதிக்கிறது. இதனை லக்கினம் என்பர். இராசிகளின் உதய நிலைக்கு லக்கினம் என்று பெயர் என்பதும் பொருந்தும். ஒவ்வொரு ராசியில் இரண்டு மணி நேரம் எனப் பன்னிரண்டு ராசிகளிலும் மொத்தம் இருபத்தி நான்கு மணி நேரம் அமைகின்றது. ராசி என்பது சந்திரன் நிற்குமிடம் அல்லது இருக்குமிடம். குறிப்பாக ஜனன காலத்தில் சந்திரன் இருக்கும் வீட்டிற்கு ராசி என்று பெயர்.

அபிதான சிந்தாமணி லக்கினம் என்பது இராசிகளுடைய உதயத்திற்குப் பெயர் எனக் குறிப்பிடுகின்றது. கதிரைவேற் பிள்ளை அகராதி, இராசிகளின் உதயம், முகூர்த்தம் என்று குறிப்பிடுகின்றது.

இராசிகள் பன்னிரண்டு, மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பன்னிரண்டும் ராசிகளாகும்.

பிறந்த நேரத்தைக் குறிக்கும் லக்கினத்திற்கும் இதே பன்னிரண்டு பெயர்கள் குறிக்கப்படுகின்றன. லக்னம் என்பது ஜாதகன் பிறந்த நேரத்தைக் குறிக்கும். ஜாதகனின் பிறந்த லக்னம் முதல் வீடாகும். அதிலிருந்து பிரதட்சிணமாக வருபவை முறையே இரண்டாவது முதலிய வீடுகளாகும். இப்பன்னிரண்டு வீடுகளும் தரும் பலன் பின்வருமாறு;



## பன்னிரண்டு லக்கின வீடுகளின் பொதுப் பலன்கள்

## *(அட்டவணை – 14)*

| ***வீடு*** | ***பலன்கள்*** |
|---|---|
| முதல் வீடு | வாழ்க்கை நிர்ணயம் |
| இரண்டாம் வீடு | தன, குடும்ப, வாக்கு ஸ்தானங்கள் |
| மூன்றாம் வீடு | சகோதர ஸ்தானம் |
| நான்காம் வீடு | மாத்ரு, சுகஸ்தானம் |
| ஐந்தாம் வீடு | பூர்வ புண்ணியம், புத்ர ஸ்தானம் |
| ஆறாம் வீடு | சத்ரு ஸ்தானம் |
| ஏழாம் வீடு | களத்திர (மனைவி, குடும்ப) ஸ்தானம் |
| எட்டாம் வீடு | ஆயுள் ஸ்தானம் |
| ஒன்பதாம் வீடு | பிதுர், பாக்ய ஸ்தானம் |
| பத்தாம் வீடு | கர்ம, தொழில் ஸ்தானம் |
| பதினொன்றாம் வீடு | லாப ஸ்தானம் |
| பன்னிரண்டாம் வீடு | விரய ஸ்தானம் |

## ராசி மாதப் பெயர்கள்

### *(அட்டவணை–15)*

| வ. எண். | ராசி | மாதம் | மாதம் |
|---|---|---|---|
| 1 | மேஷம் | மேஷ மாதம் | சித்திரை |
| 2 | ரிஷபம் | ரிஷப மாதம் | வைகாசி |
| 3 | மிதுனம் | மிதுன மாதம் | ஆனி |
| 4 | கடகம் | கடக மாதம் | ஆடி |
| 5 | சிம்மம் | சிம்ம மாதம் | ஆவணி |
| 6 | கன்னி | கன்னி மாதம் | புரட்டாசி |
| 7 | துலாம் | துலா மாதம் | ஐப்பசி |
| 8 | விருச்சிகம் | விருச்சிக மாதம் | கார்த்திகை |
| 9 | தனுசு | தனுசு மாதம் | மார்கழி |
| 10 | மகரம் | மகர மாதம் | தை |
| 11 | கும்பம் | கும்ப மாதம் | மாசி |
| 12 | மீனம் | மீன மாதம் | பங்குனி |



# 8. லக்கின வழிப் பிறந்த பலன்

## 01. பிறந்த சிறப்புகள் லக்கின வழி



### 1. மேஷ லக்கினம்

மேஷ லக்கினத்தில் பிறந்தவர்கட்கு, துலா ராசி ஏழாவது இடமாக இருப்பதால்,

01. மனைவி குடும்பப் பொறுப்பேற்று நடத்துவதில் அக்கறை கொண்டவர் ஆவாள், கணவனுடைய, தலையீட்டைச் சில சமயம் விரும்பமாட்டாள். இடையிடையே சிறுசிறு மனத்தாங்கல்கள் வந்து விலகும். குடும்ப கௌரவம் அமையும். திருமணத்துக்கு முன்பே வாழ்க்கைத் திட்டங்களை வகுத்திருப்பர். ஆடல் பாடல் கேளிக்கைகளில் மன விருப்புடன் இருப்பர்.



### 2. ரிஷப லக்கினம்

01. ரிஷப லக்கினக்காரருக்கு, விருச்சிக ராசி ஏழாமிடமாக அமைவதால் முழுப் பொறுப்பும் மனைவியிடமே அமையும்.
    இன்றேல், வீண் தகராறுகள் விளையும்
    மனைவியின் மரணம் முன்னதாக அமையும்
    ஜென்ம லக்கினமான ரிஷபத்தில், செவ்வாய் நின்றால் சீதனம் வரதட்சிணை அதிகம் கேட்பர்.
02. மனைவியால் செல்வ ஆதாயம் பெறுவார்
    சிறு சிறு சண்டைகள் அடிக்கடி தோன்றி மறையும்
03. செவ்வாயை, குரு, சுக்கிரன் போன்ற சுப கிரகங்கள் பார்த்தால் மனைவி நல்ல தைரியசாலியாகவும்
04. கடின உழைப்பாளியாகவும் இருப்பார்
05. மனைவிக்கு உடனே கிரகித்துக் கொள்ளும் திறன் அமையும்
06. செவ்வாயைப் பாபக் கிரகங்களான, சனி, ராகு, சூரியன் பார்த்தால், கணவனுடன் வரிந்து கட்டிக் கொண்டு சண்டையிடத் தயாராகுவர்.



## 3. மிதுன லக்கினம்

01. மிதுன லக்கினக்காரருக்கு, தனுசு ஏழாமிடமாக வரும். இவர் திருமணக் காலத்தில் எதனையாவது விட்டுக் கொடுப்பார்.
02. சமயச் சம்பிரதாயங்கள், சொந்த விருப்பு வெறுப்புகளை விட்டுக் கொடுத்தே திருமணம் அமையும்.
03. சிலருக்குக் காதல் திருமணமாகவும் அமையலாம். பெரியோர்களின் சம்மதமுடனேயே திருமணம் நடக்கும்.
04. சட்டதிட்டங்கட்குப் பணிந்தவராக இருப்பர்.
05. கணவன் மனைவி உறவு நன்கு ஒளிரும்.
06. சமய சம்பிரதாயங்களில் பற்றுதல் உள்ளவராயிருப்பர் தைரியமாகவும், சில சமயம் வெகுளியாகவும் இருப்பர்.
07. தாராள மனம் படைத்தவராவர்.
08. விளையாட்டுச் செயல்களில் விருப்பு இருக்கும்.
09. குருவை சுக்கிரன், புதன் பார்த்தால், நல்ல செயல்கட்குத் தான, தருமம் செய்வர்.
10. அதிர்ஷ்டசாலியாய் இருப்பர்.

குருவை சனி, சூரியன், செவ்வாய் பார்த்தால் பணக் கஷ்டம் உண்டாகும்.



## 4. கடக லக்கினம்

01. கடக லக்கின ஜாதகர்க்கு, மகரம் ஏழாமிடமாக வரும். இவர்கட்கு வாய்க்கும் மனைவி மிக ஜாக்கிரதையாக இருப்பார். அதிகம் பேச மாட்டார்.
02. தாய் தந்தையர் நிர்ப்பந்தத் திருமணமாக இருக்கலாம். தொழிலில் தடங்கல்கள் ஏற்படும்.
03. சிலர் வாழ்வில் பிரிவு அடிக்கடி ஏற்படும்.
04. எச்சரிக்கையும், ஜாக்கிரதையும் சந்தேகப் பேர்வழியாக்கும்
05. கணவன் மீது அடிக்கடி சந்தேகப்படுவார்

கடக லக்கினக்காரர் மனைவியின் கட்டு திட்டங்கட்கு அடங்கி-யவராவர்.

## 5. சிம்ம லக்கினம்

01. சிம்ம லக்கினக்காரருக்கு, கும்பம் ஏழாவது ராசியாக அமையும். இவர்கட்கு உறவில் திருமணமாவதில்லை.
எனினும் அன்னியோன்ய பாவம் நிலவும்.
02. சில .போழ்து, குடும்பத்தில் எதிர்பாராத மாறுதல்கள் விவாகரத்து. வரை போகும் நிலை வரும். எப்படியும் வாழ முடியும் என்ற தைரியம். கணவன் உஷாராக இருக்க வேண்டும்.
03. கும்பத்தையோ அல்லது சனியையோ குரு, சுக்கிரன் முதலியோர் பார்த்தால் ஒரு கெடுதியும் நேராது.
04. கணவன் பொறுமையாக இருக்க வேண்டும். வேறு வழி இல்லை.
05. கணவனை மீறிய வேலைகள் மனைவி செய்வார்.
கணவன் லக்கினத்தில் சூரியன் வலுத்திருந்தால் நன்று.
சனி வலுத்தால் வாழ்க்கைத் துன்பம் சிறிது மிகும்.



## 6. கன்னி லக்கினம்

கன்னி லக்கினக்காரருக்கு மீன ராசி ஏழாமிடமாக வரும்.

01. திருமணம் ஏதோ ஒரு நிபந்தனையின் பேரில் அல்லது முக்கிய காரணத்தால் நடைபெறும்.
02. தெய்வானுகூலத்தால் தான் திருமண வாழ்வு நடந்து வரும். ஏதோ ஒருவித சிறுசிறு கவலைகள் இருவருக்குள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.
03. சகிப்புத் தன்மையும், தியாக உணர்ச்சியும் உடைய கணவரின் பொறுமையால் வாழ்க்கை செம்மையாக நடைபெறும். பன்னிரண்டாமிடத்தில் இருக்கும் கிரகத்தால் தொல்லைகள் உண்டு
04. கணவன் ஒரு தெய்வீகத் துறையில் சக்தி பெறுவார்.
05. மனைவி சங்கீத ஞானம் உடையவராயிருப்பார் அல்லது வியக்கத்தகு பணிகள் செய்பவராவர்.



## 7. துலா லக்கினம்

துலா லக்கினத்தில் பிறந்தவருக்கு மேஷ ராசி ஏழாமிடமாக வருவதால்

01. மனைவி, கணவனை மிஞ்சி சில காரியங்களில் இறங்குவர்.

02. கணவன் மேல், சிறு சிறு விஷயங்களில் எல்லாம் பெரிதாகக் குற்றம் கண்டு பிடிப்பார்.

03. சிலபோது முன் யோசனையின்றி ஏதேனும் செய்து விட்டு விழிப்பார். புண்ணியவசம் பாதுகாக்கும்.

04. இவண் சுக்கிரன், செவ்வாயை விட வலுப்பெற்றிருந்தால், தொந்தரவுகள் அணுகாது.
செவ்வாயை குரு, சுக்கிரன், புதன் போன்ற சுபகிரகங்கள் பார்த்தால், முரட்டுக் குணமும், வெட்கமின்மையும் ஏற்படும். சில சமயம், தானே எல்லாவற்றிற்கும் காரணம் என்ற பெருந்தன்மைக் குணம் உண்டாகும்.



## 8. விருச்சிக லக்கினம்

விருச்சிக லக்கினத்தில் பிறந்தவர்க்கு,

01. பணக்கார மனைவி வாய்ப்பாள்.
மிகுந்த பணம் செலவழித்தே மனைவியைப் பெறுவார்.
மகிழ்வாகத் திருமண வாழ்வு அமையும்.

02. சுக்கிரன் கெட்டுவிட்டால், மகிழ்வு பாதிக்கப்படும்.
இரண்டாமிடமான, தனுசு பாபக் கிரகங்களைப் பெற்றிருந்தால் குடும்ப நன்மை இருக்காது.
சுப கிரகமானால், குடும்பம் வளர்ச்சி அடையும்.
சுப கிரகமானால் கணவனிடம் எப்பொழுதும், பண நடமாட்டம் இருக்கும்.

03. சுக்கிரனை, குரு அல்லது புதன் பார்த்தால், மனைவி அழகும் சொத்தும் மிக்கு நாகரிக உடை உடுத்துபவளாக இருப்பாள்.

04. சுக்கிரன் - சனி, ராகு, கேது , செவ்வாய் முதலிய பாபக் கிரகங்கள், பார்வை பெற்றிருந்தாலும், பகை நீச்சமடைந்தாலும், மனைவி வீட்டு வேலைகளை கவனிக்காதவளாகவும்,பொருப்பற்றவளுமாக இருப்பாள்.



## 9. தனுசு லக்கினம்

தனுசு லக்ன, ஜாதகர்க்கு மிதுன ராசி ஏழாமிடமாகும்.

01. புதன் நீச்சமாயிருந்தாலும், பகைப்பட்டிருந்தாலும் திருமணம், நாள் கடந்த நடக்கும்.

திருமணமே வேண்டாமென்று வாதாடி, பிறகு செய்து கொள்வார்கள்.

திருமண வகையில், பயணச் செலவும், உறவினர் கூடிப் பங்கு பெறுவதற்கும் பெரும் பாடு ஏற்படும்.

உறவுக்குள்ளேயே திருமணம் அமையலாம்.

திருமணம் படிப்பை உத்தேசித்து நிச்சயிக்கப்படும்.

மூன்றாமிடத்தில் பாபக்கோள் இருப்பின் நன்றன்று.

02. வாழ்க்கைப் போராட்டங்கள் பல அமையினும், மனைவி கணவனுக்கு ஏற்ப நடந்து கொள்ளும் குணவதி ஆவார்.

03. புதன் நல்லபடி காணப்பட்டால், கணவனுக்கு வேண்டும் போதெல்லாம் மனைவி பணம் சேர்த்துத் தருவார்.

புதன் கெட்டிருந்தால், மனைவிக்கு ஞாபக மறதி ஏற்படும்.

ஏதேனும் குற்றம் கண்டு பிடித்தவண்ணம் இருப்பார்.

04. மனைவி அதிகம் பேசக் கூடியவராவார்.



## 10. மகர லக்கினம்

மகர ராசியில் ஜனித்தவர்க்கு, கடக ராசி ஏழாமிடம்.

01. தம்பதிக்கு விருப்பம் இல்லை எனினும் பெரியோர் முடிவைத் தடுக்க முடியாமல் திருமணம் நடைபெறும்.

02. மனைவி, மிக நல்லவராகவும், குடும்ப பாரத்தைச் சுமப்பவராகவும் இருப்பார்.

03. நான்காமிடத்தில், சனி நின்றால் வறுமை சில சமயம் வாட்டும். ஆயினும், பிற்காலத்தில் சகல வசதிகளும் பெறுவார். எனினும் மனைவி மிகமிக ஜாக்கிரதையாக இருப்பார். மனைவி தான் கஷ்டப்பட்டு கணவனுக்கு உதவுவார். வீடு, நிலம் வாங்க முயன்று இறுதியில் வெற்றி பெறுவார்

04. செவ்வாய், ராகு, கேது ஆகியோர் பார்வை, சனி பெற்றால் பல தொல்லைகளைச் சமாளிக்க நேரிடும்.

05. துர்க்கை வழிபாடு துயர் துடைத்து நற்பலன்களை நல்கும்.



## 11. கும்ப லக்கினம்

கும்ப லக்கினக்காரருக்கு, சிம்மம் ஏழாமிடமாயமையும்.

01. சிம்ம ராசி வறண்ட ராசியாகும்.

வாழ்வில் போதிய திருப்தி அமையாது.

02. மனைவி, நற்குணங்களும், பெருந்தன்மையும் உடையவராகக் கணவனைக் கவர்வார்.
03. அதிகாரத் தோற்றமும், அறிவு விசாலமும், விடாமுயற்சியும் அமையும். சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்காத நிலை ஏற்படும்.
04. தம்பதியர்க்கு சினிமா, நாடகம், நாட்டியம் முதலிய கலைகளில் ஆர்வம் அமையும்.
05. ஐந்தாமிடத்திக் கிரகம், நல்லதாக அமைந்தால் ஒரு குறையும் வராது. ஐந்தில் பாபக்கிரகம் வீற்றிருந்தால் சில நாட்களில் வறுமை ஏற்படும். திருமணம் சில கெடுதல்களை விளைவித்ததாக நினைப்பு எழும்.
06. சூரியனைச் சுபக் கிரகங்கள் பார்த்தால் எல்லா வகையிலும், மனமகிழ்ச்சி ஏற்படும்.
07. சூரியனைப் பாபக் கிரகங்கள் பார்த்தால் எல்லா வகையிலும் கவலைகளும் துன்பங்களும் ஏற்படும்.

## 12. மீன லக்கினம்

மீன லக்கினத்தில் பிறந்தவர்கட்குக் கன்னி ராசி ஏழாமிடமாக வரும்.

01. அதனால் மனைவி உடல் பலவீனப்படும்.
அடிக்கடி மனைவிக்கும் சிறு நோய்கள் வரும்.
மனைவி உறவில் அமைவார்.
02. ராகு, கேது, கன்னியில் இருந்தால் அன்னியத்தில் அமையும்.
மனைவி எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருப்பார்.
03. எந்திரம் போன்று வேலைகளைச் செய்வார்
தொழிலைக் காரணமாக வைத்து, அல்லது தொழிலுக்கு உதவியாகத் திருமணம் அமையும்.
04. கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் சதா கேலியும் கிண்டலும் செய்து கொண்டிருப்பர்.
05. புதனைச் சுப கிரகங்கள் பார்த்தால், மனைவி படித்தவராகவும், எதிலும் முன்னெச்சரிக்கை உடையவராகவும் இருப்பார்.
06. புதனைப் பாபக் கிரகங்கள் பார்த்தால், வாயாடியாகவும், பிறர் மேல் குற்றம் காண்பவருமாக இருப்பார்.

## விலக்குகள்

இதுவரை ஏழாமிட இராசியை வைத்து மனைவி அமையும் நிலைகளைக் கண்டோம். இதுவே முடிவு அன்று. ஏழாமிடத்தைப் பார்க்கும் கிரகங்கள் நிலைகளை மாற்றி விடும்.

13. ஏழாமிடத்தில் சூரியன் இருந்தால் ஜாதகன் இருப்பிடத்தில் இருந்து கிழக்கு திக்கில் மனைவி வாய்ப்பாள்.

அதிகாரம் அதிகம் இருக்கும்.

இருபத்திரண்டு வயதுக்குள் திருமணம் நடைபெறும்.

மனைவி உறவில் அமைவாள்.

வாழ்க்கை அந்தஸ்து திருமணத்துக்குப் பின் உயரும்.

சிறு தொழில் புரிந்து வாழ்பவர்கள் கூட ஏழாமிடத்தில் சூரியன் இருந்தாலும், பார்வை இருந்தாலும் விரைவில் படிப்படியாக தொழில் வளர்ச்சி பெற்று, வருவாய் ஈட்டி, பொருள் சேர்ப்பர்.

இதனால் மனைவி தற்பெருமையும், கர்வமும் உடையவராவார். மனைவியின் சிடுசிடுப்பும் முன்கோபமும் அதிகரிக்கும். மேற்கூடிய பலன்கள், சிம்ம, கும்ப லக்கினங்களில் பிறந்தவர்க்கும் பொருந்தும் எனினும் மேஷ, துலா லக்கின ஜாதகர்கட்குப் பொருந்தாது.

14. **மேஷ லக்னத்தில் பிறந்தவர்கட்கு** துலா ராசியில் சூரியன் நீச்ச மடைவதாலும், துலா லக்கினக்காரர்கட்கு மேஷத்தில் சூரியன் உச்சம் பெற்றாலும், பாதகாதிபதியாவாதாலும், இப்பலன்கள் ஏற்படா.
எனவே,

15. **சிம்ம, கும்ப லக்கினக்காரர்கட்கு**, ஏழாமிடத்தில் சூரியன் இருப்பதால், பார்ப்பதால் யோகமும்,

மேஷ, துலா லக்கினங்கட்கு ஏழாமிடத்தில் சூரியன் இருப்பதால் பார்ப்பதால் யோகமின்மையும்,

மற்ற லக்கினக்காரர்கட்கு ஐம்பது சதவிகிதம் நற்பலன் ஏற்படலாம்.

சந்திரன், ஏழாமிடத்துக்கு, அதிபதியாகவோ, அல்லது ஏழாமிடத்தில் நின்றோ ஏழாமிடத்தைப் பார்த்தோ இருந்தால், ஜாதகர் தன் கற்பனையில் கண்ட காரிகையைக் கைப்பிடிப்பர். அவர்களின் இல்லற சுகமும் எண்ணத்தைப் போலவே ஈடேறும். சந்திரனை ஏழாமிடத்தில்

பெற்றவர்கள் புண்ணியம் செய்தவர்கள் ஆவர். கணவன் கீறிய கோட்டைத் தாண்டா மனைவி அமைவாள்.

அம்மனைவி மிகவும் சிக்கனமானவர்.

எளிய வாழ்வினராவர்.

சாந்தமான, மலர்ந்த முகம் எப்பொழுதும் உடையவராவர்.

இவ்விருவரும் இணை பிரியாது வாழ்வர்.

16. விருச்சிக ராசிக்கு, ஏழாமிடத்தில் சந்திரன் நின்றாலும், ரிஷப ராசிக்கு ஏழாமிடமான விருச்சிகத்தில் சந்திரன் நின்றாலும் நேர் மாறான பலன்களே அமையும்.

விருச்சிக ராசிக்குப் பாதகாதிபதியாவதால், சந்திரன் ரிஷபத்தில் இருப்பது கெடுதி தான்.

விருச்சிக லக்னக்காரருக்கு ரிஷபத்தில் சந்திரன் இருக்கையில் திருமணம் ஆகியும், பாதக ஸ்தானாபதியின் விளைவால், மனைவி வெளியேறிய நிலை உண்டு.

17. தனுசு, கும்ப, சிம்ம லக்னங்களுக்கு முறையே

01. ஆறு, எட்டு, பன்னிரண்டாமிட ஆதிபத்தியம் பெறுவதால், இந்த லக்னங்களுக்கு, ஏழாமிடத்தில் சந்திரன் நின்றால் குடும்ப வாழ்க்கையில் பல சிக்கல்கள் தோன்றும்.

02. மேலே சொல்லிய லக்னங்களுக்கு ஏழாமிடத்ததிபதி சுக்கிரனோடு சேர்ந்திருந்தாலும் சிக்கல்கள் தான் தோன்றிடும்.

03. மற்ற லக்னங்களுக்கு ஏழாமிடத்ததிபதியோடு எட்டு, ஆறு, பன்னிரண்டுக்குடையவர்களும் ராகுவும், கேதுவும் சேராமலிருக்க வேண்டும். அப்படி தனித்திருந்தால் மிக நல்ல பலன்களே ஏற்படும். காதலர்களும் தங்கள் காதலில் வெற்றி பெறுவர்.

18. செவ்வாய் ஜென்மலக்கினத்திலிருந்தாலும், ஏழாமிடத்திலிருந்தாலும்,

01. தாம்பத்திய வாழ்க்கையில் ஏதோவொருவித மிரட்சித் தோன்றித் தோன்றி மறையும்.

02. இவ்விடங்களில் செவ்வாய் நின்றால் தோஷமேற்படுவதால் குரு, சனி சேர்க்கை அல்லது பார்வை பெற்றால், ஏற்படும் பாதக பலன்கள்

குறைந்து வாழ்க்கையில் ஒருவித நம்பிக்கை ஏற்படும். இல்லையெனில் வறுமையும் சிறு கஷ்ட நஷ்டங்களையும் அன்றாட வாழ்க்கையில் சந்தித்துக் கொண்டேயிருக்கலாம்.

03. முழு நீர் ராசியான கும்ப, மீனத்தில் ஏழாமிடமாகச் செவ்வாய் நின்றாலும் தோஷம் செய்யாது.

04. சுக்கிரனுடைய வீடாகிய ரிஷப, துலாத்திற்கு ஏழாவது வீடாகிய, முறையே விருச்சிக மேஷ ராசிகளில் செவ்வாய் நின்றாலும் அவ்வளவு பாதக பலன்கள் ஏற்படாது. என்றாலும் போக விருப்ப முடையவராகவும், பகலில் சம்போகப் பிரியராகவும், தன் வயதிற்கு மூத்த பெண்களிடம் இச்சையுடையவராகவுமிருப்பார்.

தனது உச்ச வீடான மகரம் ஏழாமிடமாக அமைந்து அதில் செவ்வாய் இருந்தால் கெடுதலில்லை. காரணம், கடக லக்னத்திற்கு யோகாதிபதியாகிறார் செவ்வாய்.

19. மகர லக்னத்திற்கு ஏழாமிடமாகிய கடகத்தில் செவ்வாய் நின்றால் நீச்சமடைவதோடல்லாமல் பாதகாதிபத்தியமும் ஏற்படுகிறது. ஆதலால் நல்லதல்ல. ஆனால்,

01. நீர் ராசியானதால் தோஷமில்லை.

02. கும்ப, மிதுன லக்னங்களுக்கு ஏழாமிடத்தில் செவ்வாய் நின்றால் கொஞ்சம் தோஷமுண்டு.

ஆனால் சனி பார்வை சேர்க்கையாவது, குரு பார்வை சேர்க்கை யாவது ஏற்பட்டிருக்குமானால் தோஷ நிவர்த்தியாகும்.

03. இல்லாவிட்டால் எத்தகைய கெடுதல்கள் உண்டோ அவ்வளவையும் சமாளித்தாக வேண்டும். நல்ல சந்தோஷமும் வாழ்க்கை ருசிகரமுமானதாக இருக்க வேண்டுமெனில், புதன் ஏழாமிடத்தில் நிற்க வேண்டும். ஏழாமிடத்தில் புதனையுடைய ஜாதகருக்கு படிப்பு வாசனையுள்ள மனைவி வாய்ப்பாள். நல்லவளாகவும், குதூகலமுள்ளவளாகவும் எப்போதும் சிரித்து விளையாடுபவளாகவும் இருப்பாள். புருஷன் கோபக்காரரானாலும் தன் சாதுரியத்தால் புருஷனை வலிந்து தன் வழிக்குக் கொண்டு வருவாள். மகிழ்வாகப் பேசி கணவனை மகிழ்விப்பாள்.

04. நல்ல ஆடையாபரணம் பெற்றவளாகவும், கேளிக்கைகளில் விருப்பமுள்ளவளாகவும், சிறு வயதில் திருமணமாகக் கூடியவளாகவு மிருப்பாள். பெரும்பாலும் உறவினரல்லாத, வெளி உறவில் வட மேற்குத் திக்கிலிருந்து வருவாள். சிக்கனமாகக் குடித்தனம் செய்வாள்.

05. தந்திரமாகப் பேசித் தன் கணவனிடம் எல்லாவற்றையும் சாதித்துக் கொள்பவளாகயிருப்பாள்.

06. வயது ஆனவளானாலும், பருவக்குமரி போல் எப்போதும் காட்சியளிப்பாள். நவநாகரிகப் பாங்கை விரும்பும் இவள், பழைய சம்பிரதாயங்களை விரும்ப மாட்டாள்.

07. அளவோடு கூடிய தெய்வ பக்தியுடையவள். மிக புத்திசாலித் தனமாகக் குடும்பத்தை நிர்வகிப்பாள்.

08. மாநிறமும், நடுத்தர உயரமும் கொண்ட இவளது கையில் எப்போதும் பண நடமாட்டம் இருந்து கொண்டேயிருக்கும்.

09. சுக்கிர - சந்திரனுடன் சேர்ந்த புதன் ஏழாமிடத்திலிருந்தால் லலித கலைகளிலும், சினிமா, நாடகம், சங்கீதம் போன்றவைகளிலும் நாட்டம் மிகுந்தவளாவாள்.

10. ஜென்ம லக்னத்திலிருந்தாலும், ஏழாமிடத்திலிருந்தாலும் இத்தகைய பலன்கள் ஏற்படுமாயினும், மேஷ விருச்சிக கும்ப, கடக லக்னக்காரர்களுக்கு புதன் ஏழாமிடத்திலிருந்தால் நேர்மாறான பலன்கள் தான் ஏற்படும். மற்ற லக்னக்காரர்களுக்கும் ஆறு, எட்டு, பன்னிரண்டாமதிபதியுடைய சேர்க்கை பெறாமலிருந்தால் தான் சொல்லிய நற்பலன்களேற்படும்.

**20.** ரிஷப, துலா, மகர லக்னக்காரர்களுக்கு பெருத்த நன்மைகள் ஏற்படா விட்டாலும் புதனால் தீமைகளில்லை,

01. ஏழாமிடத்தில் குருவிருந்தால் வடகிழக்குத் திசையிலிருந்து மனைவி வருவாள். தனதானிய சம்பத்து விருத்தியாகும், மிக நல்லவளாகவும், உத்தம குணம் பெற்றவளாகவும், நீதி நெறி தவறாத வளாகவும் விளங்குவாள். தீவிர தெய்வ பக்தியும், கதா காலட் சேபத்தில் புத்தி நாட்டமிருக்கும். உரத்த குரலில் பேசாத உத்தமியாகவு மிருப்பாள்.

02. கணவனுக்கு நன்றாகப் பணிவிடைகள் செய்வாள். கணவனது மனம் கோணாமல் நடந்து கொள்வாள். பூர்வ புண்ணியமில்லா விட்டால் இத்தகைய மனைவி வாய்ப்பது அரிதாகும்.

03. பெரியோர்களின் விருப்பப்படியும், குல வழக்கப்படியும் திருமணம் நடைபெறும்.

04. கணவனும் மனைவியின் மனம் நோகாமல் நடந்து கொள்வார். இவர்களுடைய செலவு நியாயமான முறையிலும் தர்ம காரியங்களுக்காகவும் இருக்கும்.

05. ஏழாமிடத்தில் அமரும் குரு நீச்சமடையாமலும் சனி, ராகு, கேது சேர்க்கை பெறாமலும் சனியின் பார்வை விழாமலும் இருக்க வேண்டும்.

இப்பலன்கள் ஏழாமிடத்தில் குரு இருந்தால் மட்டுமே ஏற்படுவதன்று. ஜென்ம லக்கினத்திலும் மூன்றாமிடத்திலும் பதினோரா மிடத்திலும் நின்று ஏழாமிடத்தைப் பார்த்தாலும் ஏற்படுவதாகும்.

06. குருவுடன் ஆறு, எட்டு, பன்னிரண்டுக்குடையவர்கள் சேர்ந்தாலும் குருவைப் பார்வைப் பார்க்காமல் இருந்தாலே நடக்கும்.

ஆனால்,

சில நாட்கள் கடந்த பிறகே திருமணம் நடைபெறுவதுண்டு.

## 21. அனுபவத்தில் துலா லக்ன ஜாதகர்

01. ஒருவருக்கு ஜென்மத்தில் குருவிருந்து ஏழாமிடத்தைப் பார்த்தான். குடும்ப வாழ்க்கையில் மனமொத்து இருக்கவில்லை.

02. இன்னொரு துலா லக்ன ஜாதகருக்கு குரு மேஷத்தில் ஏழாமிடத்தி லிருந்ததால் திருமணமே நடக்கவில்லை.

03. துலா லக்னத்திற்கு மூன்று, ஆறுக்குடைய குரு, லக்னாதிபதியான சக்கிரனுக்குப் பகைவனானதால், ஏழாமிடத்திலிருப்பதும் லக்னத்திலிருப்பதும் நல்லதன்று.

## 22. அது போலவே,

01. ரிஷப லக்னத்திலும் ஏழிலிருப்பது நல்லதன்று. நல்லதன்று என்றால் திருமணத்தால் கெடுதி என்பது பொருள்.

02. இதுபோலவே மகர லக்னத்திற்கும், மூன்று பன்னிரண்டுக் குடையவன் ஆதலால் நன்மையில்லை. ஆனால், ஏழாமிடத்தில் உச்சமென்பதில் அதிக தீங்கில்லை என்று சொல்லலாம்.

23. மிதுன, கன்னி, தனுசு, மீன லக்னங்களில் பிறந்தவர்களுக்கு குரு ஜென்மத்திலிருந்தாலும், ஏழாமிடத்திலிருந்தாலும் ஒன்றுக்கு மேற்பட்ட களத்திரம் (மனைவி) அடையலாம்.

01. சுக்கிரன் ஏழாமிடத்தில் இருப்பது நன்றன்று. காரகோ பாவநாஸ்தி என்றபடி களத்திர காரகம் பெற்ற சுக்கிரன் ஏழாமிடத்திலிருந்தால் ஜாதகருடைய நெறியில் தவறு ஏற்படும்.

02. ஏற்கனவே அறிமுகமான பெண்மணியை இவர் திருமணம் முடிப்பார்.

03. மனைவி நல்ல அழகுப் பொருள்களை வாங்குவதில் இச்சை உள்ளவளாகவும், சினிமா, நாடகம் போன்ற நிகழ்ச்சிகளில் அதிக ஆர்வமும் காட்டி வருவாள்.

04. ஆனால் திருமணம் ஏற்பட்டபின் வாழ்க்கை வலுப்பெற்றதாக அமையும்.

05. சிலருக்குக் காதல் திருமணம் ஏற்படுவதுண்டு.

06. சுக்கிரன் ஏழிலிருந்தாலும், ஜென்ம லக்னத்திலிருந்தாலும் சாதாரணமாக வாழ்க்கையில் பல ஆடம்பர வசதிகள் பெருகிடும். மனைவி சற்றுக் கருத்த நிறமாயினும் ரூபலாவண்ணியம் பெற்றிருப்பாள். செயற்கை அழகு அதிகம் இவளுக்குத் தேவைப்படும். மலர்ந்த முகத்துடன் மகிழ்ச்சியாகவே எப்பொழுதும் இருப்பாள். காதல் கதைகளையும், சிறு கதைகளையும் அதிகம் விரும்பிப் படிப்பாள்.

---

# 9. பொதுவாகப் பொருத்தங்கள் பார்க்கும் சோதிட வழி முறைகள்

ஆண், பெண் சாதகங்களில் கவனிக்க வேண்டியவை :

1. ஆயுர் பாவம்
2. தசை புத்தி, எதிர்காலப் பலன்கள்
3. தோஷ சாம்யம் (களத்ர தோஷம், மாங்கல்ய பாவம்)
4. 2, 4, 7, 8, 12 ம் வீடுகளின் பாபசாம்யம் (செவ்வாய் தோஷம் உட்பட)

   அ) தனித்தனியாகவும்.

   ஆ) இரு ஜாதகங்களை ஒத்து நோக்கியும்.



# 5 10. திருமணப் பொருத்தங்கள் ஐந்து முதல் இருபத்தெட்டு வரை 28

## 1. வாய்ப்பு :

"திருமணங்கள் சுவர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன" என்பது ஒரு மேனாட்டுப் பழமொழி. " திருமணம் - பல பிறவிகளில் ஒரே இணை காதலர்களாக வருவது நன்று", என நவில்வன அகத்துறை இலக்கியங்கள். வகுத்தான் வகுத்த வழி அல்லால் கோடி தொகுத்தார்க்கும் ஆவதில்லை என்பது மரபு.

அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் உள்ள அந்தப் பரம் பொருளாய கடவுள் அன்று - நெடுநாட்கட்கு முன் விதித்த விதிமுறைப்படியே - அல்லது வகுத்த வரையறைப்படியே ஒவ்வொரு மனிதனின் இல்லற வாழ்வு அமையும் என்பது, வயது முதிர முதிர அனுபவத்தால் நாம் உணரும் உண்மை. வினைப் பயன் வேறு. இன்னொரு திசையில், அதிர்ஷ்டம்; இன்னொரு பக்கம் தேடிப் பெறும் விடாமுயற்சி, பிராப்தம், வாய்ப்பு எல்லாம் செயல்படுகின்றன.

## 2. எதிர்பார்ப்புகள் :

ஒரு ஏழை பெண்ணுக்கு, அல்லது ஏழை இளைஞனுக்கு நல்ல பெண், நல்ல மணமகன் எளிதில் கிடைத்து விடுகின்றது.

பணக்கார, எதிர்பார்ப்புகள் நிறைய உடைய படித்த குடும்பங்கட்கு நல்லன எளிதில் அமைவதில்லை.

## 3. சோதிடம் :

சோதிடப் பொருத்தம், பார்க்காத திருமணங்கள் பல வெற்றியைத் தந்துள்ளன.

சோதிட பொருத்தம் திரும்ப திரும்ப பார்த்து முடித்த சில தோல்விகளைத் தழுவியும் உள.

அங்கங்கே சில குறைகள்; அதற்கேற்ற விளைவுகள்.

அங்கங்கே ***எதிர்பார்ப்புகள் குறைபவர்களிடத்தே பல நிறைகள் அவற்றின் விளைவு நற்பயன்கள்.***

***எளிய குடும்பத்தினர் மேஷ, ரிஷபம் பார்ப்பதில்லை.*** நடுத்தர வர்க்கத்தினரின் எதிர்பார்ப்பு, வரன், வதூ தேர்ந்தெடுப்பதில் ஒரு

***செயற்கையான வியாபாரப் போக்காக*** அமைகின்றது. எனவே சங்கடங்கள்.

## 4. இலௌகிகம்

நடைமுறையில் இன்றளவில் ஜாதகப் பொருத்தம் பார்த்தாலும், பெரும்பான்மையான திருமணம், வரதட்சிணை, செல்வம், வருவாய் முதலியனவற்றை முதன்மையாகக் கொண்டே நடைபெறுகின்றன. இதுவன்றி அழகு, உறவு மட்டும் கருதி நடைபெறும் திருமணங்கள் குறைவு. இம்மரபுகளை மனதில் வைத்து இன்றளவில் இலௌகிகமாகப் பார்க்கப்படும் திருமணப் பொருத்தங்களைப் பட்டியலிடுகிறேன். இப்பட்டி பொது நடைமுறையில் கொடுக்கப்படும் உத்தேச முதன்மை வரிசையில் எழுதப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. அழகு | 2. நிறம் | 3. உடற்கட்டு |
| 4. வயது | 5. வரதட்சிணை | 6. செல்வம் |
| 7. படிப்பு | 8. வருவாய் | 9. வாகன வரவு |
| 10. வீடு மனை | 11. செல்வாக்கு | 12. மேல்வருவாய் |
| 13. அந்தஸ்து | 14. பதவி | 15. கலைப்பயிற்சி |
| 16. உடல் நலம் | 17. தொழிற்பயிற்சி | 18. உறவு |
| 19. பண்பாடு | 20. மனப்பக்குவம் | 21. நாகரிகம் |
| 22. இரத்த வகை | 23. மேல்நாட்டுவேலை | இன்ன பிற பல. |

## 5. தொல்காப்பியர்

தொல்காப்பியர் திருமணப் பொருத்தத்தினை ஒப்பு என்பார்.

| | | |
|---|---|---|
| 1. பிறப்பு | 2. குடிமை | 3. ஆண்மை |
| 4. ஆண்டு (வயது) | 5. உரு (அழகு) | 6. நிறுத்த காம வாயில் |
| 7. நிறை (கற்பு, நற்குணங்கள், பண்புகள்) | | 8. அருள் |
| 9. உணர்வு | 10. திரு (செல்வம்) | என்ற பத்தே |

அவை. இவண் செல்வத்துக்கு இறுதி இடம். செல்வத்துக்கு மதிப்புத் தராத காலத்தில், பிறப்புக்கே முதன்மை தரப்பட்டுள்ளது. குடிமை என்பது தொழில் மரபு ஆகும். இது சாதி எனவும் படலாம். மூன்றாவதாகக் கூறப்படும் ஆண்மை என்பது மிக முக்கியம். சமுதாய அந்தஸ்து, சமுதாய ஈடுபாடு, சமுதாயக் கடமைகள் இயற்ற இது மிகவும் இன்றியமையாதது. ஆண்டு என்பது வயது. பெண்ணின் வயது ஆணின் வயதை விடக் குறைவாகவே இருக்க வேண்டும். ஐந்தாவது உரு அழகு

ஈடாக அமைய வேண்டும். உளுந்தும் அரிசியும் மிகு வேற்றுமை வேதனையான வாழ்வுக்கு வித்தாகும். ஆறாவதாக வரும் நிறுத்த காமவாயில் மிகமிக முக்கியம். மணமகனின் காமவாயில் திட்டமும், மணமகளின் காமவாயில் திட்டமும் ஒத்துப் போக வேண்டும். மிகு காமம் உடையார்க்கு அது குறைந்த பெண்ணோ, மிகு காமம் உடைய பெண்ணுக்கு அது குறைந்த ஆணோ அமையின் வாழ்வு நரகமாகி விடும். நிறை என்பது கற்பு. உயர் பண்புகள் முதலியனவாம்.

அருள் என்பது மிக முக்கியம். அருள் தன்மை உடைய ஆணுக்கோ, பெண்ணுக்கோ அஃது குறைந்தவர், அற்றவர் அமையின் தினம் தினம் போராட்டமாக வாழ்க்கை அமையும். ஒன்பதாவதாக உணர்வு என்கிறார். இது மனோதத்துவ நிலை, சகிப்புத் தன்மை, மனப்பாங்கு, ஆளுமைப் பண்புகளின் நிலை போன்றன அறிவியல் பூர்வ பொருத்தமாகும். பத்தாவதாக, திரு என்ற செல்வம் வருகின்றது. இது செல்வ நிலை, வரதட்சிணை இரண்டையும் குறிப்பதாகலாம். இத்தொல்காப்பியர் கூறும் இப்பத்து வகை ஒப்பு சுயநலமும், பேராசையும் குறைந்த செய்திகள் பின் ஒரு கட்டுரையில் வருகின்றது. இது பற்றியே சமுதாயத்திற்கு வழி வகுக்கும் பண்டைப் பண்புகளாக உள.

## 6. சாதி, குல, சமயச் சிறப்புக்கள்

அரசியல்வாதிகளும், பண்டைப் புலவர்களும் சாதி, குலம், பிறப்பு என்ற மூன்றைப் பற்றியும் குறை கூறியுள்ளார்கள். ஆனால் சாதி அழியவில்லை. சாதிப் பற்றும் சாதி வழி உரிமை கோருவதும், சாதி வழி நின்று சாதிப்பதும் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வதும் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. பகுத்தறிவுடைய சமயவாதியாக, காந்திய-வாதியாக, சமூகத் தொண்டனாக வாழ்க்கை அமைந்த எனது எழுபதில் தீவிரமாகச் சிந்தித்து, அனுபவித்து சமுதாயத்தைக் கண்டு கற்ற பாடம், ***சாதி, குலம், பிறப்பு என்ற மூன்றும் மிக்க நன்மை பயக்கும்.*** மிகவும் துல்லியமாக கவனிக்க வேண்டிய பொருத்தங்கள் என நம்புகிறேன். பண்டைச் சாம்ராஜ்யங்களின் விரிவின் போதும், ஆட்சிகளின் வளர்ச்சியின் போதும், மேல் சாதியினர் பெற்ற செல்வாக்கின் மேல் வளர்ச்சி, அவர்கள் மற்றவரை தாழ்வுபடுத்திய சம்பவங்கள் முதலியவற்றால் ஏற்பட்ட காழ்ப்பினால் சாதி குலம் பிறப்பினைத் தாழ்வாகத் தூற்றிய மரபு அமைந்திருப்பினும், ஒழுக்கக் கட்டுக்கோப்பை, சமுதாய வளத்தைக் காக்க இவை மிகமிக மிக உதவியுள்ளன; உதவி

வருகின்றன. சாதி மாறிக் கலப்புத் திருமணம் செய்தவர்கள் படும்பாடு; அவர் தம் தத்தாரித்தனம் சாதிவழித் திருமணம் மிக உயர்ந்தது என்பதை வலியுறுத்திய அனுபவம் எல்லோர்க்கும் வந்துவிட்டது. பகுப்பும் வகுப்பும், இனப் பாகுபாடும் நல்லனவே.

குலம் என்பது சாதியின் உட்பிரிவு. பிறப்பு என்பது சகோதர, சகோதரி நிலை, பெற்றோர் வழி, மூதாதையர் நிலை முதலியன பற்றியது. மனிதப் பண்பு, பிறப்பு வழி தான் வளமாக வருகின்றது. மனிதப் பண்பு, மனித இயல்பு, மனித அனுபவம், மனித அறிவு முதலியன ஒரே பிறப்பில் உண்டாவதில்லை. ஆயிரம் காலமாக வழி வழி, மூதாதையர் தாய் தந்தையர் வழி வரும் ஆன்மாவோடு இயைந்தவை. எனவே பிறப்பு மிக மிக முக்கியம். பணக்காரர், அரசியல்வாதிகள் ஆகியோர் பாரம்பரியம் மறந்த, வெகு ஜன விரோத சுயநலவாதிகளாக மாறி வருவது குடிப்பிறப்பின் பண்புகள் குறைந்தமையின் அறிகுறி.

## 7. வெளிப் பேச்சு :

பகுத்தறிவு வாதிகள், நாத்திகர்கள், அரசியல்வாதிகள் அத்தனை பேரும் நேற்று, இன்று, நாளை முதலிய எல்லாக் காலத்திலும் தெய்வ நம்பிக்கை உடையவர்களாகவே இருப்பர். வெளிப்பேச்சு, செயல்முறையில் மாறியிருப்பதற்கு, பாரம்பரிய, வாழ்வு முறையின் உண்மைகளின் நம்பிக்கைகளின் தாக்கக்குறைவே காரணம். இவர்கள் எல்லோருமே வயதான போது, துன்பம் வரும் போது, கவலை வரும் போது, சாதியை, தெய்வத்தை, குடிப்பிறப்பை, பாரம்பரியத்தை சமயத்தை மதிக்கும் பக்குவம் பெற்று விடுகின்றனர். மதம் மாறிய பலர் கூட கடைசி காலத்தில் தன் செயலுக்கு வருந்துவது இயல்பு. மதம் மாறி, துறவிகளாகி பல நன்மைகளை எய்தியவர்களும் இதற்கு விதி விலக்கன்று.

## 8. பொருத்தம் விளம்பரம் போன்றதே

திருமணத்துக்குப் பத்து பொருத்தங்கள் பார்க்கும் முறையினைப் பற்றி, பல சோதிட வல்லுநர்கள் பல ஆய்வுக் கருத்துக்களைச் சொல்லியுள்ளனர். **ஜாதகம் பார்ப்பது என்பதும் பலன்கள் கூறுவதும் முறையாக, வல்லுநரால், முறைப்படி நன்கு ஆய்ந்து செய்யப்பட வேண்டியது. அட்டைப்படத்தையும் பொய்யான விளம்பரத்தையும் மட்டும் பார்த்துவிட்டுக் கடையில் பொருள் வாங்குவது போன்றது இந்த பத்துவகைப் பொருத்தம் பார்ப்பது.**

ஜாதகம் இல்லாதவர்கள், ஜாதகம் பார்க்காமல் திருமணம் முடிக்க விரும்புவோர், கைக்கொள்ளும் எளிய முறை பத்துப் பொருத்தங்கள் பார்ப்பது. பத்துப் பொருத்தங்கள் பார்ப்பதுடன் **தீர்க்கமான முழு ஜாதகப் பரிசீலனை தம்பதியர் இருவருக்கும் தக்க ஜோதிடர் வழி செய்வது அவசியம்.**

பொதுவாக; ஜாதகப் பலன்களும், திசா யோகமும், ஆண் பெண் இருவர்க்கும் நன்றாக அமைந்தால், இப்பத்து வகைப் பொருத்தங் களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பொருத்தங்கள் இல்லாமை ஏற்பட்டால், அவற்றிற்கு **ஏற்ற பரிகாரங்களைச்** செய்து விட்டுத் திருமணம் செய்யலாம். இதற்கு மேல் ஒவ்வொரு நிலைக்கும் **விதிவிலக்கு விதிகள்** உள்ளன. அவற்றை அறிந்து மனச் சாந்தி அடையலாம்.

### குறைந்த பட்சப் பொருத்தங்கள் :

பத்துவிதப் பொருத்தங்களில் சுப அளவு, நல்ல பொருத்தங்கள் ஐந்துக்குத் (தினம், கணம், யோனி, மாகேந்திரம், ஸ்திரீ தீர்க்கம்) மேல் இருப்பின் சுபம். **ஐந்துக்குக் குறைவாயின்** ஜாதகப்படி அமைந்த சுப - அசுபங்களைப் பார்த்து முடிவு செய்ய வேண்டும். சில அறிஞர்கள் **கணம், யோனி, ரஜ்ஜு என்ற மூன்றே** போதும் என்பர்.

### 10. அவசியமான பொருத்தங்கள் :

பொருத்தங்களில் தினம் (நட்சத்திரம்), கணம், யோனி, ராசி, ரஜ்ஜு இவை ஐந்தும் முக்கியமாகும்.

பிராமணர்கட்குத் தினப் பொருத்தம் அவசியம், சூத்திரர்கட்கு கணப் பொருத்தமும், வைசியர்கட்கு ராசிப் பொருத்தமும், மற்றையோருக்கு யோனிப் பொருத்தமும் அவசியம்.

ஸ்திரீ தீர்க்கம், கணம், ரஜ்ஜு, நாடி, வசியம் என்ற நான்கு மட்டும் பொருந்தி இருந்தால் திருமணம் செய்யலாம் என்பது ஒரு கருத்து.

### 11. *ரஜ்ஜுப் பொருத்தம் மிக மிக அவசியம். அது இல்லை எனில் திருமணம் செய்யக் கூடாது என்பர்.*

சிலர் நாடிப் பொருத்தத்தினை மேற்கண்ட பத்துடன் சேர்த்து, பதினொன்றென்பர்.

வேறு சிலர் நாடியை விடுத்து விருட்சப் பொருத்தம், பட்சிப் பொருத்தத்தைச் சேர்த்து, பன்னிரண்டென்பர்.

## 12. பதினெட்டுப் பொருத்தம்

அபிதான சிந்தாமணி 1. நட்சத்திரப் பொருத்தம், 2. ஏக தினப் பொருத்தம், 3. கணப் பொருத்தம், 4. மகேந்திரப் பொருத்தம் 5. ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம், 6. மிருகப் பொருத்தம், 7. இராசிப் பொருத்தம், 8. இராசி அதிபதிப் பொருத்தம், 9. வசியப் பொருத்தம், 10. மரப் பொருத்தம், 11. ஆயுள் பொருத்தம், 12. பஞ்சபட்சிப் பொருத்தம், 13. பஞ்சபூதப் பொருத்தம், 14. வேதைப் பொருத்தம், 15. இரஜ்ஜுப் பொருத்தம், 16. கோத்திரப் பொருத்தம், 17. வருணப் பொருத்தம், 18. நாடிப் பொருத்தம் என்ற நிலையில் பதினெட்டுப் பொருத்தங்களைப் புகல்கின்றது.

## 13. அபிதான சிநதாமணி

அபிதான சிந்தாமணி இந்தப் பதினெட்டுக்கு மேல் பெயர்ப் பொருத்தம் என,

1. எழுத்து, 2. சொல், 3. தானம், 4. பால், 5. உளு, 6. வருணம், 7. நாள், 8. சதி, 9. கணம் என்ற ஒன்பதினைக் கூறுகின்றது.

## 14. மூவகையுள் இருபத்து மூன்று

"அமரர் அறிஞர் பி.எஸ். ஐயர்" அவர்கள், தனது விவாக விஞ்ஞான நூலில் ராசி சோதனை, கிரக சோதனை, நட்சத்திர சோதனை என்ற மூன்று வகையில் அடங்கும் இருபத்து மூன்றுக்கு மேல், வயது, தகுதி, நேர்மை, குணப்பண்புகள், தோஷங்கள், தோஷ நிவர்த்தி முதலியனவற்றையும் சேர்த்து பொருத்தம் பார்ப்பது நன்றென்பர்.

இந்நூலில் இறுதியில் இந்நூலாசிரியர் தன் ஆய்வின் முடிவாக, சோதிடம், மனோதத்துவம், ஆளுமை மேம்பாடு முதலிய அனைத்து வகைக்கும் பொருந்தி, பார்க்க வேண்டிய ஒரு பொருத்த சோதனை அட்டவணையைச் சேர்த்துள்ளார்.





# 11. மூன்று விதத் திருமணப் பொருத்த சோதனை

***திருமணப் பொருத்த சோதனை முறையே 1. ராசி சோதனை, 2. கிரக சோதனை மற்றும் 3. நட்சத்திர சோதனை என்ற மூன்று வகையாகப் பார்க்க வேண்டும்.*** அவை

ராசி வழி நான்கு, ராசி அதிபதியைக் கொண்டு ஒன்று, நட்சத்திர வழி பதினெட்டு என இருபத்து மூன்று வகையாகும் என்பர். அறிஞர் அமரர் பி.எஸ்.ஐயர் அவர்கள் இவைகள் பற்றி எழுதியுள்ளார்கள்.

## ஒன்றை ஒன்று மிஞ்சும் மோக வலை

வெட்டி வாதமாக எழுதுவதில் பயன் இல்லை. நிறைய ஆசைகள் குடும்பத்தினருக்கும், மணமகனுக்கு, மணமகளுக்கும் கூட உண்டு. 1. அழகாக இருக்க வேண்டும். 2. செல்வ வருவாய் வேண்டும். 3. திருமணம் நிச்சயிக்கையில் விளையாடும் மோகங்கள், யோகங்கள் சமுதாய அளவில் தலை தூக்கி நிற்கும், கிடைக்கப் பெற - அனுபவிக்கத் துடிக்கும் வேட்கைகள் முதலியன ஒன்றை ஒன்று மிஞ்சுகின்றன.

பெண் வீட்டார், ஆண் வீட்டார் இருவரும் இவற்றைத் தன் தகுதிக்கு மேல் திருமண உறவு வழி தன் பிள்ளைகட்குப் ***பெற்றுத்தர விரும்பி ஏமாறுகிறார்கள்.*** ஆசைப்படப்பட ஆய்வரும் துன்பங்கள்.

மேற்கண்ட மேகங்கள், மோகங்கள், மாயைகள் சரிவர, கைகூடாது பெரும்பான்மையான திருமணங்கள் இல்லற இன்பத்தைக் **குடும்ப வாழ்வின் நிறையைச் சிதிலப்படுத்தி** வருகின்றன.

மேற்கொண்டு முதலில் பத்துவிதப் பொருத்தத்திற்கும் அவற்றைத் தொடர்ந்து பிற பொருத்தங்களைப் பற்றியும் விளக்கங்களைக் காணலாம்.

## குழம்ப வேண்டாம் :

வைத்திய சாத்திரம், வாஸ்து சாத்திரம், சோதிட சாத்திரம் முதலியன ஆழ்ந்து படிக்கும் போது ஐயங்களை எழுப்பி அச்சத்தினை உண்டாக்குவதுண்டு. **"படைத்தவன் விதித்த வழியிலேயே யாவும் நடக்கும்".** ***அவன் என்றும் எங்கும் நன்றே செய்யும் அன்பானவன் என்ற நம்பிக்கை*** தான் மனிதனை வாழ வைக்கும். எல்லாவற்றிற்கும் விதிவிலக்கு, பரிகாரம், சிறப்பு விதிகள் எனப் பல உள்ளன. ஏதேனும் ஒரு வகையில் கட்டாயமாகப் பொருத்தம் அமைந்து திருமணம் நடைபெற்று மணமக்கள் வகுத்த வழி வாழ்வது உறுதி.

## 12. ஜோதிட காலவிதான, வருஷாதி, முகூர்த்த சாத்திர முறைகள்படி விரிவான திருமணப் பொருத்த வகைகள் - 85

*அட்டவணை –16*

①–⑪ வட்டத்துக்குள் எண் வருபவை பதினொரு பொருத்தங்களைக் குறிப்பவை.

★ நட்சத்திரக்குறி உள்ளவை முக்கியமானவை.

★★ இரு நட்சத்திரக் குறி உள்ளவை மிக மிக முக்கியமானவை

கேரளம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளவை கேரள நூலில்குறிப்பிட்டுள்ளவை

.வ வ என்ற எழுத்து வருஷாதி நூலைக் குறிப்பிடுவது. பெரிய வருஷாதி நூலில்குறிப்பிடப்படும் பதினெட்டுப் பொருத்தங்கட்கான வரிசை எண் வ 1 – வ 18 எனக் குறிப்பிடப்பட்டுள்ளன.

| வரிசை எண் | நட்சத்திர வரிசை எண் | விபர வகைத் தலைப்புடன் |
|---|---|---|
| வரி–சை | | கால விதான, முகூர்த்த சாத்திர முறை முதல் இருபத்து மூன்று பொருத்தங்கள் |
| A | | ***இராசி சோதனை வழி நான்கு*** |
| 1 | | 1 வசியம் ⑧ வ8 |
| 2 | | 2 அஷ்ட வர்க்கம் |
| 3 | | 3 வர்ணம் |
| 4 | | 4 இராசி பொருத்தம் ⑥ வ6 |
| B | | ***இராசி அதிபதி வழி / கிரக லக்ன வழி ஒன்று*** |
| 5 | | இராசி அதிபதிப் பொருத்தம் ⑦ வ7 |
| C | | ***நட்சத்திர வழி பதினெட்டு*** |
| 6 | | 1 தினம்/நட்சத்திரம் ① ★ வ1 |
| 7 | | 2 கணம் ② ★★ வ 2 |
| 8 | | 3 மாகேந்திரம் ③ ★ வ 3 |
| 9 | | 4 ஸ்திரி தீர்க்கம் ④ ★ வ 4 |
| 10 | | 5 யோனி ⑤ ★★ வ 5 |
| 11 | | 6 ரஜ்ஜு ⑨ வ 9 |
| 12 | | 7 வேதை ⑩ வ 10 |
| 13 | | 8 நாடி ⑪ |
| 14 | | 9 லாப நஷ்டம் (கேரளம்) |
| 15 | | 10 ரிஷி (கேரளம்) |
| 16 | | 11 பாண்டியன் (கேரளம்) |
| 17 | | 12 சோழன் (கேரளம் |
| D | | ***சோதிட கிரக சிந்தாமணி, பெரிய வருஷாதி நூல் வழி*** |
| 18 | | 13 மரம் வ 11 |
| 19 | | 14 பட்சி வ 12 |
| 20 | | 15 ஆயுட் சோதனை வ 13 |
| 21 | | 16 சாதி (வர்ணம்) வ 14 |
| 22 | | 17 ஊர் வ 15 |
| 23 | | 18 நட்சத்திர வேதை வ 16 |
| 24 | | சேவகன் வ 17 |
| 25 | | கூட்டாளி வ 18 |
| | | ***வேறு*** |
| 26 | | பூதம் |
| E | | ***சாமுத்திரிகா லட்சண வழி*** ஒன்று |
| 27 | | ரேகை |
| 28 | | ரிஷி (கேரளம்) |
| 29 | | நாட்டு (கேரளம்) |

| | |
|---|---|
| F | *ஓர் ஆய்வாளர் குறிப்பு* |
| | சே பக் 12 – 16 |
| 30 | 1 பால் பொருத்தம் |
| 31 | 2 கோத்திரப் பொருத்தம் |
| 32 | 3 இரத்தப் பிரிவுப் பொருத்தம் |
| 33 | 4 ஆயுள் பொருத்தம் |
| 34 | 5 பஞ்ச பூதப் பொருத்தம் |
| 35 | 6 நிறப் பொருத்தம் |
| 36 | 7 சாதிப் பொருத்தம் |
| G | *தொல்காப்பியர் கூறும் பத்து வகை* |
| 37 | பிறப்பு |
| 38 | குடிமை |
| 39 | ஆண்மை |
| 40 | ஆண்டு |
| 41 | உரு |
| 42 | நிறுத்த காம வாயில் |
| 43 | நிறை |
| 44 | அருள் |
| 45 | உணர்வு |
| 46 | திரு |
| H | *அபிதான சிந்தாமணி கூறும் பெயர்ப் பொருத்த வகையில்* |
| | பக்கம் 1210 – 1212 |
| 47 | 1 எழுத்து |
| 48 | 2 சொல் |
| 49 | 3 தானம் |
| 50 | 4 பால் |
| 51 | 5 உணா |
| 52 | 6 வருணம் |
| 53 | 7 நாள் |
| 54 | 8 சதி |
| 55 | 9 கணம் |

| | |
|---|---|
| I | *பொதுத் தகுதிகள் – 7* |
| 56 | 1 தகுதி |
| 57 | 2 நேர்மை |
| 58 | 3 குணம் |
| 59 | 4 உடல் |
| 60 | 5 உள்ளம் |
| 61 | 6 அறிவு |
| 62 | 7 வயது |
| J1 | *பெண்மை இலக்கணம் – 4 தொல்காப்பியர்* |
| 63 | 1 அச்சம் |
| 64 | 2 மடம் |
| 65 | 3 நாணம் |
| 66 | 4 பயிர்ப்பு |
| J2 | *ஆண்மை இலக்கணம் தொல்காப்பியர்* |
| 67 | 1 செறிவு |
| 68 | 2 அறிவு |
| 69 | 3 செம்மை |
| 70 | 4 செப்பு |
| K | *தோஷசாம்யம் லக்கின வழி – 5* |
| 71 | 1 செவ்வாய் தோஷம் |
| 72 | 2 இராகு தோஷம் |
| 73 | 3 சூரிய தோஷம் |
| 74 | 4 சனி தோஷம் |
| 75 | 5 வைநாசிக தோஷம் |
| L | *ஜாதக அனுகூலங்கள்* |
| 76 | 1 யோக அனுகூலம் |
| 77 | 2 ஜாதக அனுகூலம் |
| 78 | 3 தெசா சாந்தி |
| 79 | 4 ஜாதக கிரக நிலை |
| 80 | 5 ருது ஜாதக பலன் |
| 81 | 6 அஸ்தமன தோஷங்கள் |
| 82 | 7 பாவஸ்புடம் |
| M | திருமண நாள் பொருத்தம் |
| 83 | 1 முகூர்த்த விசேஷம் |
| 84 | 2 சந்தான யோகம் |
| 85 | 3 பரிஹாரப் பயன்கள் |

## 13. தசவிகிதப் பொருத்தப் பழம் பாடல்

தினம், கணஞ்ச, மகேந்திரம்
ஸ்திரிதீர்க்கம் யோனி மேவஸ :
ராசி, ராசியாத்பதி யோவஸய்
ரஜ்ஜுர் வேதாஸ் ததாய
புருஸ்ஸ வர்ண கூடஞ்ச
நாடி கூடம் பிரஸ்யதே
ஏதே துவாதஸ கூடாஸ்யு
கூட பேதா: ப்ரகீர்த்திகா

என்ற சோதிடப் பாடல் பன்னிரு வகைப் பொருத்தங்களைப் குறிக்கின்றது.

## 14. பதினொரு பொருத்த ஸ்லோகங்களும், பலன்களும்

*அட்டவணை – 17*

| வ. எண். | பொருத்தத்தின் பெயர் | அதற்கான ஸ்லோகம் | முக்கிய பலன் |
|---|---|---|---|
| 1 | தின/நட்சத்திர | தினாத் ஆயுஷ்யம் ஆரோக்யம் | ஆயுள் விருத்தி |
| 2 | கணம் | சோபனம் கணம் மேவ | மங்களத்தைக் குறிப்பது |
| 3 | மகேந்திரம் | மஹேந்திராத் புத்ர விருத்த ஸ்யாத் | சம்பத்து விருத்தி |
| 4 | ஸ்திரீ தீர்க்கம் | ஸ்திரீ தீர்க்காத் ஸர்வ சம்பத் | தீர்க்க மாங்கல்யம் – சகல சம்பத் விருத்தி |
| 5 | யோனி | யோநிதோ தம்பதி ஸ்நேஹா சூத்ரானாம் யோநி ரேவச | தம்பதி அந்நியோன்னியம் |
| 6 | ராசி | ராசீனாம் வம்ச விருத்தி கிருத் | வம்ச விருத்தி |
| 7 | ராசி அதிபதி | ஸந்தானாம் ராச்யாத்பதி | சந்ததி விருத்தி |
| 8 | வசியம் | வஸ்யாதி அன்யோன்ய விரித்தீஸ்யாத | அன்னியோன்னியம் தீர்க்க சுமங்கலித் தன்மை |
| 9 | ரஜ்ஜு | ரஜ்ஜுமாங்கல்ய விரித்திஸ்யாத் | மாங்கல்ய உத்தமம் |
| 10 | நாடி | | |
| 11 | வேதை | வேதாய சோக நாசனம் | துக்க நீக்கம் |

பத்தாயினும், பதினொன்றாயினும், பன்னிரண்டாயினும் தசவிகிதப் பொருத்தம் என்பது மரபு.

## 15. தின (நட்சத்திரம்) பொருத்தம்

01. **ம**ணமகள், மணமகளின் ஜன்ம ராசிகளின் அதிபதிகள் ஒரே கிரகமாக இருந்தால், அவர்கள் நட்பாக இருக்கும் போதும், இந்த இராசிகள் சமசப்தமாக இருந்தாலும் ரஜ்ஜு, கணம், வேதை, ராசி முதலிய பொருத்தங்கள் பார்க்காது திருமணம் செய்யலாம்.

### 02. பொருத்தம் வேண்டாப் பொருத்த நட்சத்திரங்கள்

மிருகசீரிஷம், மகம், சுவாதி, அனுஷம் என்ற நட்சத்திரங்களில் ஒன்று மணமகன் அல்லது மணமகளின் நட்சத்திரமானால் பத்துப் **பொருத்தங்களும் பாராமல்** திருமணம் செய்யலாகும்.

### 03. உத்தம பொருந்தும் நட்சத்திரங்கள்

ரோகிணி, திருவாதிரை, பூசம், மகம், ஹஸ்தம், திருவோணம், உத்திரட்டாதி, ரேவதி ஆகிய நட்சத்திரங்கட்குள் பெண், பையன் நட்சத்திரங்கள் அமையுமானால் திருமணம் செய்ய உத்தமம்.

### 04. மத்யம பொருந்தும் நட்சத்திரங்கள்

அசுவதி, கார்த்திகை, மிருகசீரிஷம், புனர்வசு, சித்திரை, அனுஷம், உத்திரட்டாதி, சதயம் ஆகிய நட்சத்திரங்களுள் பெண், பையன் நட்சத்திரங்கள் அமையுமானால் திருமணப் பொருத்தம் மத்யமம் ஆகும்.

### 05. அதமப் பொருத்த நட்சத்திரங்கள்

பரணி, ஆயில்யம், பூரம், சுவாதி, மூலம், பூராடம், அவிட்டம், கேட்டை, விசாகம், பூரட்டாதி ஆகிய நட்சத்திரங்கட்குள் பெண், பையன் நட்சத்திரங்கள் அமையுமானால் திருமணப் பொருத்தம் அதமம் ஆகும்.

### 06. ஏக (ஒரே) நட்சத்திரம் உத்தம நிலை

ஆண், பெண் நட்சத்திரங்கள் ஒரே நட்சத்திரமானால் ரோகினி, திருவாதிரை, மகம், ஹஸ்தம், விசாகம், திருவோணம், உத்திரட்டாதி, ரேவதி இவை உத்தமம். ரோகினி ஏக நட்சத்திரமாயின் மிகவும் விசேசம். பூசம் ஏக நட்சத்திரமானால் உத்தமமென்பதும் உண்டு.

## 07. மத்திம நிலை

அசுவதி, கார்த்திகை, மிருகசீரிஷம், புனர்வசு, பூசம், பூரம், உத்திரம், சித்திரை, அனுஷம், பூராடம், உத்திராடம் ஆகியவை மத்தியமம் என்பதுமுண்டு.

## 08. பொருந்தா ஏக நட்சத்திர நிலை

சுவாதி, மூலம், அவிட்டம், பூரட்டாதி முதலியன ஆண் பெண்ணுக்கு ஒரே நட்சத்திரமாயின் பொருந்தாது.

பரணி, ஆயில்யம், சதயம் முதலியனவும் பொருந்தாது என்பதும் உண்டு.

## 09. பொருந்தும் சுவாதி

சுவாதி நட்சத்திரம் யாருக்கு இருந்தாலும் **பொருத்தம் பார்க்காமல்** திருமணம் செய்யலாம் என ஒரு நியதி கூறப்பட்டுள்ள மையால் ஏக நட்சத்திர நிலையில் சுவாதி பொருந்தும் என்பர்.

## 10. ஏக நட்சத்திர முதல்பாத தோஷமின்மை

சதயம், ஹஸ்தம், சுவாதி, அசுவதி, கார்த்திகை, பூராடம், மிருக சீரிஷம், மகம் இவை **ஏக நட்சத்திரமானால் முதல் பாதத்தில்** இருவரும் பிறந்திருந்தால் தோஷமில்லை.

## 11. பெண் நட்சத்திரத்துக்குப் பிந்தியதாயினும்

ஆண்மகனின் நட்சத்திரம், அசுவதி, கார்த்திகை, மிருகசீரிஷம், மகம், ஹஸ்தம், சுவாதி, பூராடம், சதயம் ஆயவற்றுள் ஒன்றானால் பெண்ணின் நட்சத்திரத்திற்குப் **பிந்தியதாக** இருந்தாலும் திருமணம் செய்விக்க சுபமாகும்.

## 12. ஏக நட்சத்திர, ராசி வித்யாச உத்தம நிலை

ஆண் பெண் நட்சத்திரம், ஒரே நட்சத்திரமாக இருந்து, இரண்டும் வெவ்வேறு ராசியில் இருந்தால், **முந்திய ராசியில் ஆணின் நட்சத்திரத்தின் பாதமும்**, பிந்திய ராசியில் பெண்ணின் நட்சத்திர பாதமும் இருந்தாலும் திருமணம் செய்விக்க உத்தமம் ஆகும்.

## 13. தோஷமில்லா ஏக நட்சத்திரம்

உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ஹஸ்தம், சுவாதி, மிருகசீருடம், அனுஷம் ஆகிய ஏழு நட்சத்திரங்களுக்கும் விபத்து, பிரத்தியர, வத **தோஷங்கள் இல்லை**. ஆகையால் திருமணம் செய்யலாம்.

## 14. ஐந்தாவது நட்சத்திரச் சிறப்பு

ஐந்தாவது நட்சத்திரம், எந்த நட்சத்திரமாயினும் திருமணம் செய்யலாம் தோஷமில்லை.

## 15. தொகை வகை உத்தம நிலை

பெண்ணின் நட்சத்திரம் முதல் ஆணின் நட்சத்திரம் வரை எண்ணிய எண்ணின் தொகை 2, 4, 6, 8, 9 ஆனால் தினப் பொருத்தம் உத்தமம். தினப் பொருத்தம் என்பது நட்சத்திரப் பொருத்தமே.

## 16. எட்டாவதானால் உத்தமம்

பின்வரும் எட்டு நட்சத்திரங்களும் எட்டாவது நட்சத்திரமானால் சுப பலன் நல்கும். திருமணம் செய்ய உத்தமம். அவற்றின் சிறப்புக்கள் தரப்படுகின்றன.

## 17. சுப நிலைகள் உத்தமப் பொருத்தம்

| | பெண் | ஆண் | பலன் |
|---|---|---|---|
| 1. | பரணி | பூசம் | நல்ல எதிர்காலம் |
| 2. | திருவாதிரை | உத்திரம் | மகிழ்ச்சி |
| 3. | பூசம் | சித்திரை | நிம்மதி, மகிழ்ச்சி |
| 4. | பூரம் | அனுஷம் | ,, |
| 5. | புனர்வசு | ஹஸ்தம் | நன்மை |
| 6. | உத்திராடம் | ரேவதி | அதிக சுமை |
| 7. | மூலம் | பூரட்டாதி | ஐஸ்வர்ய விருத்தி |
| 8. | பூராடம் | உத்திரட்டாதி | அன்புறவு நெருக்கம் |

## 18. அசுப நிலைகள் - பொருத்தமின்மை

| | | | |
|---|---|---|---|
| 1. | கேட்டை | சதயம் | குடும்ப அழிவு |
| 2. | மிருகசீரிஷம் | பூரம் | ஏழ்மை |
| 3. | ஹஸ்தம் | மூலம் | ஏழ்மை |
| 4. | ரோகிணி | மகம் | அதிக மக்கட்செல்வம் |
| 5. | பூரட்டாதி | ரோகிணி | அதிக மக்கட்செல்வம் |
| 6. | அசுவதி | புனர்வசு | பெண் மக்கள் மிகுதி |
| 7. | சுவாதி | உத்திராடம் | பெண் மக்கள் மிகுதி |
| 8. | மகம் | விசாகம் | ஆண் மக்கள் குறைவு |
| 9. | ரேவதி | திருவாதிரை | ஆண் மக்கள் குறைவு |
| 10. | உத்திரம் | கேட்டை | ஆண் மக்கள் குறைவு |
| 11. | விசாகம் | திருவோணம் | தம்பதியர் பிரிவு |
| 12. | திருவோணம் | அசுவதி | தம்பதியர் பிரிவு |
| 13. | உத்திரட்டாதி | மிருகசீரிஷம் | இளமையிலேயே பிரிவு |

## 19. சில மத்யம் நிலை-

ஆண் பெண் நட்சத்திரங்கள் பின்வருமாறு அமைவது மத்யமப் பொருத்த நிலை என்பர்.

| | ஆண் | பெண் |
|---|---|---|
| 1. | கார்த்திகை | ஆயில்யம் |
| 2. | ஆயில்யம் | சுவாதி |
| 3. | சித்திரை | பூராடம் |
| 4. | அவிட்டம் | பரணி |
| 5. | சதயம் | கார்த்திகை |
| 6. | அனுஷம் | அவிட்டம் |

## 20. நவாம்ச இராசி அதம நிலைகள்

சிலர் நவாம்சத்தில், பெண்ணின் சந்திரன், ஆணின் நவாம்ச சந்திரனின்று நான்காவது இராசியில் இருத்தல் கூடாது என்பர்.

## 21. பாத விலக்கு

சிலர் ஆண் நட்சத்திலிருந்து, பெண் நட்சத்திரம் எட்டாம் பாதமாகில் மட்டும் கூடாது என்பர்.

## 22. ஆகாத் தொகை எண் நிலை

பெண் நட்சத்திரம் முதல் ஆண் நட்சத்திரம் வரை எண்ணிய தொகை 12, 14, 16 ஆகுமாயின் திருமணம் கூடாது.

## 23. பாத நிலைகளில் விலக்கு

இவ்வற்றுள் பன்னிரண்டாம் நட்சத்திரம் முதல் பாதம், பதினான்காம் நட்சத்திரம் நான்காம் பாதம், பதினாறாம் நட்சத்திரம் மூன்றாம் பாதம் தவிர மற்றவை சுபம் என்னும் விசேட விதியும் கூறப்படுகின்றது.

## 24. ஆகாத இருபத்திரண்டு

பெண் நட்சத்திரம் முதல், ஆண் நட்சத்திரம் வரை எண்ணிய தொகை 22 வரின் ஆகாதென்பர்.

## 25. சில விலக்குப் பொருத்தம்

இவண், ஏழாவது நட்சத்திரத்துக்கு முன் குறிப்பிடப்பட்டுள்ளபடி அமைந்தால் பொருந்தும் என்ற விசேட விதி கூறப்படுகின்றது.

## 26. சந்திரன் நிலையால் விசேடம்

மேலும் 21, 23, 25 ஆம் நட்சத்திரங்களாயின், சந்திரன் சுப நவாம்சங்களில் இருந்தால் உத்தமம் என்னும் விசேட விதி கூறப்படுகின்றது.

## 27. ஏகராசியில் உத்தமம்

இருபத்தேழாம் நட்சத்திரம் வருகையில், பெண்ணின் நட்சத்திரமும், ஆணின் நட்சத்திரமும் ஒரே ராசியில் இருப்பது உத்தமம்.

அடுத்தடுத்த ராசி பொருத்தமில்லை.

## 28. ஏக நட்சத்திர இராசி வித்தியாச சுப நிலை

இரண்டு ராசிகள் கூடிய நட்சத்திரத்தில், ஒரே நட்சத்திரமாகில், பிள்ளை நட்சத்திரம் முன்னும் பெண் நட்சத்திரம் பின்னுமாக வரின் சுபம்.

பெண் ராசி முன்னும் ஆண் ராசி பின்னும் வந்தால் விலக்கவும். இவை விசேட விதி.

## 29. ஏகராசியில் நலம் தரு எட்டு

சதயம், அசுவதி, அஸ்தம், சுவாதி, கிருத்திகை, பூராடம், ரோகிணி, மகம் ஆகிய எட்டும் ஏக ராசியில் பெண் முன் வந்தால் நலமாகும்.

## 30. பின்னராசியில் தோஷமின்மை

ஹஸ்தம், சுவாதி, ரோகிணி, மிருகசீரிஷம், திருவோணம், ரேவதி, உத்திரம், உத்திராடம், அவிட்டம், புனர்வசு, சித்திரை ஆகிய பதினொரு நட்சத்திரங்களும் இருபத்தேழாவது நட்சத்திரமாகி, பின்ன ராசியில் வந்தாலும் தோஷமில்லை. சுபம்.

## 31. உத்தம ஏக நட்சத்திரங்கள்

பூராடம், பரணி, ஆயில்யம், ஹஸ்தம், மிருகசீரிஷம், சதயம் ஆகிய ஆறும் ஏக நட்சத்திரமானால் திருமணம் செய்ய உத்தமம்.

## 32. நீக்கச் சில

ஒரே ராசியில், பரணி, கார்த்திகை, அவிட்டம், சதயம், பூசம், ஆயில்யம் ஆயனவற்றுள் ஆண் நட்சத்திரம் முன்வரின் நீக்க வேண்டும்.

## 35. இருபத்தேழாவது நட்சத்திரம்

பொது விதிப்படி இருபத்தேழாவது நட்சத்திரம் பொருந்த வேண்டும். ஆனால் அந்நட்சத்திரம் பெண்ணின் நட்சத்திர ராசிக்குள் அடங்குமானால் மட்டும் பொருந்தும்.

எடுத்துக்காட்டாக, அசுவனிக்கு இருபத்தேழாவது நட்சத்திரம் ரேவதி. அசுவனி மேஷராசி, ரேவதி மீனராசியாவதால் பொருத்தம் கணக்கில் ஆறாக வந்தாலும் நன்றன்று.

பூராடத்திற்கு இருபத்தேழாவது நட்சத்திரம் மூலம். இவ்விரண்டு நட்சத்திரமும் தனுசு ராசியில் அடங்குவதால் பொருத்தம் உண்டு. பிற நட்சத்திரங்கட்கும் இவ்வாறே பார்த்தல் நன்று.

## 36. பதினேழாவது நட்சத்திரம்

எல்லா நட்சத்திரத்துக்கும் அஷ்டம ராசிக்குரிய நட்சத்திரமாக பதினேழாவது நட்சத்திரம் மட்டும் வருவதால், பொருத்தம் இருந்தாலும் அதனை நீக்குவது நன்றென்பது பொதுவிதி.

பொதுவாக அஷ்டம ராசிக்குரிய நட்சத்திரங்களை விலக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, பெண் ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்திருந்தால் ரிஷப ராசியாகும். ரிஷபத்துக்கு அஷ்டம ராசி தனுசுவாகும். தனுசுக்குள் மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை அடங்கும்.

ரோகிணி நட்சத்திரத்துக்கு மூலம், பூராடம் முதலியன பொருத்த முடையதாக இருந்தாலும் விலக்குவதே நன்று. அஷ்டம ராசிக்குரிய நட்சத்திரங்கள் பொருந்தாது என்பது இன்றியமையாதது.

இதில் உத்திராடம் முதல் வரை தான் வருகின்றது. மற்ற 2, 3, 4 ஆம் பாதங்கள் மகரமான ஒன்பதாவது ராசியுள் வருவதால் பாதங்களை கவனித்துச் செய்தல் நன்று.

## 37. பொருந்தாதன பொருந்துவது

பொருந்தும் என்ற வரிசையில் வராத, பன்னிரண்டு, பதினாறாவது நட்சத்திரங்களில், பன்னிரண்டாவது நட்சத்திரமாக இருந்து, அதில் நான்காவது பாதத்தையும், பதினாறாவது நட்சத்திரமாக இருந்தால் அதில் மூன்றாவது பாதத்தையும் நீக்கி விட்டு மற்ற பாதங்களாக இருந்தால் பொருந்தும் என்பர்.

எடுத்துக்காட்டாக, புனர்பூசத்திற்கு, பன்னிரண்டாவது நட்சத்திரம் கேட்டை. பதினாறாவது நட்சத்திரம் பரணி. பொது விதிப்படி பொருந்தாது என்றாலும், பரணியில் ஒன்று, இரண்டு, நான்காம் பாதங்களாக இருந்தாலும பொருந்தும் என்பர்.

## 38. தவிர்க்க வேண்டிய சில

01. ஏழாவது நட்சத்திரமான கிருத்திகைக்கு ஆயில்யமும், ஆயில்யத்திற்குச் சுவாதியும், சித்திரைக்குப் பூராடமும், அனுஷத்திற்கு அவிட்டமும், அவிட்டத்திற்குப் பரணியும், சதயத்திற்குக் கிருத்திகையும் போன்ற நிலைகளில் திருமணம் பொருந்தாது எனக் கொள்வதே நன்று. மீறிச் செய்தால் தோஷங்கள் ஏற்படும்.

02. இதே போல், மிருக சீரிடத்திற்குப் பூரம், திருமணம் செய்தால் எதிர்பாராத விபத்துக்கள் ஏற்பட்டு தோஷமுண்டாகும்.

03. அஸ்தத்திற்கு மூலம் திருமணம் முடிந்தால் தம்பதிகள் வாழ்க்கையில் முன்னேற இயலாது வறுமையில் வாடுவர்.

04. விசாகத்திற்குத் திருவோணம் திருமணம் செய்தால், கணவன் மனைவி இருவரும் பரஸ்பரம் பகைவர்களாக ஒற்றுமை இன்றி வாழ்வர்.

05. ரேவதிக்கும், திருவாதிரைக்கும் திருமணம் செய்தாலும் தம்பதியர் உறவு ஒற்றுமை இன்றியே இருக்கும்.

06. சுவாதிக்கும் உத்திராடத்திற்கும் திருமணம் புரிந்தால், அவர்கட்கு ஆண் சந்ததியை விடப், பெண் மக்களே அதிகம் அமையும். அசுவனிக்கும், புனர்பூசத்திற்கும் திருமணம் செய்தாலும் இதே நிலையே ஆகும்.

07. கேட்டைக்கும் சதயத்திற்கும் மணம் செய்வது வம்ச விருத்திக்கு நன்றன்று.

08. கேட்டைக்கு உத்திராடம் இருபத்தி இரண்டாவது நட்சத்திரமாக இருந்து, பொருத்தம் இருந்தாலும், தம்பதிகள் ஒற்றுமை இன்றியே இருப்பர்.

## 39. சில விதி விலக்குகள்

01. பரணிக்குப் பூசம் ஏழாவது நட்சத்திரமாக இருந்தாலும், திருமண வாழ்க்கை சகல வசதிகளுடன் அமையும்.

02. ரோகிணிக்கு மகம் திருமணம் செய்தால், தம்பதிகளின் வம்ச விருத்தி நன்கமையும்.

03. மூலத்திற்குப் பூரட்டாதி மணம் புரிவது, சகல சௌபாக்யங்கட்கும் நன்று.

04. பூரத்திற்கு அனுஷமும், புனர்பூசத்திற்கு ஹஸ்தமும் திருமணம் செய்தால் தோஷமின்றி பொருத்தம் அமையும்.

05. மேற்கண்ட விதிகளையும் விதிவிலக்குகளையும் கவனித்து நட்சத்திரப் பொருத்தம் இருந்தால் மட்டுமே திருமணம் செய்வது நன்று.

06. ஏக நட்சத்திரம் பொருந்தும் என்ற விதி, பரணி, ஆயில்யம், சுவாதி, மூலம், அவிட்டம், சதயம், பூரட்டாதி ஆகிய நட்சத்திரங்கட்குப் பொருந்தாது.

07. ஆனால், நட்சத்திரம் ஒன்றாக இருந்து பாதங்கள் வேறு பட்டிருந்து ராசியிலும் மாறுபட்டிருந்தால் செய்யலாம் என்ற புறநடை விதியும் உண்டு. அதிலும் ஆணின் ராசி முந்தினதாகவும், பெண் ராசி பிந்தினதாகவும் இருந்தால் மட்டுமே செய்யலாம். இன்றேல் கூடாது.

08. திருமணப் பொருத்தம் பார்க்கும்போது, ***பெண் நட்சத்திரத்தையே முதன்மையாகக் கொண்டு முடிவு செய்ய வேண்டும்.*** ஆண் நட்சத்திரத்தினின்று, பெண் நட்சத்திரத்துக்குப் பொருத்தம் பார்ப்பது முறை அன்று.

## 40. சில ஐயமிகு செய்திகள்

01. பெண் நட்சத்திரம் மூலமானால் மாமனாருக்கு ஆகாது.

02. பெண் நட்சத்திரம் கேட்டையானால் கணவனின் மூத்தவனுக்கு ஆகாது.

03. பெண் நட்சத்திரம் விசாகம் ஆனால் கணவனின் இளையவனுக்கு ஆகாது.

04. ஆண் நட்சத்திரம் ஆயில்யம் ஆனால் மாமியாருக்கு ஆகாது.

05. பெண் அல்லது ஆண் நட்சத்திரம் மிருகசீரிடம், மகம், சுவாதி, அனுஷமாக இருந்தால் பொருத்தம் பாராமல் திருமணம் செய்யலாம் என்ற கருத்தும் உண்டு. இவைகட்கு விதிவிலக்கு, பரிகாரம் முதலியன பெறலாம்.

## 41. சில சிறப்புக்கள்

01. நட்சத்திரப் பொருத்தம் என்னும் தினப்பொருத்தம் நன்கமைந்தால் மணமக்கள் சுகஜீவியாய் நன்கு வாழ்வர். நட்சத்திரப் பொருத்தம் அமையாமல் திருமணம் செய்தால் வியாதியும், அவஸ்தைகளும் ஏற்படும்.

02. பெண்ணின் ஜன்ம நட்சத்திரம் முதல் ஆணின் ஜன்ம நட்சத்திரம் வரையில் எண்ணி, ஒன்பதால் வகுத்த மீதம் 2, 4, 6, 8, 9 ஆக வருமானால் உத்தமம். 1, 3, 5, 7 ஆக வரின் பொருத்தமில்லை.

03. பரணி, ஆயில்யம், சுவாதி, கேட்டை, மூலம், அவிட்டம், சதயம், பூரட்டாதி ஆகிய எட்டு நட்சத்திரங்களும் ஆண் பெண் இருவருக்கும் ஏக நட்சத்திமானால் பொருத்தம் இல்லை.

04. பெண் நட்சத்திரம் முதல் ஆண் நட்சத்திரம் வரை எண்ணும் போது 2, 4, 6, 8, 9, 11, 13, 15, 17, 18, 20, 21, 23, 24, 26 நட்சத்திரங்களாக வரின் உத்தமம்.

05. 3, 5, 7, 10 முதலியன மணமகனின் நட்சத்திரமாக வந்தால் நட்சத்திரப் பொருத்தம் கூடிவரவில்லை என்றும் அதமம் என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

06. மணப்பெண் நட்சத்திரம் முதல் மணமகன் நட்சத்திரம் வரை கணக்கிடும்போது ஒன்பதுக்கு மேல் வந்தால் ஒன்பதால் வகுக்க வேண்டும். வகுத்த மிச்சம் 2, 4, 6, 8, 9 ஆக வந்தால் உத்தமம் என்றும் 3, 5, 7 ஆக வந்தால் அதமம் என்றும் கொள்க.

இவ்வாறு ஒன்பதால் வகுத்த வந்த மீதி

ஒன்று என்றால் ஜன்ம தாரை
இரண்டு என்றால் சம்பத்து
மூன்று என்று வந்தால் விபத்து
நான்கு என்று வந்தால் சுகம்
ஐந்து என்றால் பிரத்யாதாரை என்னும் பீடை
ஆறு என்று வந்தால் சாதகம் என்னும் லாபம்
ஏழு என்று வந்தால் வதை என்னும் ரோகம்
எட்டு என்று வந்தால் மைத்ர தாரை என்னும் மித்ரு-நட்பு
ஒன்பது என்று வந்தால் பரம மைத்ரம் என்னும் அந்நியோன்யம்.

எடுத்துக்காட்டாக,

பெண்ணுக்கு அசுவதி ஆணுக்குக் கார்த்திகை. இது மூன்றாவது நட்சத்திரம். பொருத்தமில்லை. அது போன்றே மிருக சீரிடம் ஐந்தாவது நட்சத்திரம் பொருத்தமில்லை. அது போன்றே ஏழாவது ஆண் நட்சத்திரம் புனர்பூசம் பொருத்தமில்லை.

07. பெண்ணுக்கு அசுவதி, ஆணுக்கு உத்திரம். அசுவதி முதல் உத்திரம் பன்னிரண்டாவது நட்சத்திரம். இதை ஒன்பதால் வகுத்தால் மீதி மூன்று பொருத்தமில்லை.

08. பெண்ணுக்கு அசுவதி, ஆணுக்கு உத்திராடம். அசுவதி முதல் உத்திராடம் இருபத்து ஒன்றாவது நட்சத்திரம். இதனை ஒன்பதால் வகுத்தால் மூன்று மீதி வரும். மூன்று விபத்து பொருத்தமில்லை.

09. பெண்ணுக்கு அசுவதி, ஆணுக்குச் சித்திரை. இது பதினான்காவது நட்சத்திரம். இதனை ஒன்பதால் வகுத்தால் ஐந்து மீதி வரும். ஐந்து பிரத்யாதாரை என்னும் பீடை பொருந்தாது.

10. பெண்ணுக்கு அசுவதி, ஆணுக்கு விசாகம் பதினைந்தாவது நட்சத்திரம். இதை ஒன்பதால் வகுத்தால் மீதி ஏழு வரும். ஏழு வதை என்னும் ரோகம் பொருந்தாது.

3, 5, 7 பொருத்தமில்லை என்பதற்கு இவை சான்றுகள்.

## நட்சத்திர வரிசை எண்ணுவதற்கு வசதியான பட்டியல் (அ –18)

நட்சத்திரங்கள் 27. பெண்ணின் நட்சத்திரத்திலிருந்து ஆணின் நட்சத்திரம் வரை எண்ண வேண்டியது வரும்போது, அவ்வரிசை அசுபதி தொடங்கி ரேவதி முடிந்து மேலும் போகும் போது எண்ண இது உதவும்.

| நட்சத்திரம் | நட்சத்திர வரிசை எண் | நட்சத்திர வரிசை எண் | நட்சத்திரம் |
|---|---|---|---|
| அசுபதி | 1 | 27 | ரேவதி |
| பரணி | 2 | 26 | உத்திரட்டாதி |
| கார்த்திகை | 3 | 25 | பூரட்டாதி |
| ரோகிணி | 4 | 24 | சதயம் |
| மிருகசீரிஷம் | 5 | 23 | அவிட்டம் |
| திருவாதிரை | 6 | 22 | திருவோணம் |
| புனர்பூசம் | 7 | 21 | உத்திராடம் |
| பூசம் | 8 | 20 | பூராடம் |
| ஆயில்யம் | 9 | 19 | மூலம் |
| மகம் | 10 | 18 | கேட்டை |
| பூரம் | 11 | 17 | அனுஷம் |
| உத்திரம் | 12 | 16 | விசாகம் |
| ஹஸ்தம் | 13 | 15 | சுவாதி |
| சித்திரை | 14 | 14 | சித்திரை |
| சுவாதி | 15 | 13 | ஹஸ்தம் |
| விசாகம் | 16 | 12 | உத்திரம் |
| அனுஷம் | 17 | 11 | பூரம் |
| கேட்டை | 18 | 10 | மகம் |
| மூலம் | 19 | 9 | ஆயில்யம் |
| பூராடம் | 20 | 8 | பூசம் |
| உத்திராடம் | 21 | 7 | புனர்பூசம் |
| திருவோணம் | 22 | 6 | திருவாதிரை |
| அவிட்டம் | 23 | 5 | மிருகசீரிஷம் |
| சதயம் | 24 | 4 | ரோகிணி |
| பூரட்டாதி | 25 | 3 | கார்த்திகை |
| உத்திரட்டாதி | 26 | 2 | பரணி |
| ரேவதி | 27 | 1 | அசுபதி |

## நட்சத்திர பாதங்களின் பலன்கள் (அட்டவணை –19)

| நட்சத்திர வ. எண். | நட்சத்திரம் | செயல் | முதல் பாதம் |
|---|---|---|---|
| 1 | அசுவனி | குழந்தை பிறத்தல் | தந்தைக்கு கெண்டம் மகன் கெண்டம் |
| 2 | பரணி | ஆண் குழந்தை பெண் குழந்தை | தந்தைக்கு கெண்டம் தாய்க்கு கெண்டம் |
| 3 | ரோகிணி | குழந்தை பிறத்தல் | மாமன் (அம்மான்) கெண்டம் |
| 4 | பூரம் | கடக லக்னத்தில் பிறத்தல் | தகப்பனுக்கு கெண்டம் |
| 5 | மகம் | குழந்தை பிறத்தல் | தகப்பனுக்கு கெண்டம் |
| 6 | உத்திரம் | குழந்தை பிறத்தல் | தகப்பனுக்கு கெண்டம் |
| 7 | அஸ்தம் | குழந்தை பிறத்தல் | தோஷமில்லை |
| 8 | சித்திரை | ஆண் குழந்தை பெண் குழந்தை | தகப்பனார் கெண்டம் தாய்க்கு கெண்டம் |
| 9 | பூராடம் | தனுர் லக்னத்தில் பிறத்தல் குழந்தை பிறத்தல் | தோஷமாகும் தகப்பனார் கெண்டம் |
| 10 | உத்திரட்டாதி | குழந்தை பிறத்தல் | ஆண் ஆனால் தாயாருக்கு கெண்டம் |
| 11 | ரேவதி | குழந்தை பிறத்தல் | தோஷமில்லை |

# நட்சத்திர பாதங்களின் பலன்கள்

| ந. வ. எண். | இரண்டாம் பாதம் | மூன்றாம் பாதம் | நான்காம் பாதம் |
|---|---|---|---|
| 1 | தாய்க்குக் கெண்டம் | தனநாசம் | அக சௌக்கியம் |
| 2 | தந்தைக்கு கெண்டம்<br>தாய்க்கு கெண்டம் | தந்தைக்கு கெண்டம்<br>தாய்க்கு கெண்டம் | தோஷமில்லை<br>தோஷமில்லை |
| 3 | மாமன் (அம்மான்) கெண்டம் | மாமன் (அம்மான்)<br>கெண்டம் | மாமன் (அம்மான்)<br>கெண்டம் |
| 4 | தகப்பனுக்கு<br>கெண்டம் | தகப்பனுக்கு<br>கெண்டம் | தகப்பனுக்கு<br>கெண்டம் |
| 5 | தாய்க்கு கெண்டம் | தன நாசம் | சுக சௌக்கியம் |
| 6 | தகப்பனுக்கு கெண்டம் (ஆண்)<br>தாய்க்கு கெண்டம் (பெண்) | தோஷமில்லை | தோஷமில்லை |
| 7 | தோஷமில்லை | தகப்பனார் கெண்டம்<br>(ஆண் என்றால்)<br>தாய்க்கு கெண்டம்<br>(பெண் என்றால்) | தோஷமில்லை |
| 8 | தகப்பனார் கெண்டம்<br>தாய்க்கு கெண்டம் | தகப்பனார் கெண்டம்<br>தாய்க்கு கெண்டம் | தோஷமில்லை<br>தோஷமில்லை |
| 9 | தோஷமாகும்<br>தாயாருக்கு கெண்டம் | தோஷமாகும்<br>மூத்தோர் கெண்டம் | தோஷமாகும்<br>தாய் சகோதரருக்கு<br>கெண்டம் |
| 10 | தோஷமில்லை | தோஷமில்லை | தோஷமில்லை |
| 11 | தோஷமில்லை | தோஷமில்லை | தாய் தந்தையர், உடன்<br>பிறந்தவர்களுக்கு<br>கெண்டம்.<br>சிலர் ஆண் ஆனால்<br>தகப்பனாருக்கு<br>சிலர் பெண் ஆனால்<br>தாய்க்கு கெண்டம் |

தேவ மனித இராட்சச





# 16. கணப்பொருத்தம்

கணம் என்பது தொகுப்பு என்ற பொருளுடைய சொல். திருமணப் பொருத்தங்களில் வரும் கணப் பொருத்தம் என்பது, ஜாதக ரீதியாக, மணமகன், மணமகள் தேவ கணம், மனித கணம், இராட்சச கணம் என்ற மூவகையுள் எவ்வகையினைச் சேர்ந்தவர் என்பதை, அவர் தம் நட்சத்திர வழி அறியும் வழி முறையாகும். தேவ கணம் அமைவோர் உயர் பண்பாளராயமைவர். இராட்சச கணமுடையோர் பண்பிற் தாழ்ந்தவராவர்.

**முக்குணங்கள் :** சத்துவ குணம், ரஜோ குணம், தாமச குணம் என்ற மூன்று குண வகைகளை இம்மூன்று கண வகைகளும் எனவும் கொள்ளலாம்.

" அசுவனி, ரோகிணி, புனர்பூசம், மகம்
அஸ்தம், விசூகம், மூலம், திருவோணம்
பூரட்டாதி இவை ஒன்பதும் சத்வ குணம்"

பரணி, மிருக சீரிடம், பூசம், பூரம்
சித்திரை, அனுஷம், பூராடம், அவிட்டம்
உத்திரட்டாதி இவை ஒன்பதும் ரஜோகுணம்"

கிருத்திகை, திருவாதிரை, ஆயில்யம், உத்திரம்
சுவாதி, கேட்டை, உத்திராடம், சதயம்
ரேவதி இவை ஒன்பதும் தமோ குணம்" என

இது ஒரு பழம் பாடலில் வருவதாக நூலோர் நவில்வர்.

தம்பதிகட்குக் கணப் பொருத்தம் சரிவர அமையாவிடில், அயன (பயணம்), சயன (உறக்க போகம்), போக பாக்கியமும், தாம்பத்திய உறவில் அந்நியோன்யமும் அமையாது என்பது உண்மை.

நட்சத்திரவாரி கணம் குணம் முதலியன காட்டும் அட்டவணை பின்வருகின்றது.

# கணப் பொருத்தம்

## அட்டவணை – 20

| பெண்ணின் கணம் | ஆணின் கணம் | பொருத்த நிலை |
|---|---|---|
| 1. ஒரே கணம் | ஒரே கணம் | உத்தமம் சுபம் |
| 2. தேவன் | மனிதன் | உத்தமம் |
| 3. மனிதன் | தேவன் | உத்தமம் சுபம் |
| 4. இராட்சசம் | தேவன் | அதமம் |
| 5. மனிதன் | இராட்சசம் | மத்திமம் |
| 6. தேவன் | இராட்சசம் | மத்திமம் |
| 7. இராட்சசம் | மனிதன் | அதமம் (மிருத்யு) |

# நட்சத்திரங்களும் அவற்றிற்கான கணங்களும்

## அட்டவணை – 21

| தேவ கணம் | மனித கணம் | இராட்சச கணம் |
|---|---|---|
| 1 அசுபதி | 2. பரணி | 3. கார்த்திகை |
| 5 மிருக சீரிஷம் | 4. ரோகிணி | 9. ஆயில்யம் |
| 7 புனர்பூசம் | 6. திருவாதிரை | 10. மகம் |
| 8 பூசம் | 11. பூரம் | 14. சித்திரை |
| 13 அஸ்தம் | 12. உத்திரம் | 16. விசாகம் |
| 15 சுவாதி | 20. பூராடம் | 18. கேட்டை |
| 17 அனுஷம் | 21. உத்திராடம் | 19. மூலம் |
| 22 திருவோணம் | 25. பூரட்டாதி | 23. அவிட்டம் |
| 27 ரேவதி | 26. உத்திரட்டாதி | 24. சதயம் |

# சாமுத்ரிகா லட்சண நால்வகைக் கணங்கள்

## அட்டவணை – 22

| | பெண் | ஆண் |
|---|---|---|
| 1 முதல் வகை | பத்மினி | முயல் ஜாதி |
| 2. 2ம் வகை | சித்தினி | மான் ஜாதி |
| 3. 3ம் வகை | சங்கினி | காளை ஜாதி |
| 4. 4ம் வகை | அத்தினி | குதிரை ஜாதி |

நட்சத்திர வரிசையில் கணம், குணம், யோனி ***அட்டவணை – 23***

| | ***நட்சத்திரம்*** | ***கணம்*** | ***குணம்*** | ***மிருகம் (யோனி)*** |
|---|---|---|---|---|
| 1 | அசுபதி | தேவ | சத்துவ | ஆண் குதிரை |
| 2 | பரணி | மனித | ரஜோ | ஆண் யானை |
| 3 | கார்த்திகை | இராட்சச | தாமச | பெண் ஆடு |
| 4 | ரோகிணி | மனித | சத்துவ | ஆண் நாகம் |
| 5 | மிருகசீரிடம் | தேவ | ரஜோ | பெண் சாரை |
| 6 | திருவாதிரை | மனித | தாமச | ஆண் நாய் |
| 7 | புனர்பூசம் | தேவ | சத்துவ | பெண் பூனை |
| 8 | பூசம் | தேவ | ரஜோ | ஆண் ஆடு |
| 9 | ஆயில்யம் | இராட்சச | தாமச | ஆண் பூனை |
| 10 | மகம் | இராட்சச | சத்துவ | ஆண் எலி |
| 11 | பூரம் | மனித | ரஜோ | பெண் எலி |
| 12 | உத்திரம் | மனித | தாமச | எருது |
| 13 | ஹஸ்தம் | தேவ | சத்துவ | பெண் எருமை |
| 14 | சித்திரை | இராட்சச | ரஜோ | ஆண் எலி |
| 15 | சுவாதி | தேவ | தாமச | ஆண் எருமை |
| 16 | விசாகம் | இராட்சச | சத்துவ | பெண் புலி |
| 17 | அனுஷம் | தேவ | ரஜோ | பெண் மான் |
| 18 | கேட்டை | இராட்சச | தாமச | கலை மான் |
| 19 | மூலம் | இராட்சச | சத்துவ | பெண் நாய் |
| 20 | பூராடம் | மனித | ரஜோ | ஆண் குரங்கு |
| 21 | உத்திராடம் | மனித | தாமச | மலட்டுப் பசு |
| 22 | திருவோணம் | தேவ | சத்துவ | பெண் குரங்கு |
| 23 | அவிட்டம் | இராட்சச | ரஜோ | பெண் சிங்கம் |
| 24 | சதயம் | இராட்சச | தாமச | பெண் குதிரை |
| 25 | பூரட்டாதி | மனித | சத்துவ | ஆண் சிங்கம் |
| 26 | உத்திரட்டாதி | மனித | ரஜோ | பாற் பசு |
| 27 | ரேவதி | தேவ | தாமசம் | பெண் யானை |

## விசேஷ விதிகள்

ஜனன நட்சத்திரப்படி, கணப் பொருத்தம் அமையா விடின், நாம நட்சத்திரப்படி, கணப் பொருத்தம் பார்த்து, திருமணத்தை உறுதிப்படுத்தலாம் என முகூர்த்த மாதவீயம் என்ற நூல் கூறுகின்றது.

பெண் இராட்சச கணமாக இருந்து, ஆண் தேவ, மனித கணங்களாக அமையும் போது, ஆண் நட்சத்திலிருந்து எண்ணி வரும் போது, பெண் நட்சத்திரம் பதினான்குக்கு மேல் வந்தால் தோஷமில்லை என்று ஒரு விதி உண்டு.

இந்த நட்சத்திர நிலை கணப் பண்புகள் ஆண், பெண் தினசரி வாழ்வில் வெளிப்படையாகத் தெரியும். எனவே உறவினர்கள் சத்துவ, ரஜோ, தாமச குண இயல்புகளைக் கண்டு உணர்ந்து ஜோடி சேர்ப்பது நன்று.

பிராம்மண, க்ஷத்ரிய , வைசிய, சூத்திர என்ற சாதி முறைகளில் பிராம்மணர்கள், வைசியர்கள் முதலியோர் பெரும்பான்மையும் சத்துவ குண மரபுடையோர். எனவே இக்கணப் பொருத்தம் க்ஷத்ரியர்கட்கே மிகமிக முக்கியம் என்ற மரபு பொருள் பொதிந்ததாக உள்ளது.

கிரக மைத்ரி, சம சப்தம், பூரண ராஜயோக அனுகூலம் இவை இருப்பின், கணப் பொருத்தம் இல்லாவிடினும் ஜாதகம் பொருந்தும்.

இராட்சச கண ஜாதகத்தில், நீசம், அஸ்தமனம், யுக்தமில்லாத சந்திரன், லக்கினம் அல்லது ஏழில் இருந்தால், ஜாதகம் பொருந்தும்.

சுக்கிரன், குரு இருவரும் பலம் இழக்காமல், சமசப்தம், நவாம்சத்தில் இருந்தாலும் பொருந்தும்.

சனி, செவ்வாய், பரிவர்த்தனமாகி கும்ப, விருச்சிகத்தில் கேந்திரத்தில் இருந்தாலும் பொருந்தும்.

ஏதாவது ஒரு ஜாதகத்தில், அதி யோகமிருந்தாலும் பொருத்தமாகும்.

# 17. மகேந்திரப் பொருத்தம்

மகேந்திரம் என்றால் நித்திய யோகம் என்பர். கேந்திரம், கேந்திரத்தானம் என்பதை வைத்து மாகேந்திரம் என்பதும் உண்டு. தம்பதிகளின் குழந்தைப் பேறு சிறப்பாக அமைய மாகேந்திரப் பொருத்தம் வேண்டும் என்பர். இதனை, "மாஹேந்திராத் புத்திர விருத்தி ஸ்யாத்" என நூலோர் நவில்வர்.

பொதுவாக மகேந்திரப் பொருத்தம் பார்த்து புத்திர சம்பத்து இருப்பதாக அறிந்தாலும், **ஜாதகக் கணிப்பின்படி புத்திர சம்பத்து அறிவது உயர்வு** என்கின்றனர் சில ஆசிரியர்கள். மகேந்திரப் பொருந்தம் இல்லை என்றாலும் திருமணம் செய்யலாம் என்ற கருத்து உண்டு.

மணமகள் நட்சத்திரம் தொடங்கி எண்ணி வருகையில், மணமகன் நட்சத்திரம் 1, 4, 7, 10, 13, 16, 19, 22, 25 இவற்றில் ஒன்று வந்தால் மகேந்திரப் பொருத்தம் உண்டு. இங்கு ஒரு எண்ணுக்கும் அடுத்ததற்கும் இடையே 1 முதல் 4க்கும், 4 முதல் 7க்கும் மூன்று இடைவெளி வருகின்றது. இது காலவிதான நூல் முறை. இதுவே மிகமிக எளிய முறை.

முகூர்த்த ரத்தினம் என்ற நூல் பின் வரும் நிலைகளில் மகேந்திரப் பொருத்தம் உண்டு எனப் புகலும் :

1. மணமகன் ஜனன நட்சத்திரத்திலிருந்து அதன் 9, 18ஆம் நட்சத்திரங்களினின்று, பெண்ணின் நட்சத்திரத்தினைப் பார்க்கும் போது, மணமகனது நட்சத்திரம் 4, 7, 10 ஆக வந்தால் மகேந்திரப் பொருத்தம் உண்டு.

2. மணமகன் பிறந்த நட்சத்திரத்திலிருந்து நான்காவது நட்சத்திரத்தில் பெண் பிறந்திருந்தாலும் மகேந்திரப் பொருத்தம் உண்டு.

3. ஏழாவது நட்சத்திரத்தினை உபேந்திரம் என்பர். உபேந்திரம் எனவும், பரியாயம் எனப்படும் நிலையும் மகேந்திரப் பொருத்தமாகும். எனவே பெண் நட்சத்தில் ஏழாவது நட்சத்திரத்தில் பிறந்த மணமகன் வேறு பிற பொருத்தங்கள் அமைகையில் மகேந்திரப் பொருத்தம் உடையதாகும்.

4. மணமகன் ஜாதகத்திலிருந்து நான்காம் நட்சத்திரம், பெண்ணுடையதாக அமைந்தால் பொருத்தம் என்ற ஒரு புதிய ஆய்வும் உண்டு.

5. பொதுவாக பெண் நட்சத்திரனின்று ஆண் நட்சத்திரத்தை எண்ணிக் கண்ட எண் 1, 4, 13, 19, 25 வந்தால் உத்தம மகேந்திரம் என்பர்.

6. 7, 22 ஆனால் மற்ற பொருத்தங்கள் நன்றாக இருந்தால், பொருந்தும் என்பது மரபு.

7. பெண் பிறந்த நட்சத்திரக்காரரின் 88வது பாதத்தில் மணமகன் பிறந்திருந்தாலும் மகேந்திர வைநாசிக நாசிகம் உண்டென்பர். வைநாசிக நாசிகம் என்றால் ஜன்ம நட்சத்திரத்துக்கு இருபத்திரண்டாம் நட்சத்திரம் நான்காம் பாதம்.

8. மணமகனின் ஜன்ம நட்சத்திரத்திற்கு மணமகனின் ஜென்ம நட்சத்திரம் 13க்கு மேல் வந்தால் மகேந்திரப் பொருத்தம் உத்தமம்.

9. பதின்மூன்றுக்குக் கீழே வந்தால், பொருத்தம் மத்திமம் என்பர்.

10. மகேந்திரப் பொருத்தம் இல்லை என்றவுடன் புத்திர பாக்கியம் அமையாது என்று பயப்படத் தேவை இல்லை. ஜாதகத்தின் மற்ற பலன்கள் புத்திர பாக்கியம் தரும் வாய்ப்புடன் அமையும். முழு ஜாதகப் பரிசீலனை இதற்கு நன்று.

## 18. ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்

ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம் என்பது சகல சம்பத்துக்களையும் விருத்தி செய்யும் என்பதோடு தீர்க்க மாங்கல்ய பலனையும் நல்க வல்லது என்பர். "ஸ்திரீ தீர்காத் ஸீர்து ஸம்பத்" என்பது நூல் மொழி. இப்பொருத்தம் உத்தமமாக வரவேண்டும் இல்லை எனில் மணமகளுக்கு நன்றன்று எனப்படுகின்றது. இது பெண்ணின் ஜாதக அமைப்பைப் பொருத்தது.

பெண் நட்சத்திலிருந்து ஆண் நட்சத்திரம் 13க்கு மேல் இருந்தால் தீர்க்கம் உண்டு. தீர்க்கம் என்பது நிறைவாகும் 13க்குக் கீழ் இருந்தால் பொருந்தாது என்பர். ஏழுக்கு மேல் இருந்தால் மத்திமம் என்பர். ஏழுக்குக் கீழ் வந்தால் கூடவே கூடாது.

எவ்வளவு பின்னால் போகிறதோ அவ்வளவு நல்லது.

எந்த ஜன்மத்திலும் குடும்ப ரத்த சம்பந்தத்தில் வந்த ஆணைப் பெண் கணவனாக பெறுவது குழந்தைகள் நலனுக்கு ஏற்றதில்லை என்ற கருத்தில் ஸ்திரீ தீர்க்கம் கணிக்கப்படுகின்றது என்பர். பிராமணர்கள் சக கோத்திரத்தில் திருமணம் ஆகாதென்பது இது குறித்தே.

# 19. யோனிப் பொருத்தம்

**யோனி**ப் பொருத்தம் என்பது தம்பதியரின் அந்நியோன்யத்தை நல்கும். யோனி என்பது ஆண், பெண் மர்ம உறுப்பாகும். ஆண் யோனி, பெண் யோனி என இரு பாலர்க்கும் வகையறுத்துள்ளனர். பெண்கட்கு ஆண் யோனியும், பெண் யோனியும் கலந்து வருவதுண்டு. இது போன்றே ஆணுக்குப் பெண் யோனியும் கலந்து வருவதுண்டு.

யோனி அமைப்புகளைப் பகை யோனிகள், நட்பு யோனிகள் எனப் பிரித்துள்ளனர்.

ஜென்ம நட்சத்திர வாரியாக ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் ஒரு மிருகம் உருவகிக்கப்பட்டுள்ளது. அவற்றின் உறவு நிலைகளைக் கொண்டு, பகை, நட்பு தீர்மானிக்கப்படும். பகை யோனிகள் பொருந்தாது.

கணவன் ஆண் யோனியாகவும், மனைவி பெண் யோனியாகவும் அமைந்தால் மிக உத்தமம்.

**யோநிதோ தம்பதி ஸ்நேஹ** என்ற நூல் வாக்கியப்படி யோநிப் பொருத்தம் உடைய தம்பதிகள் ஆந்திரீக ஸ்நேகித சயன சௌக்கிய சுகிகளாக இருப்பர் என்பது மரபு.

இதனை வலியுறுத்த **சூத்ராணாம் யோநிரேவச** எனவும் கூறுவர்.

இரண்டுமே ஆண் ஆயினும் பொருந்தாது என்றலும் உண்டு.

பெண் நட்சத்திரம் ஆண் யோனியாகவும், ஆண் நட்சத்திரம் ஆண் யோனியாகவும் இரண்டு நட்சத்திரங்களும் நட்புடையவைகளாக இருந்தால் மிகமிகப் பொருத்தம்.

ஆண் பெண் ஒரே யோனியானால் பகை என்பதும், ஒரே யோனியானால் சகல செல்வமும் பெறுவர் என்றும் **இரு வகைச் கருத்து** உண்டு.

வெவ்வேறு யோனியாக, மிருக நிலையில் பகை இன்றி இருத்தல் நன்று.

இருவருக்கும் பெண் யோனி இருப்பதும் நன்று.

தம்பதிகள் ஒற்றுமையாக வாழ இது உதவும்.

இது சூத்திரர்க்கே முக்கியம் என்பதன் காரணம் உயர்மக்கள் வேற்றுமை இருப்பினும் ஒத்துப்போய் நந்நிலையில் வாழ்வர் என்பது கருத்தாம்.

சாமுத்திரிகா லட்சணப்படி ஆண், பெண் தத்தம் உடல் அழகு, உடல் உறுப்பு இலட்சணம் இவற்றின்படி நான்கு வகையாகப் பிரிக்கப்படுவர். வாத்சாயயனரின் காம சூத்திரத்தில் இதன் விரிவினைக் காணலாம். ஓவியர் ரவிவர்மா இந்நான்கு வகைப் பெண்களை ஓவியத்தில் காட்ட முயன்றுள்ளார்.

அழகினை உறுப்பழகு என்றும் சமுதாய அழகு என்றும் இருவகையாகக் கூறுவர். கண், மார்பு, மூக்கு போன்று உறுப்புக்கள் சிறப்பு அழகாக அமைவது உறுப்பழகு. எல்லாம் சேர்ந்து தொகுப்பாக மிகு அழகாகத் தோன்றுவது சமுதாய அழகு. இவண் எல்லா வகையாலும் சிறந்து அழகாகத் தோன்றும் பெண்ணை முதல் வகைப் பெண் - பத்மினிப் பெண் என்பர். அடுத்த இரண்டாம் நிலை அழகுடைய பெண்ணைச் சித்தினி என்பர். மூன்றாம் நிலையரைச் சங்கினி என்பர். அரச வம்சச் சேடியர் சங்கினி வகையினர். நான்காம் நிலையர் அத்தினி எனப்படுவர்.

இது போன்றே ஆண்களிலும் முயல் ஜாதி, மான் ஜாதி, காளை ஜாதி, குதிரை ஜாதி என நான்கு வகையாகக் கூறுவர். பத்மினிப் பெண்ணுக்கும் மான் ஜாதி ஆணுக்கும், சித்தினிப் பெண்ணுக்கும் மான் ஜாதி ஆணுக்கும், சங்கினிப் பெண்ணுக்கும் காளை ஜாதி ஆணுக்கும், அத்தினிப் பண்ணுக்கும் குதிரை ஜாதி ஆணுக்கும் பொருத்த முள்ளதாக இருக்கும். இவ்வாறு பொருத்தம் அமையின் குடும்ப வாழ்வு மிகச் சிறப்பாக இருக்கும்.

சாமுத்திரிகா லட்சண நிலையினை வேறு வகையில் நட்சத்திர வழி யோனியாக வகுத்து யோனிப் பொருத்தம் பார்க்கும் மரபு சோதிட சாத்திரத்தின் வழி உருவாகியது.

யோனி வகையில் முன் நட்சத்திரம் ஆண் நட்சத்திரமாகவும், பின் நட்சத்திரம் பெண் நட்சத்திரமாகவும் கொள்வது ஒரு மரபு. பஞ்சாங்கங்களில் இதே மரபு. பின்பற்றப்பட்டதாகத் தெரியவில்லை. மாறுபாடுகள் உள.

யோனி பொருத்தம் நட்சத்திரத்துக்கு மிருகம், பகை மிருகம், நட்பு மிருகம் அட்டவணை இவண் தரப்பட்டுள்ளது.

## நாம, நட்சத்திர கண, வேதை, யோனி பட்டியல் *(அ-24)*

| | நட்சத்திரங்கள் 1 | ஆண் பெண் அலி 2 | சவ்ய அபசவ்ய 3 | கணம் 4 | யோனி மிருகம் 5 | பகை யோனி 6 | நட்பு யோனி 7 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ***அசுவதி*** | ஆண் | சவ்ய | தேவ | ஆண்குதிரை | எருமை | ஆடு |
| 2 | ***பரணி*** | பெண் | சவ்ய | மனுஷ | ஆண் யானை | சிங்கம் | |
| 3 | ***கார்த்திகை*** | பெண் | சவ்ய | இராட்சச | பெண் ஆடு | குரங்கு | குதிரை |
| 4 | ***ரோகிணி*** | பெண் | அபசவ்ய | மனுஷ | ஆண் நாகம் | கீரி | |
| 5 | ***மிருகசீரிடம்*** | அலி | அபசவ்ய | தேவ | பெண் சாரை | கீரி | |
| 6 | ***திருவாதிரை*** | பெண் | அபசவ்ய | மனுஷ | ஆண் நாய் | மான் | மனிதன் |
| 7 | ***புனர்பூசம்*** | ஆண் | சவ்ய | தேவ | பெண் பூனை | எலி | |
| 8 | ***பூசம்*** | ஆண் | சவ்ய | தேவ | ஆண் எலி | குரங்கு | குதிரை |
| 9 | ***ஆயில்யம்*** | பெண் | சவ்ய | இராட்சச | ஆண் பூனை | எலி | |
| 10 | ***மகம்*** | பெண் | அபசவ்ய | இராட்சச | ஆண் எலி | பூனை | |
| 11 | ***பூரம்*** | பெண் | அபசவ்ய | மனுஷ | பெண் எலி | பூனை | |
| 12 | ***உத்திரம்*** | பெண் | அபசவ்ய | மனுஷ | ஆண் எருது | புலி | |
| 13 | ***ஹஸ்தம்*** | ஆண் | சவ்ய | தேவ | பெண் எருமை | குதிரை | |
| 14 | ***சித்திரை*** | பெண் | சவ்ய | இராட்சச | ஆண் புலி | பசு | |
| 15 | ***சுவாதி*** | பெண் | சவ்ய | தேவ | ஆண் எருமை | குதிரை | |
| 16 | ***விசாகம்*** | பெண் | அபசவ்ய | இராட்சச | பெண் புலி | பசு | |
| 17 | ***அனுஷம்*** | ஆண் | அபசவ்ய | தேவ | பெண் மான் | நாய் | பசு |
| 18 | ***கேட்டை*** | பெண் | அபசவ்ய | இராட்சச | ஆண் மான் | நாய் | பசு |
| 19 | ***மூலம்*** | அலி | சவ்ய | இராட்சச | பெண் நாய் | மான் | மனிதன் |
| 20 | ***பூராடம்*** | பெண் | சவ்ய | மனுஷ | ஆண் குரங்கு | ஆடு | |
| 21 | ***உத்திராடம்*** | பெண் | சவ்ய | மனுஷ | மலட்டுப்பசு/கீரி | பாம்பு | குரங்கு எல்லாவற்றிற்கும் நட்பு<br>பகை இல்லாதன யாவும் நட்பு |
| 22 | ***திருவோணம்*** | ஆண் | அபசவ்ய | தேவ | பெண் குரங்கு | ஆடு | |
| 23 | ***அவிட்டம்*** | பெண் | அபசவ்ய | இராட்சச | பெண் சிங்கம் | யானை | |
| 24 | ***சதயம்*** | அலி | அபசவ்ய | இராட்சச | பெண் குதிரை | எருமை | |
| 25 | ***பூரட்டாதி*** | ஆண் | சவ்ய | மனுஷ | ஆண் சிங்கம் | யானை | |
| 26 | ***உத்திரட்டாதி*** | ஆண் | சவ்ய | மனுஷ | பெண் பசு | புலி | |
| 27 | ***ரேவதி*** | பெண் | சவ்ய | தேவ | பெண் யானை | சிங்கம் | |

சவ்ய = Clock Wise இடப்பக்க  அபசவ்ய = Anti Clock Wise வலப்பக்க

நட்சத்திர ரஜ்ஜு, நாடி, வேதை, பட்சி, மரப் பட்டியல் ***(அ-24)***

| ந.எண். | ரஜ்ஜு 8 | நாடி 9 | வேதை 10 | பட்சி 11 | மரம் 12 |
|---|---|---|---|---|---|
| 1 | ஆரோக பாத ரஜ்ஜு | பார்சுவநாடி | கேட்டை | இராஜாளி | * எட்டி |
| 2 | ஆரோக தொடை ர | மத்தியநாடி | அனுஷம் | காக்கை | * நெல்லி |
| 3 | ஆரோக உதிர ர | சமானநாடி | விசாகம் | மயில் | அத்தி |
| 4 | ஆரோக கண்ட ர | சமானநாடி | சுவாதி | ஆந்தை | நாவல் |
| 5 | சிரோ ரஜ்ஜு | மத்தியநாடி | | கோழி | * கருங்காலி |
| 6 | அவரோக கண்ட ர | பார்சுவநாடி | திருவோணம் | குருவி | * செங்கரு |
| 7 | அவரோக உதிர ர | பார்சுவநாடி | உத்திராடம் | அன்னம் | * மூங்கில் |
| 8 | அவரோக தொடை ர | மத்தியநாடி | பூராடம் | நீர்காக்கை | அரசு |
| 9 | அவரோக பாத ர | சமானநாடி | மூலம் | சிச்சிலி | புன்னை |
| 10 | ஆரோக பாத ர | சமானநாடி | ரேவதி | ஆண்கழுகு | ஆல் |
| 11 | ஆரோக தொடை ர | மத்தியநாடி | உத்திரட்டாதி | பெண்கழுகு | பலாசு |
| 12 | ஆரோக உதிர ர | பார்சுவநாடி | பூரட்டாதி | கிளுவை | அலரி |
| 13 | ஆரோக கண்ட ர | பார்சுவநாடி | சதயம் | பருந்து | வேலம் |
| 14 | சிரோ ரஜ்ஜு | மத்தியநாடி | | மரங்கொத்தி | * வில்வம் |
| 15 | அவரோக கண்ட ர | சமானநாடி | | தேனீ | மருத |
| 16 | அவரோக உதிர ர | சமானநாடி | | கிளி | * விளா |
| 17 | அவரோக தொடை ர | மத்தியநாடி | | வானம்பாடி | * மகிழம் |
| 18 | அவரோக பாத ர | பார்சுவநாடி | | சக்ரவாகம் | மிராய் |
| 19 | ஆரோக பாத ர | பார்சுவநாடி | | செம்போத்து | மாமரம் |
| 20 | ஆரோக தொடை ர | மத்தியநாடி | | கவுதாரி | வஞ்சி |
| 21 | ஆரோக உதிர ர | சமானநாடி | | வலியான் | பலாசு |
| 22 | ஆரோக கண்ட ர | சமானநாடி | | நாரை | எருக்கு |
| 23 | சிரோ ரஜ்ஜு | மத்தியநாடி | | வண்டு | * வன்னி |
| 24 | அவரோக கண்ட ர | பார்சுவநாடி | | அண்டங்காக்கை | * கடம்பு |
| 25 | அவரோக உதிர ர | பார்சுவநாடி | | உள்ளான் | தேமா |
| 26 | அவரோக தொடை ர | மத்தியநாடி | | கோட்டான் | * வேம்பு |
| 27 | அவரோக பாத ர | சமானநாடி | | வல்லூறு | இலுப்பை |

**பார்சுவ = வாதம், மத்திய = பித்தம்,**
**சமாணன் = சிலேத்துமம் * பாலில்லா மரங்கள்**

**நாம, நட்சத்திர, கணம், ரஜ்ஜு, மிருகம் முதலியன (அ–25)**

| நக்ஷத்ரம் | பரம நாழி–கை | நக்ஷத்ர எழுத்துக்கள் | கணம் | ரஜ்ஜு | மிருகம் |
|---|---|---|---|---|---|
| 1 ***அச்வினி*** | 65 | சூ–சே–சோ–லா | தேவ | பாதம் | ஆண் குதிரை |
| 2 ***பரணி*** | 56 | லீ–லூ–லே–லோ | மனுஷ | தொடை | ஆண்யானை |
| 3 ***க்ருத்திகை*** | 56 | ஆ–ஈ–ஊ–ஏ | ராக்ஷஸ | தொப்புள் | பெண்ஆடு |
| 4 ***ரோஹிணி*** | 56 | ஒ–ப–பீ–பூ | மனுஷ | கண்டம் | ஆண்நாகம் |
| 5 ***ம்ருகசீர்ஷம்*** | 56 | பே–போ–கா–கீ | தேவ | சிரஸ் | பெண்சாரை |
| 6 ***திருவாதிரை*** | 56 | கூ–க–ஙா–சா | மனுஷ | கண்டம் | ஆண்நாய் |
| 7 ***புனர்பூசம்*** | 62 | கே–கோ–ஹா–ஹி | தேவ | தொப்புள் | பெண்பூனை |
| 8 ***பூசம்*** | 52 | ஹு–ஹே–ஹோ–பா | தேவ | தொடை | ஆண் ஆடு |
| 9 ***ஆயில்யம்*** | 56 | டீ–டு–டே–டோ | ராக்ஷஸ | பாதம் | ஆண்எலி |
| 10 ***மகம்*** | 54 | மா–மி–மூ–மே | ராக்ஷஸ | பாதம் | பெண்எலி |
| 11 ***பூரம்*** | 53 | மோ–டா–டீ–டு | மனுஷ | தொடை | எருது |
| 12 ***உத்தரம்*** | 56 | டே–டோ–பா–பீ | மனுஷ | தொப்புள் | பெண்எருமை |
| 13 ***ஹஸ்தம்*** | 57 | பூ–ஷ–ணா–டா | தேவ | கண்டம் | ஆண்புலி |
| 14 ***சித்திரை*** | 60 | பே–போ–ரா–ரி | ராக்ஷஸ | சிரஸ் | ஆண்எருமை |
| 15 ***ஸ்வாதி*** | 65 | ரூ–ரே–ரோ–தா | தேவ | கண்டம் | பெண்புலி |
| 16 ***விசாகம்*** | 61 | தீ–து–தே–தோ | ராக்ஷஸ | தொப்புள் | பெண்மான் |
| 17 ***அனுஷம்*** | 60 | நா–நீ–நூ–நே | தேவ | தொடை | கலைமான் |
| 18 ***கேட்டை*** | 62 | நோ–ய–யீ–யூ | ராக்ஷஸ | பாதம் | பெண்நாய் |
| 19 ***மூலம்*** | 63.5 | யே–யோ–பா–பி | ராக்ஷஸ | பாதம் | ஆண்குரங்கு |
| 20 ***பூராடம்*** | 62 | பூ–தா–பா–டா | மனுஷ | தொடை | மலட்டுபசு |
| 21 ***உத்தராடம்*** | 55 | பே–போ–ஜ–ஜீ | மனுஷ | தொப்புள் | பெண்குரங்கு |
| 22 ***திருவோணம்*** | 65.25 | கு–கூ–கே–கோ | தேவ | கண்டம் | பெண்சிங்கம் |
| 23 ***அவிட்டம்*** | 66.5 | கா–கீ–கூ–கே | ராக்ஷஸ | சிரஸ் | பெண்குரங்கு |
| 24 ***சதயம்*** | 53.5 | கோ–ஸா–ஸீ–ஸூ | ராக்ஷஸ | கண்டம் | ஆண்சிங்கம் |
| 25 ***பூரட்டாதி*** | 66.5 | ஸே–ஸோ–தா–தீ | மனுஷ | தொப்புள் | பாற்பசு |
| 26 ***உத்தரட்டாதி*** | 63.5 | தூ–தா–ஜா–ஞா | மனுஷ | தொடை | பெண்யானை |
| 27 ***ரேவதி*** | 64 | தே–தோ–ச–சீ | தேவ | பாதம் | |

* இக்குறியுள்ளவைகள் எல்லாம் பாலில்லாத மரங்கள்.

குறிப்பு : நக்ஷத்ர எழுத்துக்கள் நான்கும் அந்தந்த நக்ஷத்ரத்தின் நான்கு பாதங்கட்கும் முறையே பொருத்தமானவை.

பகை, நட்பு யோனிகளின் பட்டியல் ***(அட்டவணை–26)***

| | ***நட்சத்திரம்*** | ***மிருகம் (யோனி)*** | ***பகை மிருகம் (யோனி)*** | ***நட்பு மிருகம் (யோனி)*** |
|---|---|---|---|---|
| 1 | அசுபதி (ஆ) | ஆண் குதிரை | எருமை 13 | பெண் எருமை 13 |
| 2 | பரணி (ஆ) | ஆண் யானை | சிங்கம் 23/25 | பெண் சிங்கம் 23 |
| | | | | ஆண் சிங்கம் 25 |
| 3 | கார்த்திகை (பெ) | பெண் ஆடு | குரங்கு 22 20 | பெண் குரங்கு 22 |
| | | | | ஆண் குரங்கு 20 |
| 4 | ரோகிணி (ஆ) | ஆண் நாகம் | கீரி 21 | கீரி 21 |
| 5 | மிருகசீரிடம் (பெ) | பெண் சாரை | கீரி 21 | கீரி 21 |
| 6 | திருவாதிரை (ஆ) | ஆண் நாய் | மான் 17 18 | பெண் மான் 17 |
| | | | | ஆண் மான் 18 |
| 7 | புனர்பூசம் (பெ) | பெண் பூனை | எலி 10 | பூனை 10 |
| 8 | பூசம் (ஆ) | ஆண் ஆடு | குரங்கு 22 20 | ஆண் குரங்கு 20 |
| | | | | பெண் குரங்கு 22 |
| 9 | ஆயில்யம் (ஆ) | ஆண் பூனை | எலி 11 10 | பூனை 10, 11 |
| 10 | மகம் (ஆ) | ஆண் எலி | பூனை 9 7 | எலி 9, 7 |
| 11 | பூரம் (பெ) | பெண் எலி | பூனை 9 7 | எலி 9, 7 |
| | | | | பசு 16 |
| 12 | உத்திரம் (ஆ) | எருது | புலி 16 14 | ஆண் புலி 14 |
| | | | | பெண் குதிரை 24 |
| 13 | ஹஸ்தம் (பெ) | பெண் எருமை | குதிரை 24 1 | ஆண் குதிரை 1 |
| 14 | சித்திரை (ஆ) | ஆண் எலி | பசு 26 | பசு 16, 14 |
| 15 | சுவாதி (ஆ) | ஆண் எருமை | குதிரை 24, 1 | பெண் குதிரை 24 |
| | | | | ஆண் குதிரை 1 |
| 16 | விசாகம் (பெ) | பெண் புலி | பசு 26 | ஆண் சிங்கம் 26 |
| 17 | அனுஷம் (பெ) | பெண் மான் | நாய் 19 6 | பெண் நாய் 19 |
| | | | | ஆண் நாய் 6 |
| 18 | கேட்டை (ஆ) | கலை மான் | நாய் 19 6 | ஆண் புலி 14 |
| | | | | ஆண் நாய் 6 |
| 19 | மூலம் (பெ) | பெண் நாய் | மான் 18 17 | ஆண் மான் 18 |
| | | | | பெண் மான் 17 |
| 20 | பூராடம் (ஆ) | ஆண் குரங்கு | ஆடு 3 8 | பெண் ஆடு 3 |
| | | | | ஆண் ஆடு 8 |
| 21 | உத்திராடம் (ஆ) | கீரி | பாம்பு 5 4 | பெண் சாரை 5 |
| | | | | ஆண் நாகம் 4 |
| 22 | திருவோணம்(பெ) | பெண் குரங்கு | ஆடு 3 8 | பெண் யானை 27 |
| 23 | அவிட்டம் (பெ) | பெண் சிங்கம் | யானை 27 8 | |
| 24 | சதயம் (பெ) | பெண் குதிரை | எருமை 12 | எருது 12 |
| 25 | பூரட்டாதி (ஆ) | ஆண் சிங்கம் | யானை 27 2 | பெண் யானை 27 |
| | | | | ஆண் யானை 2 |
| 26 | உத்திரட்டாதி(பெ) | பாற் பசு | புலி 16 14 | பெண் புலி 16 |
| | | | | ஆண் புலி 14 |
| 27 | ரேவதி (பெ) | பெண் யானை | சிங்கம் 25 23 | ஆண் சிங்கம் 25 |
| | | | | பெண் சிங்கம் 23 |

பகை மிருகம், நட்பு மிருகம் கட்டத்தில் குறிப்பிட்டுள்ள எண்கள் அவற்றிற்குரிய நட்சத்திர எண் ... ஆ - ஆண் ... பெண் - பெண்

# 20. ராசிப் பொருத்தம்

ஸ்ரீ **வா**னவீதியில் உலா வரும் கோள்கள், மண்ணகத்து வாழும் மனிதர்கள் வாழ்வில் எத்தகைய தாக்கங்களை ஏற்படுத்தி நல்லனவும் நல்லன அல்லவும் நடைபெறுகின்றன என்பதை விளக்கும் சோதிட சாஸ்திரம். $360^0$ உள்ள வான வட்டத்தை வான வீதியை பன்னிரண்டு பகுதிகளாகப் பிரித்துக் காட்டும் பகுதிகளே ராசிகள். அந்த ராசிகளாய் வான வீதியின் ராஜபாட்டைகளில் கோள்கள் என்னும் கிரகங்கள் சஞ்சரிக்கும் கால அளவு அதனதன் விளைவு முதலியன சோதிடத்தில் முக்கிய இடம் பெறுகின்றன. இந்த ராசியை ஒன்பதாகப் பகிர்தலை நவாம்சம் என்றும் நவாங்கிசம் என்றும் புகல்வர். இராசிகள் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் எனப் பன்னிரண்டாகும்.

ஜாதகக் குறிப்பில் பன்னிரண்டு இடங்களில் சந்திரன் இருக்குமிடமே ராசியாகும். இதனை மேஷம், மீனம் ஈறாகக் கூறப்படும் பன்னிரண்டு பெயர்களும் லக்கினம் என்பதற்கும் பெயர்களாக வருகின்றன. என்றாலும் ராசிப் பொருத்தம் என்ற வழக்குத் தான் உண்டே ஒழிய லக்னப் பொருத்தம் என்று கூறுவதில்லை. ராசிக்கும் **வம்ச விருத்திகிருத்** என்றபடி ராசிப் பொருத்தம் வம்ச விருத்திக்கு நலம் பயப்பதாகும்.

1. ஆண் பெண் இருவர் ராசியும் ஒன்றாகவே இருந்தால் — உத்தமம்
2. பெண் ராசியிலிருந்து ஆண் ராசி வரை எண்ணும் போது ஆறு ராசிகட்கு மேற்படினும் தம்பதிகளின் ராசி பொருந்தும். குடும்ப வாழ்க்கை நிரந்தர உறவுடன சுப லாபகரமாகவும் அமையும் — உத்தமம்
3. பெண் ராசிக்கு ஆண் ராசி மூன்று அல்லது நான்காம் ராசியாகில் — மத்திமம்
4. பெண் ராசிக்கு ஆண் ராசி 2, 5, 6 ஆம் ராசியானால் — அதமம்
5. பெண் ராசிக்கு ஆண் ராசி எட்டாவதாகவரின் — திருமணம் நடத்தக்கூடாது

6. பெண் ராசியிலிருந்து என்ணுகையில் 2, 3, 4, 6, 8 ஆம் ராசிகளில் பிறந்த மணமகன் திருமணத்திற்குப் பொருத்த முடையவன் அன்று.

7. ஒற்றைப்படை ராசியில் பிறந்த பெண்கட்கு 6, 8 ஆம் ராசிகளில் பிறந்த மணமகன் மத்திமப் பொருத்தம். ஒற்றைப்படை ராசிகள் மேஷம், மிதுனம், சிம்மம், துலாம், கும்பம் என்பன.

8. இரட்டைப் படை ராசியில் பிறந்த பெண்கட்கு அவளது ராசியின் 6 ஆம் ராசியில் பிறந்தவன் பொருத்தமில்லாதவனாகிறான். இரட்டைப் படை ராசிகள் ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் என்பன ஆறு.

9. இது போன்றே எட்டாம் ராசியில் பிறந்தவன் ஓரளவு பொருத்தம் உள்ளவனாகிறான்.

10. அ. முகூர்த்த மாதவீயத்தின்படி பெண் பிறந்த ராசியிலிருந்து மணமகன் பிறந்த ராசி இரண்டாமிடமாக வந்தால், அவர்கள் திருமண வாழ்வில் பண நஷ்டம் மட்டுமே அனுபவிப்பார்கள்.

    ஆ. மூன்றாமிடமானால் ஒருவரால் மற்றவருக்கு மாளாத துயர் உண்டாகும்.

    இ. நான்காமிடமாக வந்தால் கணவன் மனைவியரிடையே பரம விரோதம் வரும்.

    ஈ. ஐந்தாமிடமாக இருந்தால் குழந்தைகள் அடிக்கடி இறப்பதும் நடைபெறும்.

    உ. ஆறாமிடமாக வந்தால் தீராத வியாதிகளும், நீண்ட நாள் பிரிவும், மனவேதனைகளும் உண்டாகும்.

11. பிரகஸ்பதி வாக்கின்படி, பெண், மணமகன் இருவர் ஜாதகங் களிலும்

    அ. சந்திர ராசிக்குடையவன் ஒரே கிரகமாக இருந்தாலும்,

    ஆ. அல்லது பலமுள்ள பரம நட்பாக இருந்தாலும் பெண் பிறந்த ராசியிலிருந்து 6, 8 ஆம் ராசியில் பிறந்த புருஷன் சுபப் பொருத்தமுடையவன் ஆவான். குறிப்பிடப்பட்ட

விலக்குகள் அவசியம். இது ஐந்து, ஆறாவது வரிசை எண் விதிகட்கு விதிவிலக்கு.

12. இருவருடைய ராசிக்கும் பரஸ்பர வசியம் இருந்து, இருவருடைய நட்சத்திரங்கட்கும் பரஸ்பர வேதை இல்லை என்றால் **ஷஷ்டாஷ்டக** தோஷம் இல்லை எனலாம்.
    ஷஷ்டாஷ்டக தோஷமில்லை எனில் பொருத்தம் சுபம்.
13. பெண் ராசிக்கு ஆண் ராசியாக வந்தால் வாழ்க்கை மிக்க மகிழ்வுடையதாகும்.
14. மணமகன் ராசிக்கு நான்காவதாகப் பெண் ராசி வந்தால் — சொத்து சேரும்
15. பெண் ராசிக்குப் பத்தாவதாக மணமகன் ராசி வந்தால் — உத்தமம்
16. ஆண் ராசிக்கு ஐந்தாவதாக பெண் ராசி வருமானால் அதாவது பெண் ராசிக்கு மணமகன் ராசி ஒன்பதாவதாக வந்தால் — உத்தமம்
17. மணமகன் ராசிக்கு ஆறாவதாக பெண் ராசி வந்தால் அதாவது பெண் ராசிக்கு எட்டாவது ராசியாக மணமகன் ராசி வந்தால் (ஆனால் பெண் ராசி முதல் மணமகன் ராசி எட்டாவதாக வரக்கூடாது) — மகப்பேறும் வளமும் பெருகும்
18. மணமகன் ராசி பெண் ராசிக்கு ஏழாவதாக வந்தால் — உத்தமம் அந்நியோன்யம் பெருகும்
19. சமசப்தம் ராசி, ஏக ராசிக்குப் பொருத்தம் பார்க்க வேண்டாம்.
20. பெண் ரிஷப ராசியானால் எட்டாவதாக வரும் தனுசு — கூடாது
    பெண் ரிஷபமானால் எட்டாவதாக வரும் மகரம் — கூடாது
    இது போன்றே கணிக்க முயலவும்.

**21. சஷ்டாஷ்டகம் :**

பெண் ராசிக்குப் பிள்ளை ராசி ஆறாவதாக வந்தால் மணமகன் ராசிக்குப் பெண் ராசி எட்டாவதாக வரும். அதே போல, பெண் ராசிக்கு மணமகன் ராசி எட்டாவதாக வந்தால் மணமகன் ராசிக்குப் பெண் ராசி ஆறாவதாக வரும்.

**இவ்வாறு வருவது சஷ்ட (6), அஷ்டகம் (8)** தோஷம் எனப்படும்.

இத்தகைய **சஷ்டாஷ்டகங்கள்** கூடாதென்பர்.

ஆனால்,

மேஷத்திற்குக் கன்னியும், தனுசுக்கு ரிஷபமும்
துலாத்திற்கு மீனமும், கும்பத்திற்குக் கடகமும்
சிம்மத்திற்கு மகரமும், மிதுனத்திற்கு விருச்சிகமும்
வந்தால், இதனை அனுகூல சஷ்டாஷ்டகம் என்பர்.

மேலும்,

ரிஷபத்துக்குத் துலாம், கடகத்துக்குத் தனுசு
கன்னிக்குக் கும்பம், விருச்சிகத்திற்கு மேஷம்
மகரத்துக்கு மீனம், மீனத்திற்கு சிம்மம்
முதலியன பிறதிகூல சஷ்டாஷ்கப் பொருத்தம் ஆகாதென்பர்.

22. எந்த ராசியிலிருந்து எண்ணுகிறோமோ அதனை ஒன்றாகக் கணக்கிட வேண்டும் என்பதை மறக்கக்கூடாது.



# 21. ராசி அதிபதிப் பொருத்தம்

**01. பன்னிரண்டு ராசிகள் :** இராசி என்பது வானவெளியில் பூமியைச் சுற்றி ஒன்பது கிரகங்களும் சஞ்சரிக்கும் பன்னிரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்ட சஞ்சார பாதை ஆகும். இந்தப் பன்னிரண்டு இராசிகளிலும் 1. சூரியன், 2. சந்திரன், 3. செவ்வாய், 4. புதன், 5. வியாழன், 6. வெள்ளி, 7. சனி, 8. இராகு, 9. கேது என்ற ஒன்பது கிரகங்களும் சஞ்சரிக்கின்றன.

**02. மூவகை நிலைகள் :** இக்கிரகங்கள் ஒன்றுக்கொன்று பகை, நட்பு, சமம் என்ற மூன்று நிலைகளில் உள்ளன.

**03. அதிபதிகள் :** மேலும் ஒவ்வொரு ராசிக்கும் ஒரு அதிபதி உண்டு. அந்த ராசி ஒரு கிரகம் ஆகும்.

பன்னிரண்டு ராசிகளிலும் ஒன்பது கிரகங்களும், ராசி அதிபதியாக வரும்போது, ராகு, கேது என்ற இரு நிழல் கிரகங்கள், சாயா கிரகங்கள் என்பன, ராசி அதிபதியாக வருவதில்லை.

**04. முக்குண நிலைகள் :** இதுவன்றி ஒவ்வொரு கிரகத்திற்கும், நட்பு, பகை, சமம் என்ற அளவு கிரக உறவுகளும் அதற்கான நிலைகளும் கீழே வரும் பட்டியில் தரப்பட்டுள்ளன. இந்த நிலைகளில் சாத்விகம், ராஜசம், தாமசம் என்ற முக்குண இயல்புகளும் கூட இப்பட்டியில் கொடுக்கப்பட்டுள்ளன.

**05. மகப்பேறு :** சந்தானம ராசியாதிபதி என்ற மொழிப்படி மகப்பேறுக்கு இந்த ராசி அதிபதிப் பொருத்தம் முக்கியம். பண்டைக் காலத்தில் சௌபாக்யங்களில் மகப்பேறே மிகச் சிறப்புடையதாகக் கருதப்பட்டுள்ளது. இப்பொருத்தம் சரியாக அமைந்தால் மக்களும் நல்ல யோகவந்தர்களாக இருப்பார்கள்.

இப்பொருத்தம் சரியாக அமைந்தால் சம்மந்திகட்குள்ளும் ஒற்றுமை இருக்கும்.

**06. உத்தம நிலை :** பெண்ணின் ராசிக்குரிய அதிபதியும், ஆணின் ராசிக்குரிய அதிபதியும், நட்பாகவோ அல்லது சமமாகவோ இருந்தால் கூட உத்தமம்.

07. **மத்திம நிலை** : பெண் ராசி அதிபதியும், ஆண் ராசி அதிபதியும் பகை நட்பு ஆகில் மத்திமம்.

08. **அதம நிலை** : பெண் ராசி அதிபதியும் சமம், பகை, சமம் அல்லது இருவரும் ஒருவருக்கொருவர் பகை ஆயின் அதமம்.

09. **விதிவிலக்கு** : இராசியதிபதிப் பொருத்தம் நன்றாக இருந்து, ராசிப் பொருத்தம் இல்லாவிட்டாலும் திருமண ஜோடி சேர்க்கலாம்.

அனுபவத்தில் ராசிப் பொருத்தம் இல்லாமல், ராசி அதிபதிப் பொருத்தம் மட்டும் இருந்தால் குடும்ப வாழ்வில் முதலில் சிரமம் தந்து பின்னர் நன்மை விளையும்.

## ராசி ராசி அதிபதி விபரம்

### *அட்டவணை – 27*

| *ராசியின் பெயர்* | *ராசி அதிபதிகள் கிரகம்* | *ராசியின் பெயர்* | *ராசி அதிபதிகள் கிரகம்* |
|---|---|---|---|
| 1 மேஷம் | செவ்வாய் | 7 துலாம் | சுக்கிரன் |
| 2 ரிஷபம் | சுக்கிரன் | 8 விருச்சிகம் | செவ்வாய் |
| 3 மிதுனம் | புதன் | 9 தனுசு | வியாழன் |
| 4 கடகம் | சந்திரன் | 10 மகரம் | சனி |
| 5 சிம்மம் | சூரியன் | 11 கும்பம் | சனி |
| 6 கன்னி | புதன் | 12 மீனம் | வியாழன் |



## கிரக உறவு நிலைகளும் ராசி அதிபதிகள் வசிய நிலையும் (அ–28)

| எண் | கிரகங்கள் | நட்பு கிரகங்கள் | சமமான கிரகங்கள் | பகை கிரகங்கள் | நிலை |
|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | சந்திரன்–ரா<br>குரு–சா<br>செவ்வாய்–தா | புதன் | சுக்கிரன்<br>சனி<br>ராகு<br>கேது | பித்ருகாரகன் |
| 2 | சந்திரன் | சூரியன்–ரா<br>புதன்<br>குரு–சா | சனி<br>செவ்வாய்<br>சுக்கிரன் | ராகு<br>கேது | மாத்ருகாரகன் |
| 3 | புதன் | சூரியன்<br>சுக்கிரன்–ரா | குரு, செவ்வாய்<br>சனி, ராகு, கேது | சந்திரன் | வித்யாகாரகன் |
| 4 | சுக்கிரன் | புதன்–சா<br>சனி<br>ராகு–தா<br>கேது–தா | குரு<br>செவ்வாய் | சூரியன்<br>சந்திரன் | களத்திரகாரகன் |
| 5 | செவ்வாய் | சூரியன்<br>சந்திரன்<br>குரு–சா | சுக்கிரன்<br>சனி | புதன்<br>ராகு<br>கேது | சகோதரகாரகன் |
| 6 | குரு | சந்திரன்–ரா<br>சூரியன்–சா<br>செவ்வாய்–தா | சனி<br>ராகு<br>கேது | புதன்<br>சுக்கிரன் | கர்மதர்மாதிபதி<br>புத்ரகாரகன் |
| 7 | சனி | புதன்–சா<br>சுக்கிரன்–ரா<br>ராகு<br>கேது | குரு | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | ஆயுள்காரகன் |
| 8 | ராகு | சனி<br>சுக்கிரன்–ரா | புதன்<br>குரு | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | பிதா<br>மாதுர்காரகன் |
| 9 | கேது | சனி<br>சுக்கிரன் | புதன்<br>குரு – சா | சூரியன்<br>சந்திரன்<br>செவ்வாய் | ஞானகாரகன் |

குறிப்பு : 7ம் பாவ அதிபன் தாமச கிரகமாக இருந்தாலும், அந்த பாவத்தை தாமச கிரகங்கள் பார்த்தாலும் விவாகம் தடைபெறும். அல்லது நாள்பட்ட நடக்கும். சாத்வீக, ராஜஸ கிரகங்களால் பார்க்கப்பட்டால் விவாகம் விரைவில் நடக்கும். குரு., சூரியன், சந்திரன் - சாத்வீகம். புதன், சுக்கிரன் - ராஜஸம். செவ்வாய், சனி - ராஜஸம் என்பது மற்றொரு பாடம்.

### கிரக உறவு நிலைகளும் ராசி அதிபதிகள் வசிய நிலையும் (அ–28)

| சொந்தமான ராசிகள் | ராசி அதிபதிகள் | வசியநிலை | | எண் |
|---|---|---|---|---|
| | | பெண் ராசி | ஆண் ராசி | |
| சிம்மம் | சூரியன் | சிம்மம் | துலாம் | 1 |
| கடகம் | சந்திரன் | கடகம் | விருச்சிகம் | 2 |
| மிதுனம்<br>கன்னி | புதன் | மிதுனம்<br>கன்னி | கன்னி<br>மிதுனம், மீனம் | 3 |
| ரிஷபம்<br>துலாம் | சுக்கிரன் | ரிஷபம்<br>துலாம் | கடகம், துலாம்<br>கன்னி, மகரம் | 4 |
| மேஷம்<br>விருச்சிகம் | செவ்வாய் | மேஷம்<br>விருச்சிகம் | சிம்மம், விருச்சிகம்<br>கடகம் | 5 |
| தனுசு<br>மீனம் | வியாழன் | தனுசு<br>மீனம் | மீனம்<br>மகரம் | 6 |
| மகரம்<br>கும்பம் | சனி | மகரம்<br>கும்பம் | மேஷம், கும்பம்<br>மேஷம் | 7 |
| | | | | 8 |
| | | | | 9 |

சா = சாத்விகம் தா = தாமசம்

ரா = ராஜசம்

## ஜாதகங்கட்கு இராசிகளின் கிரக நட்பு, ஆட்சி, உச்ச, நீசம், பகை, விடுதி – *(அட்டவணை 29)*

| 9 கிரகங்கள் | 12 ராசிகள் | மே 1 | ரி 2 | மி 3 | கட 4 | சிம் 5 | கன் 6 | து 7 | விரு 8 | தனு 9 | மகர 10 | கும்ப 11 | மீனம் 12 | கிரக நட்பு | கிரக சமன் | கிரக பகை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | | | | | ஆட்சி | | நீசம் | நட்பு | | பகை | பகை | | ச செவ் குரு | புதன் | சுக் சந் |
| 2 | சந்திரன் | | உச்சம் | | ஆட்சி | | | | நீசம் | நட்பு | | | | சு கு பு | செ குரு சு. ச | இல்லை |
| 3 | செவ்வாய் | நட்பு | | | நீசம் | நட்பு | | | விடுதி | பகை | உச்சம் | | பகை | சுக் சந் குரு | சந் சனி | புதன் |
| 4 | புதன் | ஆட்சி | பகை | விடுதி | | | ஆட்சி உச்சம் | பகை | | | | | நீசம் | சூரி சுக் | செவ் கு க | சந் |
| 5 | குரு | எ | | | உச்சம் | | | | பகை | ஆட்சி | நீசம் | நட்பு | விடுதி | கு ச செ | சனி | புதன் சுக் |
| 6 | சுக்கிரன் | பகை | அ | பகை | | | நீசம் | ஆட்சி | | | | | உச்சம் | புதன் சனி | செ குரு | கு சந் |
| 7 | சனி | | நட்பு | | | பகை | | உச்சம் | | | விடுதி | ஆட்சி | | புதன் சுக் | குரு | கு ச செவ் |
| 8 | இராகு | நீசம் | உச்சம் | | உச்சம் | நட்பு | ஆட்சி | | | | | | | | | |
| 9 | கேது | | | | | | | க | உச்சம் | | உச்சம் | நட்பு | ஆட்சி | | | |

## நட்ட முட்டி சிந்தனைக்கு : நட்பு, ஆட்சி, உச்சம், நீச்சம், பகை – (அட்டவணை 30)

| வ. எண். | கிரகங்கள் | மே 1 | ரி 2 | மி 3 | கட 4 | சிம் 5 | கன் 6 | து 7 | விரு 8 | தனு 9 | மகர 10 | கும்ப 11 | மீனம் 12 | கிரக பகை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | உ | | | | ஆ | | நீ | | ந | | | ந | குரு |
| 2 | சந்திரன் | | உ | ந | ஆ | | ந | | நீ | ந | | | ந | புத குரு |
| 3 | செவ்வாய் | ஆ | ந | ந | நீ | | ந | ந | ஆ | | உ | | | புத சுக் |
| 4 | புதன் | ந | ந | ஆ | ந | | ஆ உ | ந | ந | ந | ந | ந | நீ | சந், செவ், கு, சுக், சனி |
| 5 | குரு (வியாழன்) (அங்காரகன்) | | ந | ந | உ | ந | ந | ந | | ஆ | ந | ந | ஆ | சூரி, சந் புத, சுக் |
| 6 | சுக்கிரன் | ந | ஆ | ந | நீ | | | ஆ | ந | ந | ந | ந | உ | செவ், புதன் குரு, சனி |
| 7 | சனி | நீ | ந | ந | | | ந | | ந | ஆ | ஆ | ஆ | ந | புத, குரு, சனி |
| 8 | இராகு | ப | நீ | ந | ப | ந | ந | உ | ந | ந | ந | ஆ | ந | |
| 9 | கேது | | | | | | | | | | | | | |

பெரிய வருஷாத் நூல் பக் : 112 – ஆ = ஆட்சி; உ = உச்சம், ந = நட்பு, ப = பகை, வி = விடுதி வீடு சொல்லாத மற்றவர் பகை என்றறிக. இவர்கள் ஆட்சி வீடுகளே பகை வீடுகளாம்.

# 22. வசியப் பொருத்தம்

**01. வசிய நிலைகள் :**

**வசியம்** என்பது வசீகரத் தன்மை, அன்புடன் கணவன் மனைவியர் வசமாகும் தன்மை எனப்படும்.

**'வஸ்யாத் அன்யோன்ய வசியகம்'** என்பது நூல் மரபு.

மணமக்கள் ஒற்றுமையுடன் ஒருவரை ஒருவர் விரும்பி வாழும் அன்பு வாழ்வுக்கு இப்பொருத்தம் அவசியம்.

வசியப் பொருத்தம் இராசிகளைக் கொண்டு பார்க்க வேண்டியது.

பன்னிரண்டு ராசிகட்கும் வசியமான ராசிகள் உள.

பெண்ணின் ராசியைக் கொண்டு, ஆணின் ராசி வசியமாகின்றதா என்று பார்க்க வேண்டும்.

பெண் ராசிக்கு ஆண் ராசி வசியமிருந்தால் நன்று.

வசியமில்லா நிலை நன்றன்று.

பெண்ணின் ஜன்ம ராசிக்கு ஆணின் ஜன்ம ராசி வசியமாயின் உத்தமம்.

ஆணின் ஜன்ம ராசிக்குப் பெண்ணின் ஜென்ம ராசி வசியமாயின் மத்திமம்.

இதர ராசிகள் அதமம்.

வசியப் பொருத்தம் அமைந்தால் விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போகும் பண்பும், கருத்துப் பரிமாற்றப் பொறுமையும் அமையும்.

இருவர் ராசியும் ஒன்றாயினும் உத்தமம் என்பர்.

**02. உச்சநிலை :** கடக ராசிக்கு, தனுசு ஆறாவது ராசி வசியமாக உள்ளது. கடகராசியில் தான் தனுசு ராசியாதிபதி குரு உச்சம் அடைவார். ராசிப் பொருத்தத்திற்கு சிறு விதி விலக்காகும்.

இது போன்றே துலா ராசியாதிபதி சுக்கிரன், குருவின் ராசியான மீனத்தில் உச்சமடைவதால், சுக்கிரன் - அசுரகுரு, தேவகுரு - வியாழன், பகை என்றாலும் விதி விலக்குப்படி பொருத்தமாகலாம்.

## ராசிகளின் வசியப் பொருத்தம்

பெண் ராசிக்கு முதலாக வைத்தே வசியம் பார்க்க வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | மேஷராசிக்கு - | சிம்மம், விருச்சிகம் | ராசிகள் வசியம் |
| 2. | ரிஷப ராசிக்கு - | கடகம், துலாம் | ராசிகள் வசியம் |
| 3. | மிதுன ராசிக்கு - | கன்னி | ராசி வசியம் |
| 4. | கடக ராசிக்கு - | விருச்சிகம், தனுசு | ராசிகள் வசியம் |
| 5. | சிம்ம ராசிக்கு - | துலாம் | ராசி வசியம் |
| 6. | கன்னி ராசிக்கு - | மிதுனம் | ராசி வசியம் |
| 7. | துலா ராசிக்கு - | மகரம், கன்னி | ராசிகள் வசியம் |
| 8. | விருச்சிக ராசி - | கடகம் (கன்னியும் உண்டென்பர்) | ராசி வசியம் |
| 9. | தனுசு ராசிக்கு - | மீனம் | ராசி வசியம் |
| 10. | சிம்ம ராசிக்கு - | மகரம் | ராசி வசியம் |
| 11. | கன்னி ராசிக்கு - | ரிஷபம், மீனம் | ராசிகள் வசியம் |
| 12. | கும்ப ராசிக்கு - | மீனம் | ராசி வசியம் |

பெண் ராசியின் அதிபனும், ஆண் ராசியின் அதிபனும் நட்பானால் நன்று.

பகை கூடாது.

ஒருவருக்குச் சமமாகவும், மற்றொருவருக்கு நட்பாகவும் இருந்தாலும் நன்று.

ஒருவருக்குப் பகையாகவும், மற்றொருவருக்கு நட்பாகவும் இருந்தால் மத்திமம்.

***வசியப் பொருத்தம் அமையும் போது அனேகமாக பல இடங்களில் ராசிப் பொருத்தம் இராது.***

எடுத்துக் காட்டாக, மேஷத்திற்குச் சிம்மம் ஐந்தாம் ராசி, விருச்சிகம் எட்டாம் ராசி, ராசிப் பொருத்தத்தில் இவை விலக்கப்படும்.

காலவிதானம் நூல்படி

சிம்மராசிக்கு மகரம் வசியம்

கன்னி ராசிக்கு ரிஷபம் மீண்டும் வசியம்

துலாத்திற்கு மகரம் வசியம்

விருச்சிகத்துக்கு கடகமும் கன்னியும் வசியம்

கும்பத்திற்கு மீனமும் வசியம் என்று கூறப்பட்டுள்ளது.

பல இடங்களில் வசியப் பொருத்தமிருந்தால் ராசிப் பொருத்தம் இராது. ***இராசிப் பொருத்தத்தில் இவை விலக்குப் பெறும்.***

பொதுவாக வசியப் பொருத்தமிருந்தால், ராசி, ஷஷ்டாஷ்டகம் போன்ற தோஷங்கள் அடிபடும்.

உதாரணமாக, மேஷத்துக்கு சிம்மம் ஐந்தாம் ராசி

மேஷத்துக்கு விருச்சிகம் எட்டாம் ராசி. இவை ராசிப் பொருத்தத்தில் விலக்குப் பெற்று பொருத்தமாகும்.

இரண்டின் அதிபன் சுக்கிரன்

கடகத்துக்கு தனுசு ஆறாம் ராசி.

இவண் ஷஷ்டாஷ்டக தோஷம் உண்டு.



# 23. ரஜ்ஜுப் பொருத்தம்

ரஜ்ஜுப் பொருத்தத்தினைக் கயிற்றுப் பொருத்தம், மாங்கல்யம் பொருத்தம் என்பர். இது பெண் தீர்க்க சுமங்கலியாக இருக்க உதவும்.

***ரஜ்ஜு மாங்கல்ய விருத்தியஸ்தாக்*** என்பது சோதிட நூல் மரபு.

மற்றெல்லாப் பொருத்தங்களையும் விட ரஜ்ஜுப் பொருத்தம் மிக முக்கியமானது என்பர்.

ரஜ்ஜுப் பொருத்தம் இல்லை எனில் தம்பதிகள் சேர்ந்து வாழ முடியாமல் பிரிந்து விடுவார்கள்; வாரிசு இருக்காது; ஆயுள் விருத்தி பாதிக்கும்.

பத்துப் பொருத்தங்களில் ஒன்பது உத்தமமாக இருந்து ரஜ்ஜுப் பொருத்தம் இல்லை என்றால் திருமணம் நிச்சயிக்கக் கூடாது.

இருபத்தேழு நட்சத்திரங்களும் ஐந்து ரஜ்ஜுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை 1) பாத ரஜ்ஜு 2) தொடை ரஜ்ஜு 3) உதர ரஜ்ஜு 4) கழுத்து ரஜ்ஜு 5) கிரக ரஜ்ஜு என்பனவாகும்.

ஆரோகணம், அவரோகணம் என்ற பகுப்பும் இதில் உண்டு. ஆரோகணம் என்பது ஏறுமுகம். அவரோகணம் என்பது இறங்கு முகம்.

ஐந்து வகையாகக் குறிப்பிட்ட ரஜ்ஜுவில் சிரசு ரஜ்ஜுவுக்கு ஆரோகண இயல்புகள் இல்லை.

ஆண் பெண் நட்சத்திரங்கள் ஒரே ரஜ்ஜுவில் வரக் கூடாது.

ஒன்று ஆரோகத்திலும் ஒன்று அவரோகத்திலும் வந்தாலும் ரஜ்ஜு தட்டாது. மிகவும் சுகம் தரும்.

தம்பதிகள் இருவர் நட்சத்திரங்களும், ஏக ரஜ்ஜுவல்லாமல், ஆரோகன ரஜ்ஜுவானால் உத்தமம். அவரோக ரஜ்ஜுவானால் ஸ்திரீ நாசம்.

ஆண் பெண் ஒரே ரஜ்ஜுவாகி சிரசு ஆனால் புருஷன் மரணம்.

ஆண் பெண் ஒரே ரஜ்ஜுவாகி கண்டமானால் பெண் மரணம்.

ஆண் பெண் ஒரே ரஜ்ஜுவாகி வயிறு ஆனால் புத்திர தோஷம்.

ஆண் பெண் ஒரே ரஜ்ஜுவாகி தொடை ஆனால் ஒற்றுமைக் குறைவு.

ஆண் பெண் ஒரே ரஜ்ஜுவாகி பாதமானால் ரோகம்
தனித்தனியாக ரஜ்ஜுகளாக வந்தால் மாங்கல்ய பலன் உத்தமம்.

## ரஜ்ஜு பொருத்தம் அட்டவணை

### அட்டவணை–31

| ரஜ்ஜு | ஆரோகம் | அவரோகம் | ஆரோகம் | அவரோகம் | ஆரோகம் | அவரோகம் |
|---|---|---|---|---|---|---|
| தலை | பர 1<br>பூச 4<br>சுவா 3<br>திரு 2 | | | ரோ 2<br>பூரம் 1<br>அனு 4<br>சத 3 | | திருவா 3<br>ஹஸ் 2<br>பூரா 1<br>உத்ர 4 |
| கழுத்து | அசு 4<br>பூச 3<br>சுவா 2<br>திருவோ 1 | பரணி 2<br>ஆயி 1<br>சுவா 4<br>திரு 3 | ரோ 1<br>மகம் 4<br>அனு 3<br>சதய 2 | ரோ 3<br>பூரம் 2<br>கேட் 1<br>சத 4 | திரு 2<br>ஹஸ் 1<br>மூல 4<br>உத்ரட் 3 | திரு 4<br>ஹஸ் 3<br>பூரா 2<br>ரேவ 1 |
| நாபி (தொப்புள்) | அசு 3<br>பூச 2<br>சுவா 1<br>உத்ரா 4 | பர 3<br>ஆயி 2<br>விசா 1<br>திரு 4 | கார் 4<br>மகம் 3<br>அனு 2<br>சதய 1 | ரோ 4<br>பூர 3<br>கேட் 2<br>பூரட் 1 | திரு 1<br>உத்ர 4<br>மூல 3<br>உத்ர 2 | புன 1<br>ஹஸ் 4<br>பூரா 3<br>ரேவ 2 |
| தொடை | அசு 2<br>பூச 1<br>சித் 4<br>உத்ரா 3 | பர 4<br>ஆயி 3<br>விசா 2<br>அவி 1 | கார் 3<br>மகம் 2<br>அனு 1<br>அவி 4 | மிரு 1<br>பூரம் 4<br>கேட் 3<br>பூரட் 2 | மிரு 4<br>உத்ர 3<br>மூல 2<br>உத்ரட் 1 | புன 2<br>சித் 1<br>பூர 4<br>ரேவ 3 |
| பாதம் | அசு 1<br>புன 4<br>சித் 3<br>உத்ரா 2 | கார் 1<br>ஆயி 4<br>விசா 3<br>அவி 2 | கார் 2<br>மக 1<br>விசா 4<br>அவி 3 | மிரு 2<br>உத்ர 1<br>கேட் 4<br>பூரட் 3 | மிரு 3<br>உத்ர 2<br>மூல 1<br>பூரட் 4 | புன 3<br>சித் 2<br>உத் 1<br>ரேவ 4 |

***எண்கள் அந்த நட்சத்திரத்தின் பாதத்தினைக் குறிக்கும்.***

மேற்காட்டப்பட்டுள்ள அட்டவணையில் ஆண் பெண் நட்சத்திரங்கள் இடவலமாக ஒரே வரிசையில் வந்தால் ரஜ்ஜுப் பொருத்தம் கிடையாது.

அதேபோல் இரண்டும் அவரோக ரஜ்ஜுவானாலும் பொருத்தம் இல்லை.

ஒன்று ஆரோகமும், மற்றொன்று அவரோகமும் ஆனாலும் பொருத்தம் உண்டு.

தினம் (நட்சத்திரம்) அல்லது மாகேந்திரப் பொருத்தம் இருந்தால் ரஜ்ஜு தோஷமில்லை. இது விலக்கு விதி.

ஒரே ரஜ்ஜுவானால் கூட ஆண் நட்சத்திரம் ஆரோகத்திலும், பெண் நட்சத்திரம் அவரோகத்திலும் இருப்பது ஓரளவு நல்ல பொருத்தமாகக் கருதப்படும்.

நாடிப் பொருத்தமும், ரஜ்ஜூப் பொருத்தமும் ஒன்றுக்கொன்று குறிப்பிட்ட அளவிற்குப் பரஸ்பரத் தொடர்பு உள்ளது என்பது ஒரு கருத்து.

ரஜ்ஜு பொருத்தத்திற்கு மாற்று இல்லை என்ற கருத்தும் உள்ளது.

மிகவும் அதிக அளவு நுண்ணிய குறிப்புள்ள, நட்சத்திரங்கட்கு, அதன் பாதங்களையும் கணக்கிற் கொண்டு ஆய்வு செய்து தயார் செய்யப்பட்ட ஒரு ஆய்வாளர் தந்த அட்டவணையும் கீழே தரப்பட்டுள்ளது. இயலும்போது பயன்படுத்துக.

## *ரஜ்ஜூப் பொருத்தம் அட்டவணை*

### *(அட்டவணை –32)*

| | | | **பலன்** |
|---|---|---|---|
| பாதம் ரஜ்ஜு | ஆரோகணம் | அசுவணி, மகம், மூலம் | தேசாந்திரம் |
| ஏக ரஜ்ஜு | அவரோகணம் | ஆயில்யம், கேட்டை, ரேவதி | |
| ஊரு ரஜ்ஜு | அரோகணம் | பரணி, பூரம், பூராடம் | தனநாசம் |
| ஏக ரஜ்ஜு | அவரோகணம் | பூசம், அனுஷம், உத்திரம் | |
| நாபி ரஜ்ஜு | ஆரோகணம் | கார்த்திகை, உத்திராடம், உத்திரட்டாதி | சந்தானி ஹானி |
| ஏக ரஜ்ஜு | அவரோகணம் | புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | |
| கண்ட ரஜ்ஜு | ஆரோகணம் | ரோகிணி, ஹஸ்தம்,திருவோணம் | ஸ்திரீ நாசம் |
| ஏக ரஜ்ஜு | அவரோகணம் | திருவாதிரை, சுவாதி, சதயம் | |
| சிரோ ரஜ்ஜு | | மிருகசீருடம், சித்திரை, அவிட்டம் | புருஷ நாசம் |

## அட்டவணை –33

| ஆரோக பாத ரஜ்ஜு | அசுவதி, மகம், மூலம் | தம்பதியரின் பிரயாணத்திற்குத் தீங்கு ஏற்படும். |
|---|---|---|
| அவரோக பாத ரஜ்ஜு | ஆயில்யம், கேட்டை, ரேவதி | |
| ஆரோக துடை ரஜ்ஜு | பரணி, பூரம், பூராடம் | பொருள் நாசம் |
| அவரோக தொடை ரஜ்ஜு | பூசம், அனுஷம், உத்திரம் | |
| ஆரோக வயிறு ரஜ்ஜு | கார்த்திகை, உத்திரம், உத்திராடம் | புத்திர தோஷம் |
| அவரோக வயிறு ரஜ்ஜு | புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | |
| ஆரோக கழுத்து ரஜ்ஜு | ரோகிணி, திருவோணம், ஹஸ்தம் | ஒருவருக்கு (மனைவி) மரணம் |
| அவரோக கழுத்து ரஜ்ஜு | திருவாதிரை, சுவாதி, சதயம் | |
| சிரோ ரஜ்ஜு | மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் | இருவரில் (கணவன்) ஒருவருக்கு மரணம் |



# 24. நாடிப் பொருத்தம்

1. நாடி என்பது மருத்துவர் நமது கைநாடியைப் பிடித்து வாதம், பித்தம், சிலேத்துமம் ஆகிய மூன்று வகை நாடிகளை அறிந்து பார்க்கும் மருத்துவ நுணுக்கமாகும். வாத, பித்த, சிலேத்தும் நாடிகளை வாம, பார்சுவ, மத்திய நாடிகள் என்பதுண்டு.

இந்திய சோதிடக் கலை, இருபத்தேழு நட்சத்திரங்களையும் மூன்றாகப் பிரித்து அவை ஒவ்வொரு வகை நாடிக்குரியன எனக் கூறுகின்றது. ஒரே வேளை குறிப்பிட்ட நட்சத்திரக்காரருக்கு அந்தக் குறிப்பிட்ட நாடி உயர் நிலையில் இருக்கும் என்ற முடிவாக இருக்குமோ என்று எண்ண இடமுள்ளது.

***சிலர் நாடிப் பொருத்தத்தினைத் தவிர்த்துள்ளனர்.***

சிலர் வேதைப் பொருத்தத்துக்குப் பதிலாக நாடிப் பொருத்தம் பார்ப்பார்.

**உ. நாடிப் பொருத்த நட்சத்திரப் பட்டியலைக் கீழே தருகிறோம்.**

நாடிப் பொருத்த நட்சத்திரப் பட்டியல்

***அட்டவணை – 34***

| தட்சிண பார்சுவ நாடி<br>வாத நாடி/பார்சுவ நாடி | மத்திய பார்சுவ நாடி<br>பித்த நாடி/மத்திய நாடி | வாம பார்சுவ நாடி<br>சமான நாடி/சிலேத்தும நாடி |
|---|---|---|
| அசுவனி | பரணி | கிருத்திகை |
| திருவாதிரை | மிருக சீரிடம் | ரோகிணி |
| புனர்பூசம் | பூசம் | ஆயில்யம் |
| உத்திரம் | பூரம் | மகம் |
| ஹஸ்தம் | சித்திரை | சுவாதி |
| கேட்டை | அனுஷம் | விசாகம் |
| மூலம் | பூராடம் | உத்திராடம் |
| சதயம் | அவிட்டம் | திருவோணம் |
| பூரட்டாதி | உத்திரட்டாதி | ரேவதி |

வாத நாடியை, தட்சிண பார்சுவ நாடி என்றும் பார்சுவ நாடி என்றும் கூறுவதுண்டு.

பித்த நாடியை மத்திய நாடி என்றும் மத்திய பார்சுவ நாடி என்றும் கூறுவர்.

சிலேத்தும நாடியை சமான நாடி என்றும் வாம பார்சுவ நாடி என்றும் கூறுவர்.

01. பெண்ணுக்கும், ஆணுக்கும் ஒரே நாடியானால் பொருத்தமில்லை.
02. இருவருக்கும் வாத நாடியானால் மனைவிக்கு தோஷம்.
03. இருவருக்கும் பித்த நாடியானால் கணவனுக்கு தோஷம்.
04. இருவருக்கும் சிலேத்தும நாடியானால் இருவருக்கும் நல்லது.
05. இருவருக்கும் வெவ்வெறு நாடியானால் நன்று.

# 25. வேதைப் பொருத்தம்

+ – 0 * x = + – 0 * x = + – 0 * x = + – 0 *

1. ஸ்ரீவேதை என்றால் இடையூறு என்று பொருள் வேதை என்பதை வேதித்து, பிரதிப்லன் தருவது என்ற பொருளும் உண்டு.

***வேதாய சோக நாசனம்*** என்றபடி வேதைப் பொருத்தங்கள் நல்லபடி அமைந்தால், துன்பங்கள் – சோகங்கள் – துக்கங்கள் இல்லாமலிருக்கும் என்பர். ***வேதை இல்லை என்பதே வேதைப் பொருத்தம்.***

2. வேதையில் பரஸ்பர வேதை, பராதீன வேதை, ஸ்வாதீன வேதை என மூன்று வகை உண்டு.

3. ***மகேந்திரப் பொருத்தமிருப்பின் வேதை பார்க்க வேண்டாம்*** என்ற கருத்தும் உள்ளது.

4. பதினெட்டாம் நட்சத்திரமாக வந்தாலும் வேதை கிடையாது.

5. பொதுவாக வேதை என்றால் ஒவ்வாதது என்ற பொருளும் உண்டு.

6. ஒன்றுக்கு இன்னொன்று வேதையாக வரும் நட்சத்திரங்கள் பின்வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| 1. | அசுவதிக்கு (18) | கேட்டை | வேதை |
| 2. | பரணிக்கு (16) | அனுஷம் | வேதை |
| 3. | கார்த்திகைக்கு (14) | விசாகம் | |
| 4. | ரோகிணிக்கு (12) | சுவாதி | வேதை |
| 5. | திருவாதிரைக்கு (12) | திருவோணம் | வேதை |
| 6. | புனர்பூசத்துக்கு (14) | உத்திராடம் | வேதை |
| 7. | பூசத்துக்கு (16) | பூராடம் | வேதை |
| 8. | ஆயில்யத்துக்கு (11) | மூலம் | |
| 9. | மகத்துக்கு (18) | ரேவதி | |
| 10. | பூரத்துக்கு (16) | உத்திரட்டாதி | வேதை |
| 11. | உத்திரத்துக்கு (5) | பூரட்டாதி | வேதை |
| 12. | அஸ்தத்துக்கு (12) | சதயம் | வேதை |

7. மிருகசீரிடம், சித்திரை மற்றும் அவிட்டம் ஆகிய மூன்றும் ஒன்றுக்கொன்று வேதையாகும்.

8. ***அசுவணிக்கு கேட்டை வேதை என்பது போலக் கேட்டைக்கு அசுவனி வேதை இவ்வாறு எல்லா நட்சத்திரங்கட்கும் கொள்க.***

9. மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் என்ற மூன்றும் கூடி ஒன்றுக்கொன்று மேற் சொன்னபடி வேதை எனக் கொள்க.

10. ***வேதைப் பொருத்தம் இன்றேல் வாழ்வின் சுகபோகங்களில் ஒற்றுமை இருக்காது என்பர்.***

***11. வேதை எண் மரபு***

01. நட்சத்திர வரிசைப்படி எண்ணுகையில் மகத்துக்குப் பதினெட்டாவது நட்சத்திரம் ரேவதி.

02. பரணி, பூரம், பூராடம் முதலிய நட்சத்திரங்கட்கு பதினாறாவது நட்சத்திரங்கள் அனுஷம், உத்திரட்டாதி, பூசம்

03. ரோகிணி, அஸ்தம், திருவோணம் முதலியவற்றிற்கும் பன்னிரண்டாம் நட்சத்திரம் சுவாதி, சதயம், திருவாதிரை

04. கிருத்திகை, உத்திரம், உத்திராடத்துக்கு பதினான்காவது நட்சத்திரம் விசாகம், பூரட்டாதி, புனர்பூசம்.

# 26. தொல்காப்பியம் கூறும் பத்து ஒப்புக்கள்



**1. தொல்காப்பியம்** :இலங்கும் தமிழ் இலக்கண நூல்களுள் தொல்காப்பியம் தலையாயது. அது எழுத்து சொல் என்பவற்றிற்கு மேல், மனித வாழ்வைப் பற்றிய இலக்கணங்களையும் ஈந்துள்ளது. தொல்காப்பியப் பொருளதிகாரம் மனித வாழ்வு பற்றியது. அவண் மெய்ப் பாட்டியல் இருநூற்று அறுபத்தொன்பதாம் நூற்பா தலைவன் தலைவிக்கான பத்து வகை ஒப்பு என்னும் பொருத்தங்களைக் கூறுகின்றது.

**2. நூற்பா :**

பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டொடு
உருவு, நிறுத்த காம வாயில்,
நிறையே, அருளே, உணர்வொடு திரு, என
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே

என வருகின்றது.

## 3. பத்து வகை ஒப்பு

இவண் 1. பிறப்பு, 2. குடிமை, 3. ஆண்மை, 4. ஆண்டு, 5. உருவு, 6. நிறுத்த காம வாயில், 7. நிறை, 8. அருள், 9. உணர்வு, 10. திரு என்ற பத்து வகைப் பொருத்தம் (ஒப்புக்கள்) முறையுறக் கூறப்பட்டுள்ளன. இது பழந்தமிழ்த் திருமண முறை எனலாம்.

## 4. இளம்பூரணம்

இளம்பூரணர் தம் உரையில் இப்பத்துபற்றி நவிலும் விளக்கத்தைத் தருகிறோம்.

**1. பிறப்பு :** பிறப்பாவது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆயர், வேட்டுவர், குறவர், நுளையர் என்பன போல வரும் குலமாகும்.

**2. குடிமை :** குடிமையாவது அக்குலத்தினுள்ளார் எல்லாரும் சிறப்பாக ஒவ்வாமையின் அச்சிறப்பாகிய ஒழுக்கம் பற்றிய கூடி வரவைக் குடிமை என்றார்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்

(குறள் 972)

எனப் பிறரும் குலத்தின் கண்ணே சிறப்பென்பது ஒன்றுண்டென்று கூறினாராகலான்.

3. **ஆண்மை** : ஆண்மையாவது ஆண்மைத் தன்மை. அஃதாவது, ஆள்வினையுடைமையும் வலி பெயராமையுமாம்.

மொழியா ததனை முட்டின்று முடித்தல் (மரபியல் 190) என்பதனால் தலைமகள் மாட்டுப் பெண்மையும் கொள்ளப்படும். அது பெண்டிர்க்கு இயல்பாகிய நாணம் முதலாயினவும் பெண்ணீர்மையும்.

4. **ஆண்டு** : ஆண்டென்பது, ஒருவரினொருவர் முதியரன்றி ஒத்த பருவத்தராதல். அது குழவிப்பருவம் கழிந்து பதினாறு பிராயத்தானும் பன்னிரண்டு பிராயத்தாளும் ஆதல்.

5. **உருவு** : உருவு என்பது வனப்பு. (அழகு)

6. **நிறத்த காமவாயில்** : நிறுத்த காமவாயில் என்பது நிலைநிறுத்தப் பட்ட புணர்ச்சிக்கு வாயில். அதாவது, ஒருவர் மாட்டு ஒருவர்க்கு நிகழும் அன்பாகும்.

7. **நிறை** : நிறை என்பது அடக்கமாகும்.

8. **அருள்** : அருளாவது பிறர் வருத்தத்திற்குப் பரியும் கருணையாகும்.

9. **உணர்வு** : உணர்வென்பது அறிவு.

10. **திரு** : திரு என்பது செல்வமாகும். மேற்சொன்ன இப்பத்து வகையும் ஒத்த கிழவனும், (தலைவனும்) கிழத்தியும் (தலைவியும்) களவியல் காலத்தில் எதிர்ப்படுவர்.



# 27. அலி - நபும் சக யோக நிலைகள்



மணமக்கட்கு மக்கட்பேறு நன்கு அமைய முதலில் மணமகனிடம் ஆண்மைத் தன்மை அமைய வேண்டும். ஆண்மைக் குறைவு - அலித்தன்மை - நபும்சகம் என்றெல்லாம் கூறப்படும் **பீனா பலமின்மை** கூடாது. இந்த பீனா பலமின்மை தொடர்பான நிலைகளை நூற்றைம்பது வகைகளை சோதிட நூற் கூறுகளின் சேர்க்கை அமைப்பால் நூல்கள் நுவல்கின்றன. மணமகன் படித்தவனாக இருக்கும் போது, தக்க நூல்களைப் படித்து இந்த அலித் தன்மை தனக்கு உள்ளதா என்று அறிந்து திருமணத்துக்கு முன்பே மருத்துவ முறையில், தியான முறையில், யோக முறையில், சோதிட நாள் வைக்கும் முறையில் பரிகார முறையில் தீர்த்துக் கொள்ள முயல்வது நன்று. திருவரங்கம், ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் ஆசிரம சோதிட வித்வான் ஸ்ரீ.எஸ். சேஷாத்ரி என்பவர் எழுதிய திருமணப் பொருத்தங்கள் பாகம் இரண்டில் இதுபற்றி எழுதப்பட்டுள்ளது. இதில் வரும் செய்திகள் நடைமுறை வாழ்வின் நிகழ்வுகட்கு ஒத்ததாகவே உள்ளன. முழு விபரங்களை நூல்கள் வழி தக்க சோதிடர் வழி அறிக. சற்று மேன்மையான நிலையில் சிந்தித்தால் ஆண்மை பீனா பலம் பற்றிய மருத்துவச் சோதனையும் நிவர்த்தியும் கூட மணமகன் செய்து கொள்வது நன்று. இக்குறை பெண்கட்குக் குறைவு. அமரர் பி.எஸ்.ஐயர் அவர்களது தனது விவாஹ விஞ்ஞானம் என்ற நூலில் இதனை மிக விரிவாக ஆய்ந்துள்ளார். சந்தான பாக்கியம், சந்தான பாக்ய அறிகுறிகள், சந்தான சூரியன் கணிக்கும் விதம் முதலிய கருத்துக்களை நல்ல சோதிட நூல் வல்லுநர்களைக் கொண்டு அறிந்து கொள்வது நன்று. தோஷங்கட்கு சோதிட ரீதியான பரிகாரங்கள் மருத்துவ ரீதியான பரிகாரங்கள், மருத்துவத் தொடர்பான பரிகாரங்கள் செய்ய வேண்டியவர்கட்குச் செய்ய வேண்டிய முறையில் செய்யவும்.

# 28. களத்திர பாவப் பலன்கள்

01. ஒரு ஜாதகத்தின் 7-ம் இல்லம் களத்திர ஸ்தானம் என அழைக்கப்படுகிறது. ஆணுக்கு மனைவியின் அமைப்பையும், பெண்ணிற்கு கணவன் அமைப்பையும் குறிப்பிடுவதாகும். எனவே 7-ம் இடத்து கிரகம் ஆட்சி, உச்சம், நட்பு பெற்றிருத்தல் அவசியமாகும். கேந்திரம், திரிகோணம், சுபக்கிரகப் பார்வை, சுபக்கிரக சகிதம் பெற்று இருப்பது இன்றியமையாதது ஆகும்.

ஜனன லக்கினம் எதுவாயிருந்தாலும், அந்த லக்கினத்துக்கு 7-ம் இல்லத்தில் கிரகம், லக்கினாதிபதிக்கும் 7-ம் இடத்து அதிபதிக்கு நல்ல நட்பு உறவாக இருக்க வேண்டும்.

முடிவாக, ஜனன லக்கினம் எதுவாக இருந்தாலும் களத்திரக் காரனாகிய சுக்கிரன் நல்ல இடம் அமைந்து ஆட்சி, உச்சம், நட்பு பெற்று இருத்தல் வேண்டும்.

சுபக் கிரகங்களில் குரு களத்திர ஸ்தானத்தையும் களத்திர ஸ்தானாதிபதியையும் நோக்குவது மிக மிக அவசியமாகும்.

ஆண், பெண் அமைப்பு, ***சப்தம ஸ்தானாதி பதியையும்***, சுக்கிரனையும் அனுசரித்தே பலன்கள் எடுத்துரைக்க வேண்டும். 7-ம் இல்லத்தில் இருக்கும் கிரகம் அல்லது கிரகங்களை அனுசரித்துப் பலன் கூற வேண்டும்.

7-ம் இல்லத்தில் எந்தக் கிரகமும் இல்லாது சுத்தமாக இருக்க வேண்டும். குரு நோக்கம் இருந்தால் ஜாதக, ஜாதகிக்கு யோக **களத்திரம்** ஏற்படும். இதைத்தான் களத்திர சுத்தம் என்கிறோம்.

## 02. ஏழாவது பாவமும் திருமணப் பொருத்தம்

திருமணத்திற்கு 7வது பாவம் பார்க்க வேண்டும். 7வது பாவாதிபன் 7ம் இடத்தைப் பார்க்கின்ற கிரகங்கள், ***களத்திர காரகன்*** என்ற சுக்கிரன் வருகின்ற, ***தசாநாதர்கள்*** ஆணுக்கோ, பெண்ணுக்கோ பின்வரும் மிருத்யு பாகையில் (டிகிரிகளில்) இருந்தால் ஜாதகங்கள் சேர்க்கக்கூடாது. இதனைத் தெரிந்து கொள்ளச் சோதிடர் உதவியை நாடவும்.

# 29. ருது ஜாதகப் பலன்கள்

## 1. ருது பலன்கள்

01. ஸ்ரீபெண்ணுக்கு ருதுவாவதற்கு முன் பால்ய வயதில் திருமணம் செய்த காலத்தில் ஜெனன கால ஜாதகப்படி பொருத்தம் பார்ப்பது சரி. ருதுவாகி பல ஆண்டுகள் கழித்து, திருமணம் செய்யும் போது பெண்கட்டு ஜனன ஜாதகம் வைத்து பொருத்தம் பார்ப்பது ஒத்து வராது. அது சரியான பொருத்தத்தினை வழங்காது.

02. ருது ஜாதகச் செய்திகளை எல்லாப் பஞ்சாங்கங்களிலும் சோதிட கிரக சிந்தாமணி என்னும் வருஷாதி நூல், காலப் பிரகாசிகை போன்ற நூல்களில் ருது நட்சத்திர பலன், ருது வார பலன், ருது சமய பலன், ருது லக்கின பலன், ருது லக்கின இடம், ருது உடை பற்றி ஆரூட பலன், ருதுத் திதி பலன், ருது பாவம், ருது மாத பலன், ருது கிழமை பலன், ருது அம்ச பலன் முதலியவை தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

03. பொருத்தம் பார்க்கும் போது பெண்ணின் ருது நட்சத்திரத்தையும் அது போன்ற அம்சங்களையும் கணக்கில் கொண்டு பொருத்தம் பார்ப்பது மட்டுமே நன்று. ஜனன ஜாதகத்தில் கூறப்படும் அத்தனை அம்சங்களும் ருது ஜாதகத்திலும் அமைவதால் பொருத்தம் பார்க்க அமைக்கப்பட்ட பொது விதிகளின் படி ஆணின் ஜனன ஜாதகத்தையும், பெண்ணின் ருது ஜாதகத்தையும் பொருத்தம் பார்க்கவும்.

04. ஓரளவு நாமே இந்த நூலைப் படித்து விட்டு புரிவன புரிந்து, நல்ல சோதிடரிடம் இரு ஜாதகங்களையும் காட்டி நிதானமாகப் பொருத்தம் பார்ப்பது தம்பதியர்க்கு நன்று; நம் குடும்பத்துக்கம் நன்று; நம் நாட்டுக்கும் நன்று.

## 2. ருது ஜாதக முக்கியம்

01. பிறப்பு ஜாதகத்தில் தோஷம் இருந்தாலும், ருது ஜாதகத்தில் தோஷம் இல்லாமலிருந்தால், பிறப்பு ஜாதக தோஷம் கணவனை பாதிக்காது.

02. அதே சமயம், பிறப்பு ஜாதகத்தில் தோஷமின்றி சுத்தமாக இருப்பினும், ருது ஜாதகத்தில் தோஷமிருந்தால் அது வாழ்க்கையைப் பாதிக்கும்.

03. பிறப்புக் காலத்தில் தோஷமிருப்பினும், ருது ஜாதகத்தில் தோஷமிருப்பினும், திருமண முகூர்த்த நேரம் சிறப்பான நேரமாக அமைந்தால் மேற்சொன்ன இருவகை தோஷங்களும் விலகும்.

04. ஜனன ஜாதக தோஷங்களையும், ருது ஜாதக தோஷங்களையும், போக்க வல்ல வல்லமை, சரியான முறையில் கணித்து வைக்கப்படும் சாந்தி முகூர்த்த நேரமாகும்.

## 3. ருது ஜாதக சிறப்புக்கள்

பெண்கட்குப் பருவமடைந்த பின்னர் திருமணம் நடந்தால், பெண்ணின் ருது ஜாதக பலன்களே நிகழும். ஜனன ஜாதகப் பலன்கள் அனுபவத்தில் வராது. எனவே ருது ஜாதகத்தை ஆராயும் முறைகள் கீழே நல்கப்படுகின்றன.

01. ருது லக்ன அதிபர், லக்னத்தில் பலவானாக இருக்க, எல்லா நன்மைகளும் உண்டாகும்.

02. ருது லக்னத்திற்கு, 2ல், சுப கிரகங்கள் இருக்க, பலவித நன்மைகள் உண்டாகும்.

03. 9ன் வீட்டில், சந்திரனும் குருவும் இருந்தால், ராஜயோகம் தரும்.

04. லக்னத்தில் குரு நின்றால் செல்வ வளம் கொழிக்கும்.

05. நான்காம் இடத்தில் சுப கிரகங்கள் நின்றால், நல்ல கணவன் தானே தேடி வந்து மணப்பான்.

06. லக்னத்திற்கு எழாமதிபன் 4ல் நிற்க, வளர்பிறைச் சந்திரன், 7ல் இருந்தால் சிறப்பான வாழ்வு அமையும்.

07. ருது லக்னத்திற்கு, 8ம் அதிப்தி, சுப கிரகத்தோடு நின்றால், தீர்க்க சுமங்கலியாக இருப்பாள்.

08. ருது லக்னத்திற்கு 12ம் அதிபதி சுபனாகி, சூரியன், சந்திரன் உச்சமாகில், பயமற்ற வாழ்வு அமையும். இந்த ஜாதகத்தில் ஜனன காலத்தில் செவ்வாய் தோஷமிருந்தாலும் பாதிக்காது. அரச போகத்துடன் அவரது வாழ்க்கை அமையும்.

09. சிம்மம், கன்னி, மகரம், கும்பம், இவை ருது லக்னமாவது, நல்ல நெறியையும், பொறுமையும் தரும்.

10. லக்னம் குஜனால் (செவ்வாயால்) பார்க்கப்படுவது சுபம்.

11. சந்திரன் லக்னத்திற்கு 3, 5, 10, 11ல் இருப்பது சுபம்.

12. ருது லக்னத்திற்குக் கேந்திர திருக்கோணங்களில் சுபரும். 3, 6, 11ல் பாபரும் இருப்பது, அதிக நன்மை. மற்ற விபரங்களை ஸ்திரீ ஜாதகம் முதலான கிரந்தங்களில் கண்டு கொள்ளவும். அல்லது திருமணப் பொருத்தங்களைப் பற்றிய நூல்களில் காணவும்.

## 4. ருது தொடர்பான பலன்தரு செய்திகள்

1. ருது ஏற்பட்ட இடம். 2. ருது கால லக்கினப் பலன். 3. ருதுவான கிழமைப் பலன், 4. ருது காலத் திதிப் பலன், 5. ருது தரிசனப் பலன், 6. ருது கால நட்சத்திரப் பலன், 7. ருது நட்சத்திரத்தின் கிரகம் நின்ற பலன், 8. ருது லக்கினத்துக்கு ஏழில் கிரகம் நின்ற பலன், 9. ருது காலப் பலன், 10. ருது ஆவதற்கு முன் திருமணம் ஆகியிருந்தால் நிஷேதத்துக்கு ஏற்ற நாள் முதலிய தலைப்புகளின் அவற்றிற்கான பலன்களைக் கீழ்வரும் அட்டவணைகளில் காணலாம். ***எல்லா முடிவுகளும் நல்ல சோதிடரைக் கொண்டு கணிக்க வேண்டிய அவசியத்தை மறந்து விடக் கூடாது.***

### ருது நேரத்திற்கான பலன்கள்

### 01. ருது ஏற்பட்ட இடம் பற்றிய பலன்கள்

| | | |
|---|---|---|
| 1. | வீட்டிற்குள் | ஒழுக்கமுடையவள் |
| 2. | வீட்டிற்கு வெளியே | ஒழுக்கக் குறைவு |
| 3. | மாட்டுக் கொட்டகை | கற்பரசி |
| 4. | ஆறு, கிணறு, குளம் | ஆயுள் பலமுண்டு |
| 5. | காட்டில் | தனசம்பத்து சேரும் |
| 6. | கிராம நடுவில் | ஒழுக்கக் குறைவு |
| 7. | அயலார் வீட்டில் | கெட்ட நடத்தை |
| 8. | கோவில், பள்ளி | சமத்து |
| 9. | பல பெண்களின் நடுவில் | சுகபோகமுடையவள் |

| | | |
|---|---|---|
| 10. | படுக்கையில் | தகப்பனாருக்கு தோஷம் |
| 11. | நிற்கும் பொழுது | நல்ல வாழ்வு |
| 12. | சாப்பிடும் பொழுது | மிக நன்மை |
| 13. | வாகனப் பயணத்தில் | திரவிய யோகம் உண்டு |
| 14. | வயல் வெளியில் | பூமியோகமுண்டு |

## 02. ருது கால லக்கினப் பலன்

| | | |
|---|---|---|
| 1. | மேஷம் | வறுமை |
| 2. | ரிஷபம் | அளவான வாரிசு |
| 3. | மிதுனம் | கணவன் மேலன்பு |
| 4. | கடகம் | மிகுந்த வாரிசு விளையும் |
| 5. | சிம்மம் | தம்பதியர் பிரிவு |
| 6. | கன்னி | கற்புடையவள் |
| 7. | துலாம் | தனசம்பத்து |
| 8. | விருச்சிகம் | சோரம் போதல் |
| 9. | தனுசு | நீதி நெறி உடையவள் |
| 10. | மகரம் | மனமில்லாதவள் |
| 11. | கும்பம் | திரவியமுடையவள் |
| 12. | மீனம் | வாரிசு பெறுவாள் |

## 03. கிழமைப் பலன்

| | | |
|---|---|---|
| 1. | ஞாயிறு | ரோகம் |
| 2. | திங்கள் | கற்பரசி |
| 3. | செவ்வாய் | தொல்லையுள்ளவள் |
| 4. | புதன் | பொன்பொருள், மகப்பேறு |
| 5. | வியாழன் | சௌபாக்கியவதி |
| 6. | வெள்ளி | பதிபக்தி உடையவள் |
| 7. | சனி | ஒழுக்கக் குறைவு உடையவள் |

## 04. ருதுகாலத் திதிப் பலன்கள்

| | | |
|---|---|---|
| 1. | பிரதமை | பாபம் செய்வாள் |
| 2. | துதியை | பாக்கியவதி |
| 3. | திரிதியை | மகப்பேறு உடையவள் |
| 4. | சதுர்த்தி | பலர் நேசமுடையவள் |

5. பஞ்சமி பல நன்மை பெறுவாள்
6. சஷ்டி சண்டைக்காரி
7. சப்தமி மகப்பேறு விளையும்
8. அஷ்டமி அரக்க குணமுடையவள்
9. நவமி தோஷமுடையவள்
10. தசமி மகப்பேறு உண்டு
11. ஏகாதசி சுகபோகமுடையவள்
12. திரயோதசி உடல்வாகுடையவள்
13. சதுர்தசி ஒழுக்கக்குறைவு
14. பௌர்ணமி அண்டை வீடு சுற்றுபவள்
15. அமாவாசை வறுமை

## 05. ருது தரிசனப் பலன்கள்

1. தனக்குத் தானே பார்த்தால் - துக்கம்
2. கன்னிப் பெண் பார்த்தால் - புண்ணியவதி
3. கைம்பெண் காணில் - அமங்கலி
4. வியாதியஸ்தர் காணில் - நோயாளி
5. வேசி கண்டால் - சம்போக பாக்கியம்
6. மாங்கல்ய ஸ்திரீ கண்டால் - சுமங்கலி

## 06. ருதுகால நட்சத்திரப் பலன்கள்

1. அசுபதி - சுபம்
2. பரணி - அயலார் வீட்டுவாசி
3. கார்த்திகை - தரித்திரம்
4. ரோகிணி - புத்திர பாக்யமுண்டு
5. மிருகசீரிடம் - சுகபோகமுடையவள்
6. திருவாதிரை - ஏமாளி
7. புனர்பூசம் - பதிவிரதை
8. பூசம் - கணவன் மீது அன்புடையவள்
9. ஆயில்யம் - கள்ளங் கபடுடையவள்
10. மகம் - புத்திர நாசம் விளையும்
11. பூரம் - கர்ப்பச் சிதைவு விளையும்
12. உத்திரம் - தனதான்ய சம்பத்துடையவள்
13. அஸ்தம் - உறவினர்களை நேசித்துக் காப்பாள்

| | | | |
|---|---|---|---|
| 14. | சித்திரை | - | பதிவிரதை |
| 15. | சுவாதி | - | மிகுந்த ஆண் மகப்பேறு உடையவள் |
| 16. | விசாகம் | - | அசூயை கொண்டவள் |
| 17. | அனுஷம் | - | கணவனிடம் மிகு அன்பு |
| 18. | கேட்டை | - | அடைபட்டுக் கிடப்பாள் |
| 19. | மூலம் | - | புத்திர பாக்யமுடையவள் |
| 20. | பூராடம் | - | கவலை உடையவள் |
| 21. | உத்திராடம் | - | தனசம்பத்துடையவள் |
| 22. | திருவோணம் | - | பாக்யமுடையவள் |
| 23. | அவிட்டம் | - | புத்திரப் பேறுள்ளவள் |
| 24. | சதயம் | - | பூரண ஆயுளுள்ளவள் |
| 25. | பூரட்டாதி | - | கணவனுக்கு நோய் |
| 26. | உத்திரட்டாதி | - | வறுமை |
| 27. | ரேவதி | - | சகல சம்பத்துடையவள் |

**7. ருது நட்சத்திரத்தில் கிரகம் நின்ற பலன்கள் .**

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கணவன் மரணம் |
| 2. | செவ்வாய் | - | ஆயுள் குறைவு |
| 3. | புதன் | - | மலடி |
| 4. | குரு | - | விரதம் அனுஷ்டிப்பாள் |
| 5. | சுக்கிரன் | - | மலடி |
| 6. | சனி | - | ஒழுக்கக் குறைவு |
| 7. | ராகு | - | சோரம் போவாள் |
| 8. | கேது | - | துறவுணர்வு |

**8. ருது லக்கினத்துக்கு 7ல் கிரகம் நின்ற பலன்**

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | விதவை |
| 2. | சந்திரன் | - | புத்திர சேதம் |
| 3. | செவ்வாய் | - | ஒழுக்கக் குறைவு |
| 4. | புதன் | - | மலடி |
| 5. | வியாழன் | - | பாக்கியமில்லாதவள் |
| 6. | சுக்கிரன் | - | வீடு விட்டு வெளியேறுவாள் |
| 7. | சனி | - | ரோகமுடையவள் |

| | | | |
|---|---|---|---|
| 8. | ராகு | - | கணவனை இழப்பாள் |
| 9. | கேது | - | உறவினரை பகை கொள்வாள் |

## 9. ருது காலப் பலன்கள்

| | | |
|---|---|---|
| 1. | விடியற்காலை | சுபம் |
| 2. | முற்பகல்னால் | தீர்த்தயாத்திரை |
| 3. | நடுப்பகலானால் | புத்திர சம்பத்து |
| 4. | பிற்பகலானால் | ஒழுக்கச் சிதைவு |
| 5. | மாலைக் காலமாகில் | புத்திரப் பேறு |
| 6. | முன்னிரவாகில் | தீர்க்காயுள் |
| 7. | நடு இரவு ஆகில் | விதவை |
| 8. | பின்னிரவாகில் | சுகவீனம் |
| 9. | அஸ்தமனமாகில் | ஒழுக்கச் சேதம் |

## 10. ருதுப்படி நிஷேகத்துக்கு ஏற்ற நாள்

சில் நட்சத்திரங்களில் ருது ஏற்பட்டால் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பின்னர் அப்பெண்ணுக்கு முதலிரவு (நிஷேகம்) செய்தல் உத்தமம் ஆகும். அதற்கு முன்னர் செய்தால் தோஷம் ஏற்படும்.

1. பரணியில் ருதுவானால் - 10 மாதங்களுக்குப் பின்னர் முதலிரவு செய்ய வேண்டும்.
2. பூராடத்தில் ருதுவானால் - 8 மாதத்துக்குப் பிறகு முதலிரவு செய்ய வேண்டும்.
3. மகரத்தில் ருதுவானால் - 12 மாதத்துக்குப் பின்னர் நிஷேகம் செய்ய வேண்டும்.
4. திருவாதிரை, பூரத்தில் ருதுவானால் - 6 மாதத்துக்குப் பின்னர் முதலிரவு செய்ய வேண்டும்.
5. ஆயில்யம், கிருத்திகை, கேட்டையில் ருதுவானால் - 4 மாதம் கழித்து நிஷேகம் செய்ய வேண்டும்.
6. உத்திரத்தில் ருதுவானால் 6 மாதம் கழித்து நிஷேகம் செய்ய வேண்டும்.



# 30. உண்மையும் - அன்மையும் கலந்த பழ மொழிகள் சில



பரணி தரணி ஆளும்
ஆண் மூலம் அரசாளும்
உத்திராடத்திற்கு ஓர் காணி
அவிட்டம் தவிட்டுப் பானையில் எல்லாம் தனம்
ஐந்தாவது பெண் கெஞ்சினாலும் கிடைக்காது.
ஆறாவது பிள்ளை ஆனை கட்டி ஆளும்
பெண் மூலம் நிர்மூலம்
விசாகம் வீட்டைத் துடைக்கும்
ஆயில்யம் மாமியார்க்கு ஆகாது
எட்டாவது பெண் எட்டிப் பார்த்த வீடு குட்டிச் சுவர்
கேட்டை கோட்டையை ஆளும்
கேட்டைப் பெண் அதிகப் பிரசங்கி
பூராடம் நூலாடாது
திருவாதிரை சாப்பாட்டுக்குத் தெருவில் அலையும்

முதலிய பல மொழிகள் எதுகை, மோனையுடன் உலவுகின்றன. அவற்றில் உண்மை இல்லை;

எல்லாவற்றிற்கும் தீர்வு நன்முறையில், நல்ல சோதிடர் வழி, *உழைப்புக்கேற்ற தட்சிணை ஈந்து சோதிடரை அதட்டாது, நம் கருத்தை அவர் கணிப்பில் திணிக்காது, மரியாதையாக நடத்தி தக்க காலம் தந்து பொருத்தங்கள் கணிப்பது நன்று.*





# 31. திருமணத்துக் காத்திருக்கும் அருமைப பேரனுக்கும், பேத்திக்கும் தாத்தாவின் அறிவுரைகள்

**1. அன்பான இணக்கமான வாழ்வுக்கு :**

அ. இன்றியமையாதது, காதல், காம நிறுத்த வாயில் என்னும் மத்யமமான அழகு.

ஆ. மிகு அழகும், மிக அழகின்மையும் கொடுமையான துன்பத்துக்கும் இணக்கமின்மைக்கும் வழி வகுப்பன.

**2. கலப்புத் திருமணம், காதல் திருமணம் என்பன :**

அ. கானல் நீர் ஆகும்; காதல், கலப்படத் திருமணம் செய்து கொண்ட, சந்தர்ப்பவாதிகளான பக்குவப்படாத அரசியல்வாதிகள், அறிவு ஜீவிகள், பகுத்தறிவுப் போர்வையாளர், நாத்திக ஆத்திகர், மேட்டுக் குடியினர், தன் துன்பத்தைச் சொல்லி ஆற்றிக் கொள்ளக் கூட இயலாத அனாதைகளாக வாழ்நாளிலேயே நரகத்தை ஓரளவு அனுபவித்து வருகின்றனர்.

**3. சமயம், சாதி, குலம், பிறப்பு மரபு**

ஆ. ***சாதி, குலம், பிறப்பு, சமயம், மரபு முதலியன மிக மிக மிக இன்றியமையாத, மாற்ற முடியாத நிரந்தர நன்மை தரும் கட்டுக் கோப்பு.*** ஏதேனும் புதிதாகக் கண்டு பிடித்துச் சொல்ல வேண்டும் என்ற போலிப் புதுமை விரும்பிகள் ஏதோ ஒன்றை நினைத்து ஏதோ ஒன்றை சொன்ன நிலை தான் சமய, சாதி குலப் பிறப்பெல்லாம் தீமை நல்குவன என்பது.

**4. வரதட்சிணை, செல்வம்**

அ. மிகு செல்வம், மிகு வரதட்சிணை பெற்றுத் திருமணம் செய்து கொள்பவர், ***தாழ்வு மனப்பான்மையாலும், ஏற்றத் தாழ்வு பேத விசித்திரப் போக்காலும் தாக்குண்டு தவிப்பர்.***

ஆ. திருமணம் செய்து கொள்ளும் போது, மனைவி பக்கம் செல்வமாக இருந்து, நடு வயதில் கணவன் பக்கம் செல்வமும்

செல்வாக்கும் மிகுந்தாலும் பக்குவமற்ற பெண்கள் ***கடைசிவரை கணவனை அவ்வளவாக மதிப்பதில்லை***

### 5. உறவே வேண்டாம் :

உறவில் திருமணம் வேண்டாம் என்று விஞ்ஞான ரீதியாக நினைப்பவர்கட்குத் தெரியும், உறவில் திருமணம் செய்து கொண்டால் ***சுற்றமும் நட்பும் சூழ உறவுடன் மகிழலாம்.*** இன்றேல் ***பணக்கார அனாதைகள்*** ஆகித் தவிக்கலாம்.

### 6. சடங்கா? மேடையா?

மேடைத் திருமணம் அபச குன வாய் வீச்சில் வளரும். சடங்குத் திருமணம் ***அமைதியான தெய்வ அருளில்***, திளைத்து, வளரும்.

### 7. மகப் பேறு :

அ. இறையருளால் மகப்பேறு எல்லோருக்கும் அமைவது இயற்கை.

ஆ. மகப்பேறின்மைக்கு அடிப்படைக் காரணம் கணவன் மனைவி ஒரு மனத்தவராய் கூடி மகிழ்வதில்லை.

இ. வயதான திருமணத்துக்கு முன் சுய இன்பம், ஓரின இன்பம் துய்த்ததன் தீய விளைவும் மகப் பேறின்மைக்குக் காரணமாகும்.

ஈ. நல்வினை தீவினையும் ஒரு காரணம், தர்க்க (வாதாடுதல்) வாழ்வில் ஒருமை ஏற்படாமையும் காரணம். சுற்றம் சூழ, மகப்பேறு எய்த வாழ்த்து பெறுங்கள்.

உ. மிக்குயர்ந்த சோதிடர்கள் இதற்கான காரணங்களை ஜாதக ரீதியாக அறிந்து பரிகாரம் சொல்கின்றனர்.

ஊ மகப்பேறு தொடர்பாக சோதிட நூல்களில் நூற்றைம்பது அலித்தன்மை என்னும் நபும்சக நிலைகள் கூறப்பட்டுள்ளன. மருத்துவ விஞ்ஞானத்துக்கு மேற்பட்ட ஆய்வு இது.

எ. ***இறைவனை வேண்டி, தக்க மருத்துவர் யோசனை பெற்று, விரத அடக்கத்துடன் இருந்து, வீரியம் தேக்கி க்ஷேத்ராடனத்தின போது, தக்க மனஒருமையுடன் அன்புடன் பக்தியுடன் இணைந்து இறைவனை வேண்டிக் குழந்தை பெறலாம்.***

ஏ. ஒவ்வொரு குடும்பத்துக்கும் குறைந்தது இரண்டு, அதிகபட்சம் மூன்று குழந்தைகள் இருப்பது மகிழ்வுக்கும், வாழ்க்கைத் தெம்புக்கும் நன்று. ஒன்று போதும் என்பது அவ்வளவு நன்றன்று.

**8. சோதிடப் பொருத்தங்களில் கூறப்படும், 23க்கு மேற்பட்ட பொருத்தங்கள், இருபது வகை வாழ்வியல் பொருத்தம், தொல்காப்பியர் கூறும் பத்துவகை ஆய்வு முதலியன பல்லாண்டு கால ஆய்வுகளின் முடிவு :**

திருமணத்துக்கு காத்திருக்கும் ஆண் பெண் இருவரும் அவர் தம் பெற்றோர் கட்டாயம் படித்து,புரிந்து கொண்டு திருமண வாய்ப்பை விரைந்து முறையாக நாடுவது நன்மை பயக்கும். ***வரதட்சிணை பேரத்திலேயே காலம் தாழ்த்துவது நன்றன்று.***

**9. பாரம்பரியம், குடிப்பிறப்பு சமயம், சாதி, ஊர், மாவட்டம் நாடு, உறவு முதலியன :**

அ. கணவன் மனைவி இணக்கத்தினை எளிதில் உண்டாக்கும் அடிப்படை வழிகள். இவ்வகை திருமணங்களில் மணவிலக்கு மிகக் குறைவு. மணவிலக்கு எண்ணமோ, பிணக்கோ ஏற்பட்டால் சந்து செய்ய ஊரும் சுற்றமும், நட்பும் வரிந்து கட்டிக் கொண்டு துணைக்கு வரும்.

ஆ. இவை இல்லாத் திருமணங்களில் சட்டமும், வக்கீலும், ஆணவமும், தீய பகை எண்ணமும் ***பேதங்களை உண்டாக்கிக் கொண்டே பூதாகாரமாய் வளர்ந்து இருக்கும்.***

**10. உயரமும், உடற்கட்டும்**

உங்கட்கே தெரியும், ஒத்த உடற்பலம், ஒத்த தாம்பத்ய உறவுக்கு உயரம், உடற்கட்டில் மிக மிக அவசியம்.

**11. அழகும், நிறமும்**

அ. உளுந்தும், அரிசியுமாக இல்லாது, கடலைப் பருப்பும், துவரம் பருப்புமாக அமைதல் நன்று.

ஆ. மற்றவர் கண்ணில் பொருத்தமான தம்பதி என்ற வாக்கு வாழ்த்து மிக மிகத் தேவை.

இ. அதிக அழகு ஒரு வகையில் ஆபத்தாகவே அமைகின்றது. மிக மிகக் கொடியது.

## 12. அந்தஸ்து பேதம்

எளிமையில் இருப்போருக்கு மேலே செல்ல ஆசை. மேலே வர விரும்பும் எல்லோரையும் விரட்டிக் கீழே கொண்டுவிடும் பக்குவமின்மையும் உண்டு. எல்லா வகையிலும் முடிந்த வரை ஒன்றில்லை என்றால், ***இன்னொன்றில் ஆடவன் வழி உயர்வு இருப்பதே நன்று எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.***

## 13. நல்ல நேரம் பார்த்தல், சாதகம் பார்த்தல் முதலியன லஞ்சம் வாங்குவது போல் மிகு பாவம் இல்லை.

அ. பண்டைச் சாத்திரங்களின் சோதிட நெறி, உலகம் முழுவதிலும் மேட்டுக் குடியினர் அனைவரும் பயன்படுத்தும் அறிவு.

ஆ. வெட்கப்பட வேண்டாம்.

இ. உயர் இந்திய சோதிட பஞ்சாங்க, வான சாஸ்திர, ஆன்மிக, பிரபஞ்ச இயல் கலைகளைப் பயன்படுத்தி உயருங்கள்.

## 14. திருமணத்துக்குப்பின், கணவன், மனைவி தாம்பத்ய உறவு, பழங்காலத்தில், நாள், கிழமை பருவம் முதலிய கட்டுப்- பாட்டுக்குள் அமைந்தது.

வீரியத் தேக்கம், ஆர்வத் தேக்கம், அன்புத் தேக்கம் கொண்டு தாங்களே விதித்துக் கொண்ட அல்லது சோதிடக் கலையில் விதிக்கப்பட்ட கட்டுப்பாட்டுகளோடு உறவு கொண்டால் உன்னத முயக்கம் கிட்டும்.

## 15. எளிமை, செம்மை, சிக்கனம் விட்டுக் கொடுத்தல், மற்றவரை மதித்தல், நன்மை கண்டு பாராட்டல், குற்றம் கூறாமை, பொறாமைப் படாமை, ஆசை அளவைக் குறைத்தல், கோபம் இன்மை, இனியவை கூறல், இன்னா சொற் பயிலாமை, சுற்றம் தழுவல்

முதலியன வள்ளுவரும் மற்ற எல்லோரும் கூறும் இன்ப வழிகள். இன்ப சுவர்க்கப் பாதைகள்.

இல்லறத்தை நல்லறமாக்கும் நல்வழிகள்.

துன்பம் போக்கிக் காக்கும் கவசங்கள்.

அன்பையும் ஆதரவையும் அன்பையும் ஆதரவையும் மகிழ்வையும் பெருக்கும் கிரியா ஊக்கிகள்.

இறைவன் விரும்பும் மானிட பக்தி நெறி.

### 16. சுற்றம் தழுவும் சுகத்தால்

துன்பம் உண்டு, ஆனால் நிரந்தர இல்லறப் பாதுகாப்புச் சுகம் உண்டு.

ஆ. ஈத்துவக்கும் இன்பம் — தாழ்வு மனப்பான்மையில்லா சுய நிர்ணய மகிழ்வைத் தரும்.

இ. வேண்டாமை அன்ன விழுச் செல்வம். — என்றும் தன்னைத்தானே உயர்த்திக் கொள்ளும் வழி.

ஈ. இனிய உணவாக இன்னாத கூறல் எண்ணல் — இவ்வுலகத்திலேயே சுவர்க்கத்தைப் படைக்கும் - வித்தை

உ. அழுக்காறு, அவா, வெகுளி இன்னாச் சொல் தவிர்த்தல் — அதுவே அறம்; இன்பம், சுவர்க்கத் திறவு

ஊ. அம்மா பெரிதென அக மகிழ்தல்

கிடைத்த வசதி வாய்ப்புக்கு இறைவனுக்கு நன்றி செலுத்தலாம் மனநிறைவு, வாழ்வியல் நம்பிக்கை தரும்.

எ. இருப்பதை மறந்து இல்லாததற்கு ஏங்குதல் — அரை கிணறு தாண்டும் அரை வேக்காட்டு வாழ்க்கை. போதும் என்ற மனமே பொன் செய்யும் உலகம்.

### 17. இறைவன் கொடுத்த வரம்.

பூர்வ ஜென்ம நல்வினை, தீவினைக் கேற்ப, வாழ்வும், கணவனும், மனைவியும், மகப்பேறும், செல்வமும், பதவியும் அமையும். இறைவன் தரு வரங்கட்குத் தட்டுங்கள் திறக்கப்படும். கேளுங்கள் கொடுக்கப்படும்.

### 18. அன்பும் அறனும் உடைத்தாயின்

இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது.

### 19. அறத்தாற்றி ஈட்டிய யாவும்

இயல்புடைய, மூவர்க்கும் துணை நிற்பதற்கே.

### 20. அன்பே சிவம்.

அன்பே வாழ்க்கை அன்பே அறம். அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு. அன்புற்றார் இன்புற்றார். அகத்துறப்பு அன்பொன்றே

அன்பு மலரத் துன்பம் தேயும் அன்பு பெருகப் பெருக வெறுப்பும் வேற்றுமையும், கவலையும் துன்பமும் இயலாமையும் தணியும்.

**வாழ்க பல்லாண்டு**
**வளம் பல எய்தி**
**காவிரி மணலினும் பன்னாள்**
**கங்கைப் புனலிலும் புனிதமாய்**
**வளமிகு தெங்கு வானுயர்ந்தன்ன**
**பயன்மிகு மாந்தராய் வாழி**



# 32. உலகியல் முறையில் திருமணப் பொருத்தம்



1. உடல் நலம், உலகியல், பாரம்பரிய வழி முறை, 2. உயிரியல் (ஆன்மீக) நிலை, 3. குடும்ப நெறிகள், குடியியல் உறவு முறை முதலியவற்றில் மணமகனுக்கும் மணமகளுக்கும் பொருத்தம் பார்த்தல் மிக மிக இன்றியமையாதது.

2. மணமகன், மணமகள், நெருங்கிய உறவினர் பெற்றோர் யாரேனும் இருவர் இவ்வட்டவணையினைப் பூர்த்தி செய்து பார்ப்பது நன்று மூவர் செய்யின் மிக நன்று. மணமக்கள் இருவரும் பூர்த்தி செய்து பார்ப்பது மிக மிக நன்று.

3. வேண்டும் எண்ணிக்கை இதனை ஜெராக்ஸ் செய்து கொள்ளலாம்.

4. மணமகன், மணமகள் இருவர் பக்கமும் நன்று, மிக நன்று, சராசரி, நன்றன்று என்று கையால் பென்சிலால் எழுத வேண்டும். அடுத்து திருப்பிப் பார்க்கும் போது கருத்து வேறுபடும் போது அழித்து விட்டு மாற்றி எழுதிக் கொள்ளலாம்.

# உலகியல் நிதர்சனப் பொருத்த வினாப்பட்டி

*அட்டவணை–35*

மிக நன்று, நன்று, சராசரி, நன்றன்று ஏதேனும் ஒரு கட்டம் ✔ குறியிடுக

| வ. எண். | மணமகன் பக்கம் பொருத்தம் | | | | பண்புகள் / நிலைகள் | மணமகள் பக்கம் பொருத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று | | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று |
| | | | | | A. ***உடல் நல வகை*** | | | | |
| 1 | | | | | அழகு – உரு (தொல்) | | | | |
| 2 | | | | | உயரம் | | | | |
| 3 | | | | | வயது | | | | |
| 4 | | | | | நிறம் | | | | |
| 5 | | | | | உடற்கட்டு | | | | |
| 6 | | | | | நோயின்மை | | | | |
| 7 | | | | | எடை | | | | |
| 8 | | | | | உடல் நலம் | | | | |
| 9 | | | | | இரத்தப் பொருத்தம் | | | | |
| 10 | | | | | நிறுத்த காம வாயில் (தொல்) (ஆண்மை, பெண்மை வீரியம்) | | | | |
| 11 | | | | | நிறை | | | | |
| | | | | | B. ***உயிர் (ஆன்மீக) இயல் வகை*** | | | | |
| 1 | | | | | சமய நம்பிக்கை (பிறப்பு) | | | | |
| 2 | | | | | கடவுள் நம்பிக்கை | | | | |
| 3 | | | | | விரதம் | | | | |
| 4 | | | | | தியானம் | | | | |
| 5 | | | | | யோகம் | | | | |
| 6 | | | | | பூஜைகள் | | | | |
| 7 | | | | | அருள் தன்மை (தொல்) | | | | |
| 8 | | | | | மென்மைத் தன்மை (தொல்) | | | | |
| 9 | | | | | கலைப் பயிற்சிகள் | | | | |
| 10 | | | | | விரதப் பழக்கம் | | | | |
| 11 | | | | | சைவ உணவு முறை | | | | |
| 12 | | | | | அசைவ உணவு முறை | | | | |

| வ. எண். | மணமகன் பக்கம் பொருத்தம் | | | | பண்புகள் / நிலைகள் | மணமகள் பக்கம் பொருத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று | | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று |
| 13 | | | | | இந்தியப் பண்பாட்டு நம்பிக்கை | | | | |
| 14 | | | | | மேலை நாட்டு மோகம் | | | | |
| 15 | | | | | பிறர்க்கு உதவுதல் | | | | |
| 16 | | | | | அற உணர்வுகள் | | | | |
| 17 | | | | | பூஜை அறை உண்டா ? | | | | |
| | | | | | **C. *குடும்ப உறவுகள் (குடிமை – தொல்)*** | | | | |
| 1 | | | | | பாரம்பரிய நற்பண்புகள் | | | | |
| 2 | | | | | மணமக்கள் உறவு முறை | | | | |
| 3 | | | | | சுற்றம் தழுவும் ஒப்புரவு | | | | |
| 4 | | | | | நட்பு தழுவும் ஒப்புரவு | | | | |
| 5 | | | | | உடன் பிறப்பு ஒற்றுமைகள் | | | | |
| 6 | | | | | மக்கட் செல்வத் திட்டம் | | | | |
| 7 | | | | | தாய் வழி உறவை மதிக்கும் பண்பு | | | | |
| 8 | | | | | தந்தை வழி உறவை மதிக்கும் பண்பு | | | | |
| 9 | | | | | மனைவி வழி உறவை மதிக்கும் பண்பு | | | | |
| 10 | | | | | கணவன் வழி உறவை மதிக்கும் பண்பு | | | | |
| 11 | | | | | விட்டுக் கொடுக்கும் பண்புகள் | | | | |
| 12 | | | | | பெற்றோர் நல்ல கணவன் மனைவியரா | | | | |
| 13 | | | | | குடும்பப் பாச மரபு | | | | |
| | | | | | **D. *உலகியல் முறை*** | | | | |
| 1 | | | | | கல்வி – படிப்பு | | | | |
| 2 | | | | | டெக்னிகல் பயிற்சிகள் | | | | |
| 3 | | | | | பொது அறிவு | | | | |
| 4 | | | | | கம்ப்யூட்டர் பயிற்சி | | | | |
| 5 | | | | | நூல்கள் சேர்த்தல் | | | | |
| 6 | | | | | தொழில் | | | | |
| 7 | | | | | வணிகம் | | | | |

| வ. எண். | மணமகன் பக்கம் பொருத்தம் | | | | பண்புகள் / நிலைகள் | மணமகள் பக்கம் பொருத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று | | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று |
| 8 | | | | | உத்தியோகம் | | | | |
| 9 | | | | | வேளாண்மை | | | | |
| 10 | | | | | சுக வாசகம் | | | | |
| 11 | | | | | பரம்பரை அந்தஸ்து | | | | |
| 12 | | | | | போட்டித் தேர்வு வெற்றி | | | | |
| | | | | | ***E. செல்வ நிலை (திரு – தொல்)*** | | | | |
| 1 | | | | | சொந்த நிலம் | | | | |
| 2 | | | | | சொந்த வீடு | | | | |
| 3 | | | | | கார் / ஸ்கூட்டர் (வாகன வசதி) | | | | |
| 4 | | | | | போன் | | | | |
| 5 | | | | | கம்ப்யூட்டர் | | | | |
| 6 | | | | | செல் போன் | | | | |
| 7 | | | | | டிரைவிங் லைசன்ஸ் | | | | |
| 8 | | | | | அரசியல் பதவிகள் | | | | |
| 9 | | | | | நல்ல வேலை | | | | |
| | | | | | | | | | |
| | | | | | ***F. மனோதத்துவ ஆளுமை*** | | | | |
| 1 | | | | | முன்னேற்ற வேட்கை (குறள்) | | | | |
| 2 | | | | | கடின உழைப்பு (குறள்) | | | | |
| 3 | | | | | காலம் தவறாமை (குறள்) | | | | |
| 4 | | | | | இன்சொல் கூறல் (குறள்) | | | | |
| 5 | | | | | கடுஞ் சொல் இன்மை (குறள்) | | | | |
| 6 | | | | | அன்புடைமை (குறள்) | | | | |
| 7 | | | | | வெகுளாமை (குறள்) | | | | |
| 8 | | | | | அழுக்காறுடைமை (குறள்) | | | | |
| 9 | | | | | அவா மிகுதி (குறள்) | | | | |
| 10 | | | | | அவா இன்மை (குறள்) | | | | |
| 11 | | | | | கோப உணர்வு (குறள்) | | | | |
| 12 | | | | | வெகுளாமை (குறள்) | | | | |

| வ. எண். | மணமகன் பக்கம் பொருத்தம் | | | | பண்புகள் / நிலைகள் | மணமகள் பக்கம் பொருத்தம் | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று | | மிக நன்று | நன்று | சராசரி | நன்றன்று |
| 13 | | | | | பொழுது போக்கு | | | | |
| 14 | | | | | கலை உணர்வுகள் | | | | |
| 15 | | | | | கவிஞர் | | | | |
| 16 | | | | | எழுத்தாளர் | | | | |
| 17 | | | | | பேச்சாளர் | | | | |
| 18 | | | | | சாதனையாளர் | | | | |
| 19 | | | | | இனிய உறவுப் பண்புடையவர் | | | | |
| | | | | | ***G. பூகோள இயல் உறவுகள்*** | | | | |
| 1 | | | | | இந்திய அளவு | | | | |
| 2 | | | | | தமிழக அளவு | | | | |
| 3 | | | | | மாவட்ட அளவு | | | | |
| 4 | | | | | வட்ட அளவு | | | | |
| 5 | | | | | ஊர் அளவு | | | | |
| 6 | | | | | வெளி நாடு | | | | |
| | | | | | | | | | |
| | | | | | ***H. சோதிட வகை முக்கியம்*** | | | | |
| 1 | | | | | நட்சத்திரப் பொருத்தம் | | | | |
| 2 | | | | | கணப் பொருத்தம் | | | | |
| 3 | | | | | யோனிப் பொருத்தம் | | | | |
| 4 | | | | | ரஜ்ஜுப் பொருத்தம் | | | | |
| 5 | | | | | ராசிப் பொருத்தம் | | | | |
| | | | | | ***I. தோஷங்கள் இன்மை/அனுகூலங்கள்*** | | | | |
| 1 | | | | | ஜாதக அனுகூலங்கள் | | | | |
| 2 | | | | | யோக அனுகூலங்கள் | | | | |
| 3 | | | | | தெசா அனுகூலங்கள் | | | | |
| 4 | | | | | நட்சத்திரப் பொருத்தங்கள் | | | | |
| 5 | | | | | திருமண நாள் விசேஷம் | | | | |
| | | | | | ***முடிவை நீங்களே தீர்மானிக்கவும்*** | | | | |

# 33. செவ்வாய் தோஷம் திருமணத் தடை இல்லை

1. ஸ்ரீஅங்காரகன் என்று அழைக்கப்படும் செவ்வாய் பாபக் கிரகங்கள் வரிசையில் இடம் பெறுகிறது. அவர் நெருப்பு, இரத்தம் முதலிய ***காரகத்துவம்*** பெறுகிறார். பாபக் கிரகமான செவ்வாயினால், ஜாதகரின் தனம், சுகம், ***களத்திரம்***, ஆயுள் முதலியவற்றிற்கு ஆதிபத்திய ***அங்காரகனால்*** தீங்கு நேருமோ என்ற அச்சம் சோதிடர்கட்கும், மக்கட்கும் இருந்து வருகின்றது. இது தேவையற்றது.

2. பொது விதியால் செவ்வாய் தோஷத்தினால் வரும் குறைகள், பல சிறப்பு விதிகளால் அடிபட்டுப் போகின்றன என்பது சோதிட ஆய்வாளர்கள் கண்ட முடிவு. செவ்வாய் தோஷமுள்ள ஜாதகர் பலரின் வாழ்வு ஒரு விதக் கெடுதலும் இல்லாமல் மலர்ந்திருப்பதை நேரில் காண்கிறோம்.

3. நற்கோள்கள் எனப்படுகின்ற குரு, சுக்கிரன், புதன் போன்ற கிரகங்கள் கூட சில ஜாதகர்கட்கு சில போது அதிகமான கெடுதல்களைச் செய்வதுண்டு. அதனைப் பார்க்கச் செவ்வாயால் வரும் கேடு பெரிதில்லை.

4. ஜென்ம லக்கினத்துக்கு 2, 4, 7, 8, 12 ஆம் ராசிகளில் செவ்வாய் கிரகம், ஆட்சி, உச்சம், நீச்சமின்றி இருப்பது செவ்வாய் தோஷம் எனப்படும்.

***இந்த ராசிகள் செவ்வாய்க்குப் பகை அல்லது அஸ்தங்கதம் போன்ற. கெட்ட அமைப்புகள் கொண்டதாக அமைந்தால் அது. செவ்வாய் தோஷத்தினைக் கொடுக்கும்.***

**பரிகாரம் :**

01. மேற்கண்ட, 2, 4, 7, 8, 12 ஆம் ராசிகள் செவ்வாய்க்கு ஆட்சி வீடுகளான, மேஷம், விருச்சிகம் முதலியனவாக இருந்தாலும், நீச்ச வீடான கடகமாக அமைந்தாலும, உச்ச வீடான மகரமாக அமைந்தாலும், செவ்வாய் தோஷத்துக்குப் பரிகாரம் உண்டு என்பர்.

02. செவ்வாய் தோஷத்தைத் தரும் வகையில் இடம் பெற்றிருக்கும் செவ்வாய், குரு, சனி, ராகு, கேது ஆகிய ஒருவருடன் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்களுடன் கூடினாலும் அல்லது அவர்களால் பார்க்கப்பட்டாலும், செவ்வாய் தோஷத்துக்குப் பரிகாரம் உண்டு.

03. அ) பெண், ஆண் இருவருக்கும் செவ்வாய் தோஷம் இருந்தாலும், அல்லது

(ஆ) இருவருக்கும் இல்லாமலிருந்தாலும்

(இ) இருவருக்கும் இந்த தோஷம் இருந்து பரிகாகரம் விளைந்தாலும்

(ஈ) இருபாலரில் யாராவது ஒருவருக்குச் செவ்வாய் தோஷம் இருந்து மற்றவருக்கு இல்லாவிட்டாலும்

(உ) ஒருவருக்கு இருந்து, மற்றவருக்கு உள்ள தோஷத்துக்குப் பரிகாரம் விளைந்தாலும் அத்தகைய தம்பதிகட்கு திருமணம் செய்யக் கூடாது.

திருமணத்துக்குப் பின்னால் செவ்வாய் தோஷமுள்ள ஜாதகர், தோஷமில்லாத ஜாதகரைக் கொன்று விடும் என்பது பரிகாரங்களால் மாற்றப்படும்.

04. செவ்வாய் தோஷம் திருமணம் ***தடையை ஏற்படுத்துமே தவிர, வேறு எந்த வித தோஷத்தையும் விளைவிக்காது*** என, ***சுக்கிர நாடி சொல்கின்றது.***

05. செவ்வாய் தோஷ பரிகாரம் விளைந்திருந்தால், அச்செவ்வாய் தம்பதிகட்கு, எந்தவித தோஷத்தையும் விளைவிக்காது எனத் ***தேவ கோளம்*** என்ற சாத்திரம் கூறுகின்றது.

06. செவ்வாய் ஜென்ம காலத்தில், மேஷம், ரிஷபம், கடகம், சிம்மம், தனுசு, மகரம், கும்பம் ஆகிய ஏழு ராசிகளில் எங்கிருந்தாலும், அந்த ஜாதகருக்கு செவ்வாய் தோஷ பாதிப்பு இல்லை எனத் திடமாக நம்பலாம் என்பது நூலோர் கருத்து.

07. இதர வீடுகளில், இடம் பெறும், செவ்வாய் கிரகத்துடன், குரு. சூரியன், புதன் இவர்களில் ஒருவர் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் சகிதம் பெற்றிருந்தால் செவ்வாய் தோஷம் நீங்கி விடுகிறது என நூலோர் நவில்வர்.

08. கடகம், சிம்மம் ஆகிய லக்கினங்களில் பிறந்தவர்கட்குச் செவ்வாய் எந்த வீட்டில் இருந்தாலும், தம்பதியருக்குச் செவ்வாய் தோஷம் இல்லை என்றே நம்பலாம் என்பதும் நூலோர் கூற்று.

09. பொது விதிப்படி, ஒரு ஜாதகத்தில் செவ்வாய் இரண்டாம் இடத்தில் இருந்தால் அது செவ்வாய் தோஷ ஜாதகம் தான். ஆனால் சிறப்பு விதிப்படி, மீன லக்கினக்காரர்கட்கும், துலா லக்கினக் கா்ரர்கட்கும் செவ்வாய் தோஷம் ஏற்படுத்தாது.

10. பொது விதிப்படி, லக்கினத்திற்கு நான்காமிடமான, சுப ஸ்தானத்தில், செவ்வாய் இருந்தால் தோஷம் தான். ஆனால் சிறப்பு விதிப்படி கும்ப லக்கின ஜாதகர்கட்கு, நான்காமிடமான ரிஷபத்தில் செவ்வாய் இருந்தாலும், கடக லக்கின ஜாதகர்கட்கு நான்காமிடமான துலாத்தில் செவ்வாய் இருந்தாலும் தோஷம் இருக்காது.

பொது விதிப்படி, லக்கினத்துக்கு எட்டாமிடத்தில் செவ்வாய் இருந்தால், செவ்வாய் தோஷம் என்பர். சிறப்பு விதிப்படி, லக்கினம் கும்பமாகி, எட்டாமிடமான கன்னியில் செவ்வாய் இருந்தால் தோஷம் இருக்காது.

பொது விதிப்படி, லக்கினத்திற்குக் களத்திர ஸ்தானமான, ஏழாமிடத்தில் செவ்வாய் இருந்தால் தோஷம். சிறப்பு விதிப்படி, துலா லக்னத்தில் பிறந்தவர்க்கு ஏழாமிடமான மேஷத்தில் செவ்வாய் இருந்தால் தோஷமாகாது.

அது போன்றே, மகர லக்கினத்தில் பிறந்து ஏழாமிடமான கடகத்தில் செவ்வாய் இருந்தாலும் தோஷமாகாது.

ரிஷப லக்கினத்தில் பிறந்து, ஏழாமிடமான விருச்சிகத்தில் செவ்வாய் இருந்தாலும் தோஷமாகாது.

இவை இன்றி, எந்த இடத்தில் இருந்து செவ்வாய் தோஷமானாலும், அந்த இடம் சூரிய சந்திரர்களின் ராசியான, சிம்மம், கடகமானால் செவ்வாய் தோஷம் கிடையாது.

மேலும் சர ராசிகள் என்று சொல்லப்பட்ட மேஷம், கடகம், துலாம், மகரம் முதலிய இடங்கள் ஒன்றில் செவ்வாய் இருந்து, அவ்விடம் பொது விதிப்படி தோஷம் எனக் கூறப்பட்டாலும் சிறப்பு விதிப்படி அது தோஷமாவதில்லை.

பொது விதிப்படி தோஷம் உள்ள இடத்தில், செவ்வாய் இருந்து. அவருடன் சனி சேர்ந்தாலும், அல்லது சனி செவ்வாயைப் பார்த்தாலும், செவ்வாய் தோஷம் விலகி விடும் என்பது சிறப்பு விதி.

செவ்வாயை குரு பார்த்தாலும், செவ்வாயுடன் சேர்ந்தாலும் தோஷ நிவர்த்தியாகும் எனும் கருத்து ஒன்று ஆய்வுக்குரியதாக உள்ளது.

***குரு, தான் பார்த்த இடமெல்லாம் விருத்தி செய்யும் குணம் உடையவர். தோஷப்பட்ட செவ்வாயைப் பார்த்தால் செவ்வாய் தோஷம் விருத்தி அடையும்*** என்பது ஒரு கருத்து. விருத்தி என்பது செவ்வாய் தோஷத்தைக் குறைக்கும் என்பது இன்னொரு கருத்து.

சனி பகவானுக்குத் தான் பார்த்த இடமெல்லாம், கெடுக்கும் ஒளி உண்டென்பர். எனவே, தோஷப்பட்ட செவ்வாயை, சனி பார்த்தால் தோஷ நிவர்த்தியாகும் என்பர்.

செவ்வாய் தெசை ஜாதகருக்கு ஏற்கனவே முடித்திருந்தால் செவ்வாய் தோஷ பிரச்சினைக்கு இடம் இல்லை என்பது மரபு.

ஜாதகத்தில் அமையும் நல்ல யோக பாவங்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, ***சிறப்பு விதிகளின்படி செவ்வாய் தோஷம் என்பது தானாக நிவர்த்தியாகி விடுகின்றது என்பது முதிர்ந்த சோதிடர்களின் ஆய்வு முடிவு.***

***மனிதனைப் படைத்த இறைவன் அவனை வாழ வைக்கத் தான் விரும்புகிறானே அன்றி, கெடுதல் செய்ய நினைக்கச் செவ்வாய் தோஷம் ஏற்படுத்த வழியே இல்லை.***

"எல்லாம் செயல் கூடும்
என்னாணை அம்பலத்தே
வல்லான் தனையே வாழ்த்து"

அடுத்து, செவ்வாய் தோஷம் இல்லை என்பதற்கான விசேஷ விதிகளை ஒரு அட்டவணையில் காண்போம்.

## செவ்வாய் தோஷம் :

ஆண், பெண் இருவர் ஜாதகங்களிலும் லக்னம், சந்திரன் இம்மூவர் இடங்களுக்கு 2, 4, 7, 8, 12 ஆகிய இடங்களில் செவ்வாய் இருந்தால் தோஷம் எனப் பொதுவாகக் கருதப்படும். செவ்வாய் தோஷம் ஆண் பெண் ஜாதகங்களில் ஒருவருக்கு இருந்து, மற்றொருவருக்கு

இல்லாமல் இருந்தால் அவைகளைச் சேர்க்கக் கூடாது என்பது சாதாரண பொது விதி. சில முக்கிய ஜோதிட சாஸ்திரங்களில் தோஷ பரிகாரமாக அநேக காரணங்கள் காணப்படு கின்றன. பரிகாரம் எதுவுமே இல்லை என்றால் அந்த ஜாதகத்தைச் சேர்க்கக் கூடாது. ஆண், பெண் இருவருக்கும் மேற்படி தோஷம் இருந்தால் சேர்க்கலாம்.

## செவ்வாய் தோஷம் பற்றிய விசேஷ விதிகள்

### பின்வரு நிலைகளில் செவ்வாய் தோஷம் இல்லை

1. செவ்வாய் ஆட்சி, உச்சம், நீசம் பெற்றிருந்தால் — செவ்வாய் தோஷம் இல்லை
2. செவ்வாய் குரு சேர்ந்திருந்தாலும் அல்லது குரு பார்த்தாலும — செவ்வாய் தோஷம் இல்லை
3. இரண்டாம் இடத்து செவ்வாய் மிதுனம், கன்னியாகில் — செவ்வாய் தோஷம் இல்லை
4. நான்காம் இடத்து செவ்வாய் மேஷம், விருச்சிகமாகில் — செவ்வாய் தோஷம் இல்லை
5. ஏழாம் இடத்து செவ்வாய் கடகம், மகரமாகில் — செவ்வாய் தோஷம் இல்லை
6. எட்டாம் இடத்து செவ்வாய் தனுசு, மீனமாகில் — செவ்வாய் தோஷம் இல்லை
7. பன்னிரண்டாம் இடத்து செவ்வாய் ரிஷப, துலாமாகில் — செவ்வாய் தோஷம் இல்லை
8. சிம்ம, கும்பத்தில் செவ்வாய் இருந்தால் — செவ்வாய் தோஷம் இல்லை
9. செவ்வாய் சந்திரன் சேர்ந்து இருந்தால் — செவ்வாய் தோஷம் இல்லை
10. செவ்வாய் புதனுடன் சேர்ந்தாலும், புதன் பார்த்தாலும் — செவ்வாய் தோஷம் இல்லை
11. செவ்வாய் சூரியனுடன் சேர்ந்தாலும், சூரியன் பார்த்தாலும் — செவ்வாய் தோஷம் இல்லை

12. செவ்வாய் சனி ராகு, கேது இவர்களுடன்
    கூடியாவது இவர்களால் பார்க்கப்-
    பட்டாலாவது — செவ்வாய் தோஷம் இல்லை

13. செவ்வாய் இருக்கும் ராசியின் அதிபதி
    லக்னத்திற்கு 1, 4, 5, 7, 9, 10
    இவைகளில் எங்கு
    இருந்தாலும் — செவ்வாய் தோஷம் இல்லை

14. செவ்வாய் தனது உச்ச வீடான
    மகரத்திலோ சொந்தவீடான
    மேஷ, விருச்சிக
    ராசிகளில் இருந்தால் — செவ்வாய் தோஷம் இல்லை

15. 8ம் இடம், 12-ம் இடமுள்ள
    செவ்வாய் இருக்கும் ராசி
    மேஷம், சிம்மம்,
    விருச்சிகம், மகரமாகில் — செவ்வாய். தோஷம் இல்லை

16. செவ்வாய் தன் மித்திரர்களான
    சூரியன் சந்திரன், குரு இவர்கள்
    வீட்டில் அதாவது சிம்மம்,
    கடகம், தனுசு, மீனம் இந்த
    ராசிகளில் இருந்தால் — செவ்வாய் தோஷம் இல்லை

17. செவ்வாயுடன் சந்திரன் சேர்ந்திருந்தாலும், பார்த்தாலும், செவ்வாய் தனியாக கும்ப, சிம்ம ராசியில் இருந்தாலும் பரிகாரமுண்டு.

அ. ஒரு ஆணுக்கும், பெண்ணுக்கும் திருமணம் நிச்சயிக்கப்படுவது தெய்வ சங்கல்பமே தவிர, மனித முயற்சிகளோ, பிரயத்தனங்களோ, ஜோதிடம் பார்ப்பதோ அல்ல இவைகள் நம் மனத்திருப்திக்குத் தான்.

ஆ. திருமணம் நடந்து, வாழ்க்கைப் பாதை நன்கு அமைவது இறைவன் ஏற்படுத்திய விதிப்படிதான் என்பதனை கண்கூடாகப் பார்க்கலாம்.

இ. விவாஹம் விதி பூர்வஹம்.

**செவ்வாய் தோஷ பயத்தை மறந்து விடுங்கள்.**

# 34. பன்னிரண்டு பொருத்த விழுக்காட்டு முறை

***விழுக்காட்டு மதிப்பீடு***

ஓர் ஆசிரியர் பன்னிரண்டு பொருத்தங்கட்கும் உத்தேசமாக மடங்கு மதிப்புக் குறியீடு நிர்ணயித்து மொத்தம் ஐம்பது மதிப்பெண் வருவது போல வகுத்துள்ளார். இது ஒரு அரிய முயற்சி. அதை நாம் சதவிகிதத்தில் மாற்றியுள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. தினம் | 6 % | 6. ராசி | 14 % |
| 2. கணம் | 12 % | 7. ராசியதிபதி | 4 % |
| 3. மாகேந்திரம் | 8 % | 8. வசியம் | 4 % |
| 4. ஸ்திரீ தீர்க்கம் | 6 % | 9. ரஜ்ஜு | 14 % |
| 5. யோகி | 8 % | 10. வேதை | 6 % |
| | | 11. நிர்ணயம் | 2 % |
| | | 12. நாடி | 16 % |
| | | | 100 % |

2. இதே மதிப்பீட்டு முறையை ஏற்ற மதிப்பு வரிசையில் கீழே தருகிறோம்.

| | | |
|---|---|---|
| 1 | நாடி | 16 % |
| 2. | ராசி | 14 % |
| 3. | ரஜ்ஜு | 14 % |
| 4. | கணம் | 12 % |
| 5. | மாகேந்திரம் | 8 % |
| 6. | யோனி | 8 % |
| 7. | நட்சத்திரம் தினம் | 6 % |
| 8. | ஸ்திரீ தீர்க்கம் | 6 % |
| 9. | வேதை | 6 % |
| 10. | ராசியதிபதி | 4 % |
| 11. | வசியம் | 4 % |
| 12. | நிர்ணயம் | 2 % |
| | | 100 |

3. இந்தக் குறியீட்டு மதிப்பைக் கொண்டு 25 % வந்தால் உத்தமம்.
60 % க்கு மேல் வந்தால் மிக உத்தமம்.

எவ்வளவு அதிக மதிப்பெண் வந்தாலும் ரஜ்ஜுவும் வேதையும் கூடி வரவில்லை என்றால் அந்த ஜாதகம் பொருத்தமில்லை என நிராகரிக்கப்பட வேண்டும்.

4. குறிப்பிட்ட பொருத்தம் இருந்தால் அதற்குரிய மதிப்பெண் போட்டுக் கொள்ளலாம்.

# 35. பெண் நட்சத்திரத்துக்குப் பொருத்தமான ஆண் நட்சத்திரங்கள்

| திருமண நட்சத்திரப் பொருத்த அட்டவணை – 36 | | | |
|---|---|---|---|
| எண் | பெண் நட்சத்திரங்கள் | மிகப் பொருத்தமானவை ஆண் நட்சத்திரங்கள் | பொருத்தமானவை ஆண் நட்சத்திரங்கள் |
| 1 | அசுவதி (மேஷம்) | 1. பூராடம்<br>2. பூரம்<br>3. திருவோணம்<br>4. சுவாதி<br>5. பரணி<br>6. சதயம் | 1. அனுஷம்<br>2. பூசம்<br>3. ரோகிணி |
| 2 | பரணி (மேஷம்) | 1. உத்திராடம் (தனுசு)<br>2. பூரட்டாதி (கும்பம்)<br>3. உத்திராடம் (மகரம்)<br>கேட்டை<br>உத்திரம் (சிம்மம்)<br>4. புனர்பூசம் (கடகம்)<br>சித்திரை (துலாம்)<br>5. விசாகம் (துலாம்)<br>6. புனர்பூசம் (மிதுனம்)<br>7. மிருகசீரிஷம் (மிதுனம்)<br>8. அவிட்டம் (கும்பம்)<br>9. அவிட்டம் (மகரம்) | 1. கார்த்திகை (மேஷம்)<br>2. ஆயில்யம்<br>3. மிருகசீரிஷம் (ரிஷபம்) |
| 3 | கார்த்திகை (மேஷம்) | 1. அசுவதி<br>சதயம்<br>2. உத்திரட்டாதி<br>3. மூலம்<br>4. சுவாதி<br>5. பூசம்<br>மகம்<br>6. திருவாதிரை<br>7. திருவோணம் | 1. அனுஷம் |
| 4 | கார்த்திகை (ரிஷபம்) | 1. சதயம்<br>2. அசுவதி, அனுஷம்<br>3. சுவாதி<br>4. பூசம், திருவோணம்<br>5. மகம் | 1. உத்திரட்டாதி<br>2. ஹஸ்தம்<br>3. ரோகிணி |

| திருமண நட்சத்திரப் பொருத்த அட்டவணை | | | |
|---|---|---|---|
| எண் | பெண் நட்சத்திரங்கள் | மிகப் பொருத்தமானவை ஆண் நட்சத்திரங்கள் | பொருத்தமானவை ஆண் நட்சத்திரங்கள் |
| 5 | ரோகிணி<br>(ரிஷபம்) | 1. பூரட்டாதி<br>2. பரணி<br>3. மிருகசீரிஷம்<br>4. அவிட்டம்<br>5. கேட்டை<br>6. ரேவதி<br>7. பூரம், சித்திரை (கன்னி)<br>8. விசாகம் (விருச்சிகம்)<br>9. விசாகம் (துலாம்) | 1. பூராடம்<br>2. சித்திரை (துலாம்)<br>3. ஆயில்யம் |
| 6 | மிருகசீரிஷம்<br>(ரிஷபம்) | 1. அசுவதி<br>2. உத்திராடம் (மகரம்)<br>உத்திரட்டாதி<br>3. சதயம்<br>4. சுவாதி<br>கார்த்திகை (மேஷம்)<br>5. அனுஷம்<br>6. உத்திரம், பூசம்<br>7. மகம் | 1. கார்த்திகை (ரிஷபம்)<br>மூலம்<br>உத்திராடம் (தனுசு)<br>2. திருவாதிரை |
| 7 | மிருகசீரிஷம்<br>(மிதுனம்) | 1. திருவாதிரை<br>2. உத்திரட்டாதி<br>3. அசுவதி<br>4. உத்திராடம் (மகரம்)<br>5. சதயம்<br>கார்த்திகை (ரிஷபம்)<br>6. உத்திராடம் (தனசு)<br>உத்திரம் (கன்னி)<br>சுவாதி<br>7. மூலம்<br>உத்திரம் (சிம்மம்)<br>கார்த்திகை (மேஷம்)<br>8. அனுஷம்<br>9. மகம்<br>10. பூசம் | |

## 22. அஷ்டக வர்க்கப் பொருத்தம்

பெண் ஜாதகத்தில் சந்திர அஷ்டவர்க்கத்தில் பிந்துக்கள் அதிகம் உள்ள ராசிகளில் பிறந்த புருஷனை மற்ற பொருத்தங்கள் இருந்தால் தேர்ந்தெடுப்பது உத்தமமாகும். இதே போல் ஆண் ஜாதகத்தில் சந்திர அஷ்ட வர்க்கத்தில் பிந்துக்கள் அதிகமுள்ள ராசியில் ஜனித்த பெண் சுபப் பொருத்தமுள்ளவளாவாள்.

**குறிப்பு :** ***சில புத்தகங்களில் " ஏழாமிடத்தோன் அஷ்டவர்க்கத் திலிருந்தும்", என்றும், இன்னும் சில புத்தகங்களில் "சுக்கிரனது அஷ்டவர்க்கத்திலிருந்தும்", என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிகம் பிந்துக்கள் என்பது ஐந்தும் அதற்கு மேற்பட்டதுமான பிந்துக்களை குறிக்கும்.***

## 23. இலாப நஷ்டப் பொருத்தம்

வதூ பிறந்த நட்சத்திரத்திலிருந்து, வரன் பிறந்த நட்சத்திரம் வரை எண்ணி அதை 5ஆல் பெருக்கி, 7ஆல் வகுத்தால் பாக்கி இருப்பது நஷ்டத்தைக் குறிக்கும். மீதம் பூஜ்யம் வந்தால் அதை 7 என்று எடுத்துக் கொள்ள வேண்டும். அதே போல் வரன் பிறந்த நாள் முதல் வதூ பிறந்த நாள் வரை எண்ணியதை 5 ஆல் பெருக்கி 7 ஆல் வகுத்து, மீதி வருவது இலாபமாகும். மீதி பூஜ்யம் வந்தால் அதை 7 ஆக எடுத்துக் கொள்ள வேண்டும். பொருத்தம் பார்க்கும் பொழுது இலாபம் அதிகமாகவும் நஷ்டம் குறைவாகயும் இருக்கும் ஜாதகங்களை நன்றாகப் பொருத்தம் உள்ளவையாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

**குறிப்பு :** ***சில நூல்களில் வதூ நட்சத்திரம் முதல் வரன் நட்சத்திரம் வரை என்பதற்கு பதிலாக அசுவனி முதல் எண்ண வேண்டுமென்று எழுதப்படிருக்கிறது.***

## 24. ரிஷிப் பொருத்தம்

அசுவதி முதல் அபிசித் உட்பட 28 நட்சத்திரங்கட்கு முறையே மரிசி, வசிஷ்டன், ஆங்கிரசன், அத்திரி, புலத்தியன், புகாள், கிரது இவர்கள் ரிஷிகள் ஆவார்கள். ஒரே ரிஷியின் கோத்திரத்தில் பிறந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் செய்விக்கக்கூடாது.

**குறிப்பு :** ***அசுவதி - மரிசியுடையது, பரணி - வசிஷ்டனுடையது. இப்படிப் பார்த்தால் ஒவ்வொரு ரிஷிகளுக்கும் 4 நட்சத்திரங்கள் முறையே வரும்.***

***உதாரணம்*** : ரோகிணி, பூரம், கேட்டை, சதயம் இவை அத்திரி கோத்திரமாகும். மாத்வியத்தில் ஜன்ம நட்சத்திரத்திலிருந்து மட்டும் தான் ரிஷிப் பொருத்தம் எண்ணப்பட வேண்டுமென்று சொல்லவில்லை. அதில் லக்கினம் என்பதைக் குறிப்பதற்கு பா(பி) என்ற வார்த்தை சேர்க்கப்பட்டிருக்கிறது. எனவே ஆண் பெண் இருவரது லக்கின நட்சத்திரங்கள் ஒரே கூட்டத்தில் வரக்கூடாது என்பது தான் பொருள்.

## 25. நாட்டுப் பொருத்தம்

அசுவதி நட்சத்திரம் முதல் வரன் ஜனித்த நக்ஷத்திரம் வரை எண்ணி, அதே போல் அசுவதி முதல் பெண் ஜனித்த நட்சத்திரம் வரை எண்ணி இரண்டையும் ஒன்றாகக் கூட்டி, அத்துடன் 13ஐயும் கூட்டி, மொத்தத்தில் 32ஐக் கழித்து மீதியை 5ஆல் வகுத்தால், ஈவு போக, மீதம் 1 வந்தால் ***புத்திரப்பிராப்தி*** உண்டாகும். 2 வந்தால் ***கணவனுக்குக் கெடுதல்***, 3 வந்தால் பண வரவும் சொத்துக்களும் உண்டாகும். 4 வந்தால் ***உடல் நலக் குறைவு உண்டாகும்***, மற்றும் 5 வந்தால் எல்லா வகையிலும் ***நன்மை*** உண்டாகும்.

குறிப்பு : *இது பெண் ஜாதகத்திற்குத் தான் பொருத்தம்*

**உதாரணம் : வரன் நட்சத்திரம் திருவோணம், வதூ நட்சத்திரம் பூசம் என்று வைத்துக் கொள்வோம். அப்படியானால் அசுவதி முதல் ஆண் நட்சத்திரம் 22 ஆகிறது. பெண் நட்சத்திரம் 8 ஆகிறது. இரண்டும் சேர்ந்து 30 அத்துடன் 13ஐக் கூட்டி 32ஐக் கழிக்க வேண்டும். 43-32-11. இதை 5 ஆல் வகுத்து பார்க்க வருவது 1. எனவே இவர்கட்குத் திருமணம் செய்வித்தால் குடும்பத்தில் நன்மையுண்டாகும்.**

ஆனால் மற்ற பொருத்தங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும்.

## ஆ) நாட்டுப் பொருத்தம் (இரண்டாம் முறை)

பெண் நட்சத்திரம் முதல் அசுவதி வரையில் எண்ணி, அதே போல் ஆண் நட்சத்திரம் முதல் அசுவதி வரை எண்ணி இரண்டையும் கூட்டி, அது 13ஐக் குறைத்து மீதியை 5 ஆல் வகுக்க ஈவு போக மீதி 1 வந்தால் ***ஐஸ்வர்யம்***, 2 வந்தால் வாழ்க்கையில் ***முன்னேற்றமும்***, சுக ஜீவனமும், 3 வந்தால் ***துர் மரணம்***, 4 வந்தால் ***எதிர்பாராத பண வரவும்*** சொத்துக்களும் கிடைக்கும். 5 வந்தால் ***கலகம்*** உண்டாகும்.

**உதாரணம்** : பெண் நட்சத்திரம் பூசம் என்றும் ஆண் நட்சத்திரம் திருவோணம் என்றும் வைத்துக் கொள்வோம். பெண் நட்சத்திரத்திலிருந்து 21ஆம் நட்சத்திரம் மகரம் ஆண் கூட்டத்திலிருந்து அசுவதி வரை 7ஆம் நட்சத்திரம் ஆகும். 21 + 7 = 28 ஆகும். அதிலிருந்து 13ஐக் குறைத்தோமானால் மீதி வருவது 15 அதை 5ஆல் வகுத்தால் ஈவு 3, மீதி 0 ஆகும். அப்படி வரும் பொழுது மீதியை 5 என்றே எடுத்துக் கொள்ள வேண்டும். 5 மிச்சம் வந்தால் கலகம் என்பது பலனாகும். இப்படிப் பார்க்கும் பொழுது முதலில் எழுதிய முறைப்படி பூசம் மற்றும் திருவோணத்திற்குப் பொருத்தம் இருக்கிறது. ஆனால் 2வது முறைப்படி பொருத்தமில்லை. இது ஒரு முரண்பாடாகத் தோன்றும். ஆனால் பொருத்தத்திற்கு உண்மையில் அது முரண்பாடல்ல. ஏனென்றால் முதலில் சொன்னது முதன் முதல் திருமணம் பொருத்தத்திற்கு ஒப்புக் கொள்ளப்பட்டதாகும். இரண்டாவது சொன்னது இரண்டாவதாக திருமணத்திற்கு ஒப்புக் கொள்ளப்பட்டதாகும்.

## 26.·இரேகைப் பொருத்தம்

இது ஆண், பெண் இருவரது உள்ளங்கையில் நிறம் மற்றும் கைகளிலுள்ள விசேஷ ரேகைகளின் அடிப்படையில் நிச்சயிக்கப் படுவதாகும். வதுவின் உள்ளங்கை இளம் சிகப்பு நிறமாகவோ, மஞ்சள் கலந்த சிகப்பு நிறமாக இருக்குமானால், வரனது உள்ளங்கை சிகப்பு நிறமாக இருப்பது அவசியம். ஆனால் இவற்றில் ஒன்று இளம் நீல நிறமாக இருக்குமானால் இருவருக்குமே அந்த நிறம் உள்ளங்கையில் இருந்தால் அன்றித் திருமணம் செய்விக்கக்கூடாது. இரண்டாவதாக, ஒருவர் கையில் இருக்கும் ரேகைகட்கு, நேர்மாறான ரேகைகள் வதூ அல்லது வரன் கையில் இருக்குமானால் திருமணப் பொருத்தம் இல்லை என்று சொல்லலாம்.

**குறிப்பு** : (1) இதைச் சாமுத்திரிகா பொருத்தம் என்று சொல்வதுண்டு. முன் காலத்தில் ஒரு கிராமத்திற்குள்ளோ, சமுதாயத்திற்குள்ளே தான் திருமணங்கள் நடக்கும். ஆனால் இப்பொழுதோ பலவிதமான திருமணங்கள் நடக்கின்றன. எனவே ஜாதகப் பொருத்தமே பார்க்க வேண்டாம் என்று சொல்லும் இந்த நாளில் சாமுத்திரிகா பொருத்தம் பார்க்க யார் தான் ஒப்புக் கொள்ளப் போகிறார்கள்? ஆனால் சாமுத்திரிகா பொருத்தம் பார்த்தால், சாரீரிகமாகவும், மானசீகமாகவும் கணவன் மனைவியிரிடையே ஒற்றுமையும் சுகமும் உண்டாகும். உதாரணமாக,

பெண்கள் உள்ளங்கையில் இளம் சிவப்பான தோற்றம் இருக்குமானால் அவளது இரத்தத்தில் சுத்தி இருக்கிறது என்று பொருள். ஆனால் அதில் சற்று மஞ்சள் கலந்திருந்தால், அவளுக்கு மாதவிடாய்க் கோளாறு இருக்கிறது என்று கண்டிப்பாகக் கூறலாம். அவளது உள்ளங்கையில் நீல நிறக்கோடுகளோ, புள்ளிகளோ இருக்குமானால் அவளுக்குப் பரம்பரையாகச் சில வியாதிகள் உண்டு என்று கூறலாம். புறங்கை, ஆமையின் மேல் பகுதி போல் இருக்குமானால் மற்றும் நகங்கள் சிறிதாக இருக்குமானால் அவள் மனோ வலிமையுள்ளவளென்றும் சுகப் பிரசவம் உண்டாகுமென்றும் சொல்லலாம். எனவே மேல் எழுதியபடி கையில் ஒன்றுக்கொன்று பொருத்தமுள்ள நிறங்கள் இருக்குமானால், அவர்களுக்குள் சிநேகமும் அன்யோன்யமும், ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ளும் தன்மையும், கடவுள் அருளும், பரிபூர்ணமாக இருக்கும். இவற்றைத் தவிர வதூ கையில் சங்கு, மீன், சுவஸ்திகை, கோதுமை, சக்கரம், யானை, தாமரைப்பூ இவற்றில் ஏதாவது இருந்து வரன் கையில் தராசு, அரிவாள், அங்குசம், தீப்பொறி, தேள், தலைகீழாக இருக்கும் சூலம், இடக்கண்ணின் உருவம் இவையெல்லாம் இருந்தால் அவை வதுவின் சுபயோகங்களைப் பலமற்றதாக ஆக்கிவிடும். ஆனால் இன்றைய சூழ்நிலையில் ஜாதகம் பலமற்றதாக ஆகிவிடும். ஆனால் இன்றைய சூழ்நிலையில் ஜாதகம் இல்லாதவர்கட்காவது இப்படிப்பட்ட பொருத்தங்களைப் பார்த்து திருமணம் செய்வித்தால் ஓரளவிற்கு திருமண வாழ்வு சந்தோஷகரமாக இருக்கும்.

**குறிப்பு (௨)** சாதாரணமாகத் திருமணங்களைப் பொருத்தம் பார்த்து செய்வது தான் நல்லது. ***அப்படி முடியாத சூழ்நிலையில், தெய்வ சம்மதத்துடன் ஆவது, திருமணம் செய்விப்பது சாஸ்திரத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.*** இத்தனை பொருத்தங்கள் சொல்லி இருந்தால் கூட இவற்றில் மாகேந்திரம், யோனி, தினம், ராசி, ராசி அதிபதி மற்றும் ரஜ்ஜு ***இவை முக்கியமாகப் பார்க்கப்பட வேண்டும்.*** மற்ற பொருத்தங்களைப் இரண்டாம் பட்சமாக எடுத்தால் போதும். ரிஷி பொருத்தம் பிராமணர்கட்கு முக்கியம் என்றும், மற்ற இனத்தினருக்கு வருணப் பொருத்தம் முக்கியம் என்றும் சொல்லி இருக்கிறது.

